"ஸ்ரீ சங்கர க்ருபா அனுபந்தம்"
21-5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-१८








# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 18

அகில பாரத் சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–१८



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 18

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்

1965





| | |
|---|---|
| ஸதாசாராநுஸந்தானம் | 1— 46 |
| நிர்குணமாநஸ பூஜா | 47— 68 |
| லகுவாக்ய விருத்தி | 69— 91 |
| பிரௌடாநுபூதி | 92—121 |
| சுலோகாநுக்ரமணிகை | i—iii |



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத்தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் இது 18-வது மலர். இதில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளிய கிரந்தங்களில் ஸதாசாரானுஸந்தானம், நிர்குணமானஸ பூஜை, லகுவாக்ய விருத்தி, பிரௌடானுபூதி என்ற நான்கு பிரகரணங்களும் வழக்கம்போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

1. ஸதாசாரானுஸந்தானம்: தர்ம சாஸ்திரங்களில் ஆஹ்னிக ப்ரகரணத்தில் நாம் அனுஷ்டிக்கவேண்டிய ஸ்தாசாரங்களெல்லாம் கூறப்பட்டுள்ளன. எல்லாவற்றையும் பரித்யாகம் செய்து ப்ரஹ்மத்திலேயே ஈடுபட்ட ஞானிக்கும் ப்ராதஸ்மரணம் முதலான ஸதாசாரங்களை இங்கு காட்டுகிருர். ஆனுல் சரீரத்தால் செய்யப்பட வேண்டியவை அந்த ஸதாசாரங்கள். ஞானியின் ஸதாசாரங்களோ தன் நிலையை விட்டு அசையாமலேயே மனதால் அனுஸந்தானம் செய்வதுதான். ஞானி எல்லாக் கர்மாக்களையும் விட்ட போதிலும் இந்த ப்ரஹ்மானுஸந்தான மஹிமையால் இவன் ஸதாசாரஸம்பன்னனுகவும், மஹாசிஷ்டராகவும், ப்ரஹ்மசாரியாகவும், கிருஹஸ்தனுகவும், வானப்ரஸ்தனுகவும், ஸந்யாஸியாகவும் ஆகின்ருன் என்பது இதில் தெளிவாக்கப் பட்டிருக்கிறது. இந்த நிலையை அடைவதற்கு உபாயமும் இதில் கூறப்பட்டுள்ளது.

2. நிர்குணமாநஸ பூஜா: ஸதாசாரங்களில் ஒன்ருன பூஜை என்பது தியானம், ஆவாஹனம் முதலான பல பிரிவுகள் அடங்கியது. ஆத்மஞானி அனுஷ்டிக்கும் பூஜாவிதியை இதில் கூறுகிருர்.

3. லகு வாக்யவிருத்தி: 18 சுலோகங்கள் கொண்ட இச்சிறிய நூலில் மஹா வாக்யங்களின் தாத்பர்யமான ஜீவப்ரஹ்மைக்யத்தை நன்கு நிரூபணம் செய்கிருர். இதைக்

காட்டிலும் சற்று விரிவான வாக்யவிருத்தி என்ற நூலின் கருத்துக்களை 13வது மலரில் காணலாம்.

4. ப்ரௌடானுபூதி: மஹாவாக்யம் மூலமாக ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்று ஜீவன் முக்தி நிலையில் இருக்கும் ஓர் மஹான் தன்னுடைய ஞானனந்த நிலையை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது இந்நூல்.

இந்நான்கு நூல்களும் உருவத்தில் சிறியவைகளாக இருந்தபோதிலும் ஏராளமான கருத்துக்கள் உள்ளடங்கி யுள்ளன. இவைகளையெல்லாம் மிகத் தெளிவாகவும் யாவரும் சுலபமாக அறிந்துகொள்ளும் ரீதியில் இவை களுக்கு பதவுரை, பொழிப்புரை, விரிவுரைகளை எழுதித் தந்து உதவிய ப்ரஹ்மஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களுக்கு நம் ஸமிதியின் சார்பில் கிருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நமக்கு எப்பொழுதும் எல்லாவிதங்களிலும் அருள் பாலித்து வரும் ஸ்ரீ தக்ஷிணாம்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்களின் திவ்ய சரணாரவிந்தங்களில் பக்தி ப்ரணமபுரஸ்ஸரமாக இந்த ஸமர்ப்பணம் செய்கிறோம்.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக் கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

॥ श्रीः ॥

# ॥ सदाचारानुसंधानम् ॥

## ஸதாசாராநுஸந்தானம்

[தர்ம சாஸ்திரங்களில் ஆஸ்திகனை மனிதன் பிரதிதினம் செய்யவேண்டிய கடமைகள் என்னவென்று மிகவும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. காலையில் எழுந்தவுடன் பகவானை தியானம் செய்துவிட்டு, சரீர சுத்தி செய்துகொண்டு ஸ்நாநம் செய்து ஸந்த்யோபாஸனை, ஹோமம், தேவபூஜை முதலானதுகள் செய்த பிறகு, போஜனம் செய்யவேண்டியது என்றும், பிரஹ்மசாரி, கிருஹஸ்தன், வானப்பிரஸ்தன் ஸன்யாஸி என்ற முறையில் ஆசிரமங்களை கிரஹித்துக்கொண்டு அததற்குரிய தர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு, தத்வவிசாரம் செய்து, ஞானமடைந்து கிருதார்த்தனுக வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளே ஸத்துக்கள் என்கிற ஸாதுக்கள் அனுஷ்டிக்கும் முறையானதினால் ஸதாசாரம் எனப்படும். ஸகல கர்மாக்களையும் பரித்யாகம் செய்து, ஸன்யாஸியாகி குருவையடைந்து தத்வோபதேசம் பெற்று, மனனிதித்யாஸன மார்க்கமாய் ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்தவருக்கும், அடையப் பிரயத்தினம் செய்பவருக்கும், இவ்வித ஸதாசாரங்களுக்கு இடமில்லையேயென்றால் அவர்களுக்கும் ஸதாசாரம் உண்டு. ஆனால் அது வேறு விதம் என்று இந்த பிரகரணத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக்காட்டுகிறார். இந்த ஸதாசாரம் ஸாதாரணமான ஸதாசாரம் போல் கர்மேந்திரியாதிகளையும் வெளிப் பதார்த்தங்களையும் வைத்துக்கொண்டு அனுஷ்டிக்கவேண்டியதில்லை. மனஸினுலேயே அனுஸந்தானம் செய்யவேண்டியது, என்ற வித்யாஸத்தையும் காட்டுகிறார்.]

सच्चिदानन्दकन्दाय जगदङ्कुरहेतवे ।
सदोदिताय पूर्णाय नमोऽनन्ताय विष्णवे ॥ १ ॥

ஸச்சிதானந்த கந்தாய ஜகதங்குர ஹேதவே ।
ஸதோதிதாய பூர்ணாய நமோऽனந்தாய விஷ்ணவே ॥

**सच्चिदानन्दकन्दाय**–ஸத்தாகவும், சித்தாகவும், ஆனந்தமாகவும் உள்ள கிழங்காய், **जगदङ्कुरहेतवे**–பிரபஞ்சம் ஆகிற முளைக்குக் காரணமாய், **सदा**–எப்பொழுதும், **उदिताय**–பிரகாசித்துக் கொண்டிருப்பதாய், **पूर्णाय**–நிரம்பினதாய், **अनन्ताय**–எல்லையற்றதாய், **विष्णवे**–வியாபகமாயும் உள்ள (பிரஹ்மத்திற்கு) **नमः**–நமஸ்காரம்.

ப்ரஹ்மம் ஸச்சிதானந்தரூபம். பிரபஞ்சமாகிற முளை உண்டாவதற்குக் காரணமான கிழங்கு அது. வியாபகமாக எங்கும் நிறைந்து எல்லையற்று எப்பொழுதும் ஸ்வயம்ப்ரகாசமாக விளங்கும் இந்த ப்ரஹ்மத்திற்கு நமஸ்காரம். (1)

**सर्ववेदान्तसिद्धान्तैर्ग्रथितं निर्मलं शिवम् ।**
**सदाचारं प्रवक्ष्यामि योगिनां ज्ञानसिद्धये ॥ २ ॥**

ஸர்வவேதாந்த ஸித்தாந்தைர் க்ரதிதம் நிர்மலம் ஶிவம் ।
ஸதாசாரம் ப்ரவக்ஷ்யாமி யோகிநாம் ஞானஸித்தயே ॥

**योगिनां**–(ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்குரிய) ஸாதனங்களை அனுஷ்டிக்கிறவர்களுக்கு, **ज्ञानसिद्धये**–ஞானம் ஸித்திக்க வேண்டியதற்காக, **सर्ववेदान्तसिद्धान्तैः**–எல்லா உபநிஷத்துக்களிலும் தீர்மானிக்கப்பட்டிருக்கும் முடிவுகளைக்கொண்டு **ग्रथितं**–தொகுக்கப்பட்டதாயும், **निर्मलं**–நிர்மலமாயும், **शिवं**–மங்களமாயுமுள்ள, **सदाचारं** – ஸாதுக்களுடைய ஆசாரத்தைப் பற்றி, **प्रवक्ष्यामि**–நன்கு எடுத்துச்சொல்கிறேன்.

யோகிகளுக்கு ஞானம் ஏற்படுவதற்காக தோஷமற்றதும் மங்களகரமானதுமான ஸ்தாசாரத்தைக் கூறுகிறேன். இது எல்லா உபநிஷத்துக்களிலும் காணும் ஸித்தாந்தங்களைக் கொண்டு தொகுக்கப்பட்டது. இதன்படி நடந்தால் நிச்சயம் ஞானம் ஏற்படும். (2)

**प्रातः स्मरामि देवस्य सवितुर्भर्ग आत्मनः ।**
**वरेण्यं तद्धियो यो नश्चिदानन्दे प्रचोदयात् ॥ ३ ॥**

ப்ராத: ஸ்மராமி தேவஸ்ய ஸவிதுர் பர்க ஆத்மந: ।
வரேண்யம் தத் தியோ யோ நச்சிதாநந்தே ப்ரசோதயாத் ॥

यः—எவர், नः—நம்முடைய, धियः—புத்திகளை, चिदानन्दे—சித்தாகவும் ஆனந்தமாகவுமுள்ள பிரஹ்மத்தில், प्रचोदयात्—ஏவி விடுவாரோ அந்த, देवस्य—ஸ்வயம் பிரகாசமாய், सवितुः—எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிறதாயுள்ள, आत्मनः—ஆத்மாவினுடைய, तत्—அந்த, वरेण्यं—சிலாக்கியமான, भर्गः—தேஜஸ்ஸை, प्रातः—காலையில், स्मरामि—ஸ்மரிக்கிறேன்.

ஸதாசாரத்தில் காலையில் எழுந்திருந்தவுடன் முதலில் செய்யவேண்டிய காரியம் ப்ராதஸ்மரணம். அதை ஒட்டி இங்கும் பரப்ரம்ம தத்வானுஸ்ந்தான்மென்னும் ப்ராதஸ் ஸ்மரணம் கூறப் படுகிறது. சிதானந்த ரூபியான பரதத்வத்தில் மனம் செல்லும்படி அருள் செய்யும் ஜகத்காரணரான பரமாத்மாவின் தேஜோமய ஸ்வரூபத்தை காலையில் எழுந்திருந்தும் தியானிக் கிறேன். (3)

अन्वयव्यतिरेकाभ्यां जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।
यदेकं केवलं ज्ञानं तदेवास्मि परं बृहत् ॥ ४ ॥

அன்வய வ்யதிரேகாப்யாம் ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்திஷு ।
யதேகம் கேவலம் ஞானம் ததேவாஸ்மி பரம் ப்ருஹத் ॥

जाग्रत्स्वप्नसुषुप्तिषु—விழிப்பு, கனவு, தூக்கம் இவைகளில், अन्वयव्यतिरेकाभ्यां—அன்வயத்திலும் வ்யதிரேகத்திலும், यत्—எது, एकं—ஒன்றாய், केवलं—தனித்து, ज्ञानं—ஞான ஸ்வரூபமாயிருக்கிறதோ, परं—மேலான, बृहत्—மிகப் பெரியதான, तत् एव—அந்த வஸ்துவாகவே, अस्मि—நான் இருக்கிறேன்.

விழிப்பு, கனவு, தூக்கம் இவைகளில் அன்வயத்திலும் வியதிரேகத்திலும் எது ஒன்றாய் தனித்து ஞானஸ்வரூபமா யிருக்கிறதோ, மேலான மிகப்பெரியதான அந்த பதார்த்த மாகவே நான் இருக்கிறேன்.

[பொதுவாக ஒரு பதார்த்தம் இருக்கும்போது இன்னொரு பதார்த்தம் கூட இருக்குமேயானல் அன்வயம் என்றும், ஒரு

பதார்த்தம் இருந்தும் இன்னொரு பதார்த்தம் கூட இல்லையானால் வ்யதிரேகம் என்றும் சொல்வார்கள். விழிப்பு ஸமயத்தில் வெளிப் பிரபஞ்சத்திலுள்ள விஷயங்களை அறிந்துகொண்டும், கனவின்போது உள்ளே மனஸின் ஸம்ஸ்காரங்களினால் தோன்றும் விஷயங்களை அறிந்துகொண்டும், நல்ல தூக்கத்தில் ஒரு விஷயமும் தோன்றவில்லை யென்பதை அறிந்துகொண்டும், இருக்கிற, அதாவது இம்மூன்று நிலைகளிலும் அறிவு ஸ்வரூபமா யிருப்பதே ஆத்மா. விழிப்பு இருக்கும்போது, கனவும் தூக்கமும் கிடையாது. கனவு இருக்கும்போது விழிப்பும் நல்ல தூக்கமும் கிடையாது. நல்ல தூக்கம் இருக்கும்போது விழிப்பும் கனவும் கிடையாது. ஆகையால் ஆத்மா ஏதேனும் ஒரு அனுபவநிலையில் இருக்கும்போது அந்த ஸமயம் மற்ற இரண்டு நிலைகளும் கிடையாது என்று தெரிவதால் அந்த நிலைகள் ஆத்மாவின் ஸ்வரூபத்தில் சேர்ந்தவையல்லவென்று நன்கு தெரிகிறது. அவ்வாத்மா விஷயங்களை எதிர்பாராமல் எப்பொழுதும் ஒரே மாதிரியாய் இருக்கும் சுத்தமான அறிவேயாகும். அதுவே நான்]

ज्ञानाज्ञानविलासोऽयं ज्ञानाज्ज्ञाने च शाम्यति ।
ज्ञानाज्ञाने परित्यज्य ज्ञानमेवावशिष्यते ॥ ५ ॥

ஞானாஞான விலாஸோ(அ)யம் ஞானாத் ஞானே ச சாம்யதி ।
ஞானாஞானே பரித்யஜ்ய ஞானமேவாவசிஷ்யதே ॥

अयं-இந்த, ज्ञानाज्ञानविलासः-அறிவு, அறியாமை, என்ற இருவிதத்தோற்றமும், ज्ञानात्-ஞானம் ஏற்பட்டவுடன், ज्ञाने च-ஞானத்திலேயே, शाम्यति-அடங்கிவிடுகிறது. ज्ञानाज्ञाने-அறிவு, அறியாமை, இவ்விரண்டையும், परित्यज्य-விட்டு விட்டால், ज्ञानमेव-(ஸ்வரூபமான) ஞானம் மாத்திரம், अवशिष्यते-மிஞ்சுகிறது.

இந்த அறிவு, அறியாமை என்ற இருவிதத் தோற்றமும் ஞானம் ஏற்பட்டவுடன் ஞானத்திலேயே அடங்கிவிடுகிறது. அறிவு, அறியாமை இவ்விரண்டையும் விட்டுவிட்டால் (ஸ்வரூபமான) ஞானம் மாத்திரம் மிஞ்சும்.

[ஞானமும் அஞ்ஞானமும் பகல் இரவு போலுள்ளவைகள். ஸூர்யன் தெரியும்போது பகல் என்ற வியவஹாரமும் தெரியாத

போது இரவு என்ற வியவஹாரமும் ஏற்படுகிறது. ஒருவன் ஸூர்யனிடத்திலேயே இருந்துவிட்டால், அவனுக்கு ஸூர்யன் தெரிகிறது, தெரியவில்லை, என்கிற வியவஹாரம் இல்லாத தினால் பகல் இரவு என்ற வியவஹாரமும் கிடையாது. ஒரே வெளிச்சம் தான். அப்படியே ஆத்ம ஸ்வரூபத்தில் நிலைக்காத போது ஆத்மாவிற்கு அறிவு இருப்பதாகவும் அறியாமை இருப்ப தாகவும் தோன்றும். ஆனால் ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு விட்டால் இவ்வித இரண்டு வியவஹாரங்களுக்கும் இடமன்னியில் ஆத்மா சுத்தமான ஞானஸ்வரூபனே என்பது நன்கு விளங்கும்.]

(அ) ஆத்ம ஞானிக்கு சரீர சுத்தி என்ற சௌசத்தைக் கூறுகிறார்:—

अत्यन्तमलिनो देहो देही चात्यन्तनिर्मलः ।
असङ्गोऽहमिति ज्ञात्वा शौचमेतत् प्रचक्षते ॥ ६ ॥

அத்யந்த மலினோ தேஹோ தேஹீ சாத்யந்த நிர்மல: ।
அஸங்கோऽஹமிதி ஞாத்வா ஶௌசமேதத் ப்ரசக்ஷதே ॥

देहः-சரீரமானது, अत्यन्तमलिनः-மிகவும் அழுக்கடைந்தது. देही च-ஆத்மாவோ, अत्यन्तनिर्मलः-மிகவும் நிர்மலமானது. (ஆகையால்) अहं-நான், असङ्गः-(சரீரத்துடன்) எவ்வித ஸம்பந்தமும் அற்றவன், इति-என்று, ज्ञात्वा-அறிந்து விட்டால், एतत्-இதையே, शौचं-சௌசம் என்று, प्रचक्षते-(அறிவாளிகள்) சொல்கிறார்கள்.

சரீரமானது மிகவும் அழுக்கடைந்தது ஆத்மாவோ மிகவும் நிர்மலமானது. ஆகையால் நான் சரீரத்துடன் எவ்வித ஸம்பந்த மும் அற்றவன், என்று அறிந்து கொள்வதுதான் ஞானிக்கு சௌசமென்பது.

[சுத்தி என்பது அசுத்தமாயுள்ள பதார்த்தத்திற்கே தவிர, எப்பொழுதும் சுத்தமாயிருக்கிற ஆத்மாவிற்கு சுத்தி என்பது எதற்காக? தான் எப்பொழுதும் சுத்தன், தனக்கு அசுத்த பதார்த்தங்களுடன் தொடர்பு கிடையாது, என்ற அறிவே சௌச மாகும்.] (6)

मन्मनो मीनवन्नित्यं क्रीडत्यानन्दवारिधौ ।
सुस्नातस्तेन पूतात्मा सम्यग्विज्ञानवारिणा ॥ ७ ॥

மந்மநோ மீநவந்நித்யம் க்ரீடத்யாநந்த வாரிதௌ ।
ஸுஸ்நாதஸ் தேந பூதாத்மா ஸம்யக்விஜ்ஞாந வாரிணா ॥

**आनन्दवारिधौ**–ஆனந்தமாகிற ஸமுத்திரத்தில், **मन्मनः**–என்னுடைய மனஸ், **मीनवत्**–மீனைப்போல, **नित्यं**–எப்பொழுதும், **क्रीडति**–விளையாடிக்கொண்டிருக்கிறது. **तेन**–அந்த (அதிலுள்ள), **सम्यग्विज्ञानवारिणा**–தெளிவான அறிவு என்கிற ஜலத்தினால், **सुस्नातः**–நன்கு ஸ்நாநம் செய்தவனாக **पूतात्मा**–சுத்தம் செய்யப்பட்ட மனஸுடையவனாக இருக்கிறேன்.

ஸச்சிதானந்தம் என்ற ஸமுத்திரத்தில் என் மனம் எப்பொழுதும் மீனைப்போல விளையாடிக்கொண்டிருக்கிறது. ஆத்மஞானம் என்ற தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து அதனால் பரிசுத்தனாக இருக்கிறேன்.

[நிர்மலமான ஜலத்தில் எப்பொழுதும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும் மீனின் மேல் எவ்வித அழுக்கும் எப்படி இராதோ, அப்படியே ஞானானந்த ஸ்வரூபமான சுத்த சைதன்யத்திலேயே ரமித்துக்கொண்டிருக்கும் என் மனஸில் எவ்வித அழுக்கும் இருக்க நியாயமில்லை. ஆகையால் இதுவே எனக்கு அழுக்கைப் போக்கும் ஸ்நாநமாகும்.] (7)

अथाघमर्षणं कुर्यात् प्राणापाननिरोधतः ।
मनः पूर्णे समाधाय मग्नकुम्भो यथाऽर्णवे ॥ ८ ॥

அதாகமர்ஷணம் குர்யாத் ப்ராணாபாந நிரோதத: ।
மந: பூர்ணே ஸமாதாய மக்ந கும்போ யதார்ணவே ॥

**अथ**-பிறகு, **अर्णवे**–ஸமுத்திரத்தில், **मग्नकुम्भः**–மூழ்கின குடம், **यथा**–எப்படியோ (அப்படியே), **प्राणापाननिरोधतः**–பிராணன், அபானன், என்ற இருவித வாயு ஸஞ்சாரத்தையும் நிறுத்துவதன் மூலம் **मनः**–மனஸை, **पूर्णे**-எங்கும் நிறைந்த

ஆத்மாவிடத்தில்; समाधाय–நன்கு நிலை நிறுத்தி (அதனால்), अघमर्षणं–பாபம் போக்குதலை, कुर्यात्–செய்யவேண்டும்.

பிறகு, ஸமுத்திரத்தில் மூழ்கின குடம்போல பிராணன், அபானன், என்ற இரண்டுவித வாயு ஸஞ்சாரத்தையும் நிறுத்தி மனஸை எங்கும் நிறைந்த ஆத்மாவிடத்தில் நன்கு நிலை நிறுத்துவது என்ற அகமர்ஷணத்தைச் செய்யவேண்டும்.

[சரீரத்திலுள்ள அழுக்குப் போவதற்காக ஜலத்தில் ஸ்நாநமும், உள்ளழுக்காகிய பாபம் போவதற்காக அகமர்ஷண மந்த்ர ஜபம் செய்வதும் சாஸ்திரவிஹிதம். ஆத்ம ஞானிக்கு மனஸை ஸர்வ வியாபகமான ஆத்மாவினிடத்தில் நன்கு நிலைக்கும்படி செய்ய பிராணயாமம் செய்து மனஸை நிச்சலமாய் தோஷமற்றதாய் செய்வதே அகமர்ஷணமாகும்] (8)

लयविक्षेपयोः सन्धौ मनस्तत्र निरामिषम् ।
स सन्धिः साधितो येन स मुक्तो नात्र संशयः ॥ ९ ॥

லய விக்ஷேபயோ: ஸந்தௌ மநஸ்தத்ர நிராமிஷம் ।
ஸ ஸந்தி: ஸாதிதோ யேந ஸ முக்தோ நாத்ர ஸம்ஶய: ॥

लयविक्षेपयोः–லயமாகிற தூக்கத்திற்கும் விக்ஷேபமாகிற வெளிப் பார்வைக்கும், सन्धौ–மத்தியில், मनः–மனஸ் இருந்தால், तत्र–அந்த நிலையில், निरामिषम्–விஷயமற்று இருக்கும். सः–அந்த, सन्धिः– (இரண்டும் அல்லாமல், இரண்டும் சேருமிடமான) மத்தியில் நிறுத்துவது, येन–எவனால், साधितः–ஸாதிக்கப்பட்டிருக்கிறதோ, सः–அவன் मुक्तः–(ஸம்ஸாரபந்தத்திலிருந்து) விடுதலையடைந்தவன், अत्र இந்த விஷயத்தில், संशयः–ஸந்தேஹம் न–இல்லை.

லயம் என்பது தூக்கம், அக்ஞானமாகிய காடாந்தகாரத்தில் அழுந்தியிருப்பது. விக்ஷேபம் என்பது வெளி விஷயங்களில் செல்லுதல். இரண்டுக்கும் நடுநிலை ஸந்த்யை. இதில் இரண்டும் கிடையாது. இந்த நிலையில் மனதை நிலை நிறுத்தப்பழகி விட்டால் அவனே முக்தன்.

[இரவும் பகலும் சேருவது ஒரு ஸந்தியை, பகலும் இரவும் சேருவது ஒரு ஸந்தியை, முற்பகலும் பிற்பகலும் சேருவது ஒரு

ஸந்தியை. இம்மூன்று ஸந்தியைகளிலும் ஸந்த்யாவந்தனம் செய்யும்படி சாஸ்திரம் சொல்கிறது. ஆத்மஞானிக்கு ஸந்த்யை எவ்விதமென்றால், வெளிப்பார்வையுடன் இருந்துவரும் மனஸை அதிலிருந்து இழுத்து வைக்கும்போது ஒரு ஸமயம் தூக்கமே வந்துவிடும். அப்படியே தூக்கத்திலிருந்து வெளிப்படும்போது உடனே உலக வியவஹாரத்திலேயே ஈடுபட்டுவிடும். இவ்விரண்டிற்கும் இடங்கொடுக்காமல், அதாவது மனஸைத் தூங்க விடாமலும் வெளியில் விடாமலும் மத்தியில் நிறுத்திவிடுவதே ஆத்மஞானிக்கு ஸந்த்யோபாஸனையாகும் ] (9)

सर्वत्र प्राणिनां देहे जपो भवति सर्वदा ।
हंसः सोऽहमिति ज्ञात्वा सर्वबन्धैर्विमुच्यते ॥ १० ॥

ஸர்வத்ர ப்ராணினாம் தேஹே ஜபோ பவதி ஸர்வதா ।
ஹம்ஸ: ஸோऽஹமிதி ஞாத்வா ஸர்வபந்தைர் விமுச்யதே ॥

प्राणिनां-பிராணிகளுடைய, सर्वत्र-எல்லா, देहे-தேஹத்திலும், सर्वदा-எப்பொழுதும், हंसः सोऽहं "ஹம்ஸ: ஸோஹம்" (ஸர்வ வியாபகமான பிரஹ்மமே நான்) इति-என்ற, जपः-ஜபமானது, भवति-இருந்துவருகிறது, ज्ञात्वा-இதை அறிந்துகொண்டு விட்டால், सर्वबन्धैः-எல்லாக்கட்டுகளிலிருந்தும், विमुच्यते-நன்கு விடுபடுகிறான்.

எல்லாப் பிராணிகளுடைய தேஹத்திலும் "ஹம்ஸ: ஸோஹம்" (ஸர்வ வியாபகமான பிரஹ்மமே நான்) என்ற ஜபமானது எப்பொழுதும் இருந்துவருகிறது. இதை அறிந்துகொண்டுவிட்டால் எல்லா பந்தங்களிலிருந்தும் நன்கு விடுபடுகிறான்.

[பிராண ஸஞ்சாரமுள்ளவைகள் பிராணிகள். பிராண ஸஞ்சாரம் என்றால் வெளிக்காற்றை உள்ளிழுப்பதும் உள்காற்றை வெளிப்படுத்துவதும் சேர்ந்ததேயாகும். அவ்விதம் வாயு ஸஞ்சாரத்தில் காற்றை உள்ளேயிழுக்கும்போது "ஹம்" என்றும் வெளிவிடும்போது "ஸ:" என்றும், உள்ளே இழுக்கும் போது "ஸோ" என்றும், வெளிப்படும்போது "ஹம்" என்றும், தானாகவே சப்தம் ஏற்படுவதை கவனித்துப் பார்த்தால் நன்கு தெரியவரும். இரண்டுவித சப்தங்களையும் சேர்த்துப் பார்க்கும்

போது "ஹம்ஸரூபியான அதாவது வியாபகரான அவர்தான் நான்" என்று அர்த்த மேற்படக்கூடிய "ஹம்ஸ: ஸோஹம்" என்கிற சப்தமாக பரிணமிக்கிறது. நம்முடைய எவ்வித் பிரயத்தினமும் இல்லாமலே நாம் மூச்சுவிடுதலிலேயே ஆத்மத்த்வத்தை விளக்கக்கூடிய இந்த மந்திரத்தை பகவான் ஏற்படுத்தியிருப்பதால், நாம் தனித்து ஜபம் செய்யவேண்டிய அவசியமில்லாத ஜபம், அஜபா ஜபம், என்று இதற்கு பெரியோர்கள் பெயர்வைத்திருக்கிறார்கள். இவ்விதம் ஸகல பிராணிகளுக்கும் ஸ்வபாவ ஸித்தமாயிருக்கிற இந்த மந்திரத்தின் அர்த்தத்தை பிரதி சுவாஸத்திலும் அநுஸந்தானம் பண்ணிக் கொண்டிருக்கும் ஆத்மஞானிக்கு இதுவே ஜபமாகும்] (10)

तर्पणं स्वसुखेनैव स्वेन्द्रियाणां प्रतर्पणम् ।
मनसा मन आलोक्य स्वयमात्मा प्रकाशते ॥ ११ ॥

தர்ப்பணம் ஸ்வஸுகேனைவ ஸ்வேந்த்ரியாணாம் ப்ரதர்ப்பணம் ।
மநஸா மந ஆலோக்ய ஸ்வயமாத்மா ப்ரகாஶதே ॥

स्वेन्द्रियाणां-தன்னுடைய இந்திரியங்களுக்கு, स्वसुखेनैव தன்னுடைய ஆத்மானந்தத்திலேயே, प्रतर्पणं-நன்கு திருப்தி செய்விப்பதுதான் (ஆத்மஞானி செய்ய வேண்டியது) तर्पणं-தர்ப்பணம், मनसा-மனஸினால், मनः-மனஸை, आलोक्य-நன்கு பார்க்கையில், आत्मा-ஆத்மாவானவர், स्वयं-தானாகவே, प्रकाशते-பிரகாசிப்பார்.

தன்னுடைய இந்திரியங்களுக்கு தன்னுடைய ஆத்மானந்தத்திலேயே நன்கு திருப்தி செய்விப்பதுதான் ஆத்மஞானி செய்ய வேண்டிய தர்ப்பணம். மனஸினால் மனஸை நன்கு பார்க்கையில் ஆத்மாவானவர் தானாகவே பிரகாசிப்பார்.

[ஆத்மஞானிக்கு தேவ ரிஷி பித்ரு தர்ப்பணமெல்லாம் வேண்டாமா என்றால், இந்திரியங்களைத் திருப்தி அடையும்படிச் செய்வதே அவன் செய்யும் தர்ப்பணமாகும். ஆனால் அந்தந்த இந்திரியங்கள் கேட்கும் வெளிப் பிரபஞ்சத்திலுள்ள பதார்த்தங்களை ஸம்பாதித்து அவைகளுக்குக்கொடுத்து திருப்தி செய்யும் முறையல்ல. ஆத்மானந்தத்தின் அனுபவத்திலேயே அவைகளை

ஈடுபடும்படி செய்வதே சிறந்த தர்பணமாகும். அப்படி உள் இந்திரியமான மனசையும் நன்கு பரிசுத்தப்படுத்திப் பார்க்கையில் அதில் ஆத்மதத்வம் தெளிவாக விளங்குமாதலால் அதுவே மனஸை திருப்தி செய்விக்கும் முறையாகும். இதுவே சிறந்த தர்பணம்] (11)

आत्मनि स्वप्रकाशाग्नौ चित्तमेकाहुतिं क्षिपेत् ।
अग्निहोत्री स विज्ञेयश्चेतरे नामधारकाः ॥ १२ ॥

ஆத்மனி ஸ்வப்ரகாஶாக்நௌ சித்தமேகாஹுதிம் க்ஷிபேத்।
அக்னிஹோத்ரீ ஸ விக்ஞேயச்சேதரே நாமதாரகா: ॥

आत्मनि–ஆத்மாவாகிற, स्वप्रकाशाग्नौ–ஸ்வயம்பிரகாசமாயிருக்கும் அக்னியில், चित्तं–சித்தமாகிற, एकाहुतिं–ஒரே ஆஹுதியை, क्षिपेत्-போடவேண்டும். सः–அவ்விதம் போடுகிறவன், अग्निहोत्री–அக்னிஹோத்திரம் செய்கிறவன் என்று, विज्ञेयः–அறியவேண்டியது. इतरे च–மற்றவர்களோ नामधारकाः–(அக்னிஹோத்ரீ என்ற) பெயரை மாத்திரம் தரிக்கிறவர்கள்.

ஆத்மா என்பது எப்பொழுதும் தானாகவே பிரகாசித்துக்கொண்டிருக்கும் அக்னி. அதில் சித்தத்தை ஆஹுதி செய்ய வேண்டும். ஆத்மாவில் சித்தம் லயமாகிவிடும். இதுதான் அக்னிஹோத்ரம். ஞானிதான் உண்மையான அக்னிஹோத்ரி. மற்றவர்கள் பெயரளவில்தான்.

[ஸாதாரணமாக அக்னிஹோத்ரம் என்றால் அரணிக்கட்டைகளைக் கடைந்து அதிலிருந்து எடுத்த அக்னியில் பல ஆஹுதிகளைச் செய்வதேயாகும். ஆத்ம ஞானிக்குப்புதிதாக உண்டாக்கிக் கனியவைத்து ஜ்வாலை வரும்படி செய்யவேண்டிய அவசியமில்லாமல் எப்பொழுதும் ஸ்வயம்பிரகாசமாய் ஸ்வபாவஸித்தமாய் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற ஆத்மாவே அக்னியாகும். அதிலும் ஒரே திரவியமான மனஸ் என்பதையே ஆஹுதி செய்தால் போதும். எப்படி அக்னியில் போடப்பட்ட ஆஹுதியானது தன் ஸ்வரூபத்தையிழந்து அக்னியோடு ஒன்றாகிவிடுகிறதோ அப்படியே ஆத்மஞானியின் மனஸும் ஆத்மாவில் லயமடைந்துவிடும்.] (12)

देहो देवालयः प्रोक्तो देही देवो निरञ्जनः ।
अर्चितः सर्वभावेन स्वानुभूत्या विराजते ॥ १३ ॥

தேஹோ தேவாலய: ப்ரோக்தோ தேஹீ தேவோ நிரஞ்ஜந:
அர்சித: ஸர்வபாவேந ஸ்வாநுபூத்யா விராஜதே ॥

देहः–தேஹமானது, देवालयः–பகவானுடைய ஆலயம் என்று, प्रोक्तः–சொல்லப்பட்டிருக்கிறது. देही–தேஹத்திலுள்ள ஆத்மா, निरञ्जनः–எவ்வித அழுக்குமில்லாத, देवः–தேவன். स्वानुभूत्या–தன் அனுபவத்தினால், सर्वभावेन–எல்லாமாக இருக்கிறார் என்ற பாவனையால், अर्चितः–பூஜிக்கப்பட்டு (அவர்) विराजते–நன்கு விளங்குகிறார்.

தேஹமே பகவானுடைய ஆலயம். தேஹியான ஆத்மாவே பகவான். ஆகையால் தனது ஆத்மா எல்லாமாக விளங்குகிறது என்கிற பாவனை செய்வதுதான் ஞானி செய்யும் பூஜையாகும். இவ்வித பாவனையால் ஸ்வானுபவம் ஏற்பட்டு ஆத்மா நன்கு பிரகாசிக்கிறது.

[ஸ்நானம், ஸந்த்யை, ஜபம், ஹோமம் இவைகளுக்குப் பிறகு தேவதாராதனமும் செய்ய வேண்டுமே அது ஆத்ம ஞானிக்கு எவ்விதமென்றால், பரமாத்மா ஸாந்நித்யம் கொண்டிருக்கும் ஆலயம் இந்த சரீரமே. அதன் கர்ப்பகிருஹமாகிய ஹ்ருதய குகையில் ஆத்ம ஸ்வரூபத்தை தியானித்து பூஜை செய்து தன்னுடைய ஸ்வானுபவமாகிய நீராஜனம் செய்து பார்க்கும் போது ஆத்ம தத்வம் வெகு பிரகாசமாய் விளங்கும்.] (13)

मौनं स्वाध्ययनं ध्यानं ध्येयब्रह्मानुचिन्तनम् ।
ज्ञाने नेति तयोः सम्यङ् निषेधात् तत्त्वदर्शनम् ॥ १४ ॥

மௌநம் ஸ்வாத்யயனம் த்யாநம் த்யேய ப்ரஹ்மாநுசிந்தனம் ।
ஞாநே நேதி தயோ: ஸம்யஞ் நிஷேதாத் தத்வ தர்சநம் ॥

मौनं–மௌனம் என்பது, स्वाध्ययनं–தனக்கேற்பட்ட வேதாத்யயனம், ध्यानं–தியானம் என்பது, ध्येयब्रह्मानुचिन्तनं–

தியானத்திற்கு விஷயமான ப்ரஹ்மத்தைப்பற்றி அநுசிந்தனம் செய்வது, ज्ञाने-ஞானம் ஏற்பட்டுவிட்டால், न-கிடையாது, इति-என்று, तयोः-அவ்விரண்டும் (அத்யயனமும் சிந்தனமும்), सम्यक्-நன்றாக, निषेधात्-தடுக்கப்பட்டிருப்பதால், तत्त्वदर्शनम्-ஆத்மதத்வ ஸாக்ஷாத்காரம் தான் உண்டு.

மௌனம் என்பது தனக்கேற்பட்ட வேதாத்யயனம். தியானம் என்பது தியானத்திற்கு விஷயமான பிரஹ்மத்தைப் பற்றி அனுசிந்தனம் செய்வது. ஞானம் ஏற்பட்டுவிட்டால் அத்யயனமும் சிந்தனமும் கிடையாதென்று நன்றாகத் தடுக்கப்பட்டிருப்பதால் ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரம் தான் உண்டு.

[வாக்கின் வியவஹாரமிருக்கும்போது உபநிஷத் வாக்கிய பாராயணாதிகளும், மனஸின் வியவஹாரமிருக்கும்போது த்யானத்திற்கு விஷயமாக பிரஹ்மத்தை பாவித்து சிந்தனமும் அவசியம், வாக்கும் மனஸும் எட்டாத சுத்த சைதன்யத்தை ஞானத்தினால் ஸாக்ஷாத்கரிக்கும்போது அவ்வித வியவஹாரங்களுக்கு இடமேயில்லை] (14)

अतीतानागतं किंचिन्न स्मरामि न चिन्तये ।
रागद्वेषौ विना प्राप्तं भुञ्जाम्यत्र शुभाशुभम् ॥ १५ ॥

அதீதாநாகதம் கிஞ்சித் ந ஸ்மராமி ந சிந்தயே ।
ராகத்வேஷௌ விநா ப்ராப்தம் புஞ்ஜாம்யத்ர சுபாசுபம் ॥

अतीतानागतं-சென்றதோ, இன்னும் வராமலிருப்பதோ, किंचित्-எதையும், न स्मरामि-நான் ஞாபகப்படுத்திக்கொள்வதில்லை, न चिन्तये-ஆலோசித்துப்பார்ப்பதுமில்லை, अत्र-இப்பொழுது, (நிகழ் காலத்தில்), प्राप्तं-(பிராரப்தகர்ம வசத்தினால்) கிடைக்கும், शुभाशुभं-நல்லதையும் கெட்டதையும், रागद्वेषौ-ஆசையோ வெறுப்போ, विना-இல்லாமல், भुञ्जामि-அனுபவிக்கிறேன்.

சென்றதை எதையும் நான் ஞாபகப்படுத்திக்கொள்வதில்லை, பின்னால் வரப்போவதை ஆலோசித்துப்பார்ப்பதுமில்லை. இப்

இப்பொழுது நிகழ்காலத்தில் ப்ராரப்த கர்மவசத்தினால் நல்லதோ கெட்டதோ எது கிடைக்கிறதோ அதை ஆசையோ வெறுப்போ இல்லாமல் அனுபவிக்கிறேன். (15)

(அ) இவ்விதமாக ஆத்மஜ்ஞானிக்கு ஏற்பட்ட விலக்ஷணமான ஸதாசாரத்தையும், அவன் எப்படிப் பற்று அற்று உலகத்தில் இருந்து வருவான் என்பதையும் முதல் 15 சுலோகங்களால் எடுத்துக் காட்டிவிட்டு, அந்த ஞானத்தை ஸம்பாதிக்கும் முறையை மேலால் காட்டுகிறார் :—

देहाभ्यासो हि संन्यासो नैव काषायवाससा ।
नाहं देहोऽहमात्मेति निश्चयो न्यासलक्षणम् ॥ १६ ॥

தேஹாப்யாஸோ ஹி ஸந்யாஸோ நைவ காஷாயவாஸஸா ।
நாஹம் தேஹோऽஹமாத்மேதி நிச்சயோ ந்யாஸலக்ஷணம் ॥

देहाभ्यासो हि—தேஹம் (நான் இல்லை, நான் இல்லை, என்று) அப்பியாஸம் செய்வதல்லவா, संन्यासः—ஸன்யாஸம் என்பது! काषायवाससा—காஷாய வஸ்திரம் உடுப்பதினால் மாத்திரம், नैव—ஸன்யாஸம் ஆகவேமாட்டாது (ஏனென்றால்) अहं—நான், देहः—தேஹம், न—அல்ல, अहं—நான், आत्मा—ஆத்மாவே, इति—என்ற, निश्चयः—தீர்மானம்தான், न्यासलक्षणम्—ஸன்யாஸத்தின் லக்ஷணம்.

நான் தேஹம் அல்ல, நான் ஆத்மாவே என்ற தீர்மானம் தான் ஸன்யாஸத்தின் லக்ஷணம். ஆகையால் 'நான் சரீரமல்ல நான் சரீரமல்ல' என்று அப்யாஸம் செய்கிறவன் தான் உண்மையான ஸந்யாஸி. இந்த அப்யாஸமில்லாமல் காஷாய வஸ்திரம் தரித்துக்கொள்வதால் மட்டும் ஸந்யாஸியாக மாட்டான். (16)

अभयं सर्वभूतानां दानमाहुर्मनीषिणः ।
निजानन्दे स्पृहा नान्ये वैराग्यस्यावधिर्मता ॥ १७ ॥

அபயம் ஸர்வபூதாநாம் தாநமாஹுர் மநீஷிண: ।
நிஜாநந்தே ஸ்ப்ருஹா நாந்யே வைராக்யஸ்யாவதிர்மதா ॥

सर्वभूतानां-ஸகல பிராணிகளுக்கும், अभयं-அபயம் கொடுப்பதே, दानं-தானம் என்று, मनीषिणः-அறிவாளிகள், आहुः-சொல்கிறார்கள். निजानन्दे-தன்னுடைய ஆத்மானந்தத்தில், स्पृहा-ஆசை, अन्ये-ஆத்மாவைத்தவிர்த்து வேறு பதார்த்தத்தில், न-ஆசையில்லாமலிருப்பது என்பது எதுவோ அதுவே, वैराग्यस्य-வைராக்கியத்தின், अवधिः-எல்லை என்று मता எண்ணப்பட்டிருக்கிறது.

ஸகல பிராணிகளுக்கும் அபயம் கொடுப்பதே சிறந்த தானமாகும். தன்னுடைய ஆத்மானந்தத்தில் ஆசையும் ஆத்மாவைத் தவிர்த்து வேறு பதார்த்தத்தில் ஆசையில்லாமலிருப்பதும் தான் வைராக்யத்தின் எல்லையாகும்.

[ஸன்யாஸியாகவேண்டுமென்று நினைக்கும்போதே ஸர்வ பிராணிகளிடத்திலும் தயையும் அஹிம்ஸா புத்தியும் வேண்டும். அப்படியே ஸகலவிதமான இஹலோக பரலோக ஸுகங்களில் ஆசையற்று ஆத்மானந்தத்திலேயே நோக்கத்துடன் இருக்க வேண்டும்.] (17)

(அ) இவ்விதம் வைராக்யாதி ஸாதனங்களை ஸம்பாதித்துக் கொண்டு ஸன்யாஸியானவர் தகுந்த குருவைத்தேடி தத்வோபதேசம் பெறவேண்டும், உபதேசிக்கப்பட்ட விஷயத்தை நன்கு மனனம்செய்து அனுஸந்தானம் செய்தால் தத்வ ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்கிற விஷயத்தை மேலே மூன்று சுலோகங்களால் காட்டுகிறார் :—

वेदान्तश्रवणं कुर्यात् मननं चोपपत्तिभिः ।
योगेनाभ्यसनं नित्यं ततो दर्शनमात्मनः ॥ १८ ॥

வேதாந்த ச்ரவணம் குர்யாத் மனநம் சோபபத்திபி: ।
யோகேநாப்யஸநம் நித்யம் ததோ தர்ஶநமாத்மந: ॥

वेदान्तश्रवणं-உபநிஷத்துக்களின் தாத்பர்யத்தைக் கேட்டுத்தெரிந்து கொள்வது என்பதை, कुर्यात्-செய்ய வேண்டும். उपपत्तिभिः-பலவித நியாயமான யுக்திகளால், मननं च-நன்கு ஆலோசிப்பது என்பதையும் (செய்ய வேண்டும்.) नित्यं-எப்பொழுதும், योगेन-மனஸை ஒருமைப்

படுத்தி, अभ्यसनं- திரும்பத்திரும்ப அனுஸந்தானம் என்பதை (செய்யவேண்டும்). ततः-அதன் பிறகு (அதிலிருந்து), आत्मनः-ஆத்மாவினுடைய, दर्शनम्-ஸாக்ஷாத்காரம் (ஏற்படும்).

[உபநிஷத்துக்களில் என்ன சொல்லியிருக்கிறது, அதன் தாத்பர்யம் என்ன என்பதை குரு முகமாக கிரஹித்து அது யுக்திக்குப் பொருத்தமாயிருக்கிறதாவென்று பலவிதமாய் ஆலோசித்துத் தீர்மானம் செய்து அதையே அனுபவத்திற்குக் கொண்டு வருவதற்காகத் திரும்பத்திரும்ப அனுஸந்தானம் செய்தால் தான் ஆத்மஞானம் ஏற்படும். இந்த நான்கு படிகளை யும் முறையே சிரவணம், மனனம், நிதித்யாஸனம், தர்சனம் என்று உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. (18)

शब्दशक्तेरचिन्त्यत्वात् शब्दादेवापरोक्षधीः ।
प्रसुप्तः पुरुषो यद्वत् शब्देनैवावबुद्ध्यते ॥ १९ ॥

ஶப்த ஶக்தேரசிந்த்யத்வாத் ஶப்தாதேவாபரோக்ஷதீ: ।
ப்ரஸுப்த: புருஷோ யத்வத் ஶப்தேனைவாவபுத்யதே ॥

शब्दशक्तेः-சப்தத்தின் சக்தியானது, अचिन्त्यत्वात्-மனஸினுல் கூட நினைக்கமுடியாத பெருமையுள்ளதால், अपरोक्षधीः-ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்கும் விருத்தியானது, शब्दात् एव-சப்தத்தினுல்தான் (ஏற்படுகிறது). यद्वत्-எது போல் என்ருல், प्रसुप्तः-நன்கு தூங்குகிற, पुरुषः-மனிதன், शब्देन एव-சப்தத்தினுலேயே, अवबुद्ध्यते-விழித்துக் கொள்கிருன்.

சப்தத்தின் சக்தியானது மனஸினுல்கூட நினைக்கமுடியாத பெருமையுள்ளதால், ஆத்ம ஸாக்ஷாத்காரம் சப்தத்தினுல் தான் ஏற்படுகிறது. நன்கு தூங்குகிற மனிதன் சப்தத்தினுலேயே விழித்துக்கொள்கிருனல்லவா!

[முதலில் சிரவணம், பிற்பாடு மனனம், பிற்பாடு நிதித்யா ஸனம், பிற்பாடு ஸாக்ஷாத்காரம் என்று முந்தின சுலோகத்தில் சொல்லியிருக்கிறபடியால், ஸாக்ஷாத்காரம் சிரவணத்தினுல் ஏற்படவில்லையென்று தோன்றலாம். வாஸ்தவத்தில் அப்படி

அல்ல, சிரவணத்திலுல் கிரஹிக்கப்பட்ட விஷயத்தையே உறுதிப் படுத்துவதற்காக மனனமும் நிதித்யாஸனமும் ஏற்பட்டிருக்கிற படியால், ஸாக்ஷாத்காரம் சிரவணத்திலுல் தான் ஏற்படுகிறது. சிரவணத்திலுல் அறிந்த விஷயத்தில் ஸந்தேஹமிருந்தால் தான் மனனமும், அனுபவத்திற்கு வராமலிருந்தால் தான் நிதித்யா ஸனமும், அவசியம். கேட்டவுடனேயே எவ்வித ஸந்தேஹமு மன்னியில் அனுபவத்திற்கு வந்துவிட்டால், அவ்விரண்டும் தேவையில்லை. ஆகையால் ஸாக்ஷாத்காரத்திற்கு சிரவணம் தான் நேர் காரணம். சிரவணம் என்றுல் காதினுல் கேட்பது தானே; அதற்கு அவ்வளவு சக்தியுண்டாவென்று ஸந்தேஹிக்க வேண்டாமென்பதில் தூங்குகிறவனை சப்தம்தானே எழுப்புகிறது என்ற திருஷ்டாந்தம் உபயோகப்படும் ] (19)

आत्मानात्मविवेकेन ज्ञानं भवति निश्चलम् ।
गुरुणा बोधितः शिष्यः शब्दब्रह्मातिवर्तते ॥ २० ॥

ஆத்மாநாத்மவிவேகேந ஞாநம் பவதி நிச்சலம் ।
குருணு போதித: ஶிஷ்ய: ஶப்த ப்ரஹ்மாதிவர்ததே ॥

आत्मानात्मविवेकेन–ஆத்மா எது, அனுத்மா எது, என்ற பகுத்தறிவினுல், ज्ञानं-ஞானமானது, निश्चलं-அசைவற்றதாய் भवति–ஆகிறது. गुरुणा–குருவினுல், बोधितः–உபதேசிக்கப் பட்ட, शिष्यः-சிஷ்யன், शब्दब्रह्म-சப்தரூபமான பிரஹ்மத்தை, अतिवर्तते–தாண்டிவிடுகிருன்.

ஆத்மா எது, அநாத்மா எது, என்ற பகுத்தறிவினுல் மாருத உறுதியான ஞானமானது ஏற்படுகிறது. குருவினுல் உபதேசிக்கப் பட்ட சிஷ்யன் சப்தரூபமான பிரஹ்மத்தைத் தாண்டிவிடுகிருன்.

[தன்னுடைய பகுத்தறிவை உபயோகப்படுத்தியே ஆத்மா எவ்விதமுள்ளது, அனுத்மா எவ்விதமுள்ளது என்று ஒருவாறு நிச்சயத்திற்கு வந்துவிடலாம். ஆனுல் அந்த நிச்சயம் உறுதிப் பட்டு அனுபவத்திற்கு வரவேண்டுமானுல் ஆத்மாவை நன்கு அறிந்த ஒரு குருவின் உபதேசம் அவசியம். அதுவரை வார்த்தை களால் மாத்திரம் பரோக்ஷமாய் தெரிந்துகொண்டிருந்த ஞானம் அப்பொழுதுதான் பிரத்யக்ஷ ஞானமாக மாறும்.] (20)

(அ) குருவின் உபதேசப்ரகாரத்தைக் காட்டுகிருர்:—

न त्वं देहो नेन्द्रियाणि न प्राणो न मनो न धीः ।
विकारित्वाद्विनाशित्वाद्दृश्यत्वाच्च घटो यथा ॥ २१ ॥

ந த்வம் தேஹோ நேந்த்ரியாணி ந ப்ராணோ ந மநோ ந தீ: ।
விகாரித்வாத் விநாஶித்வாத் த்ருச்யத்வாச்ச கடோ யதா ॥

त्वं-நீ, देहः-தேஹம், न-அல்ல, इन्द्रियाणि-இந்திரியங்கள், न-அல்ல, प्राणः-பிராணன், न-அல்ல, मनः-மனஸ், न-அல்ல, धीः-புத்தி, न-அல்ல. ஏனென்றால், (இவையெல்லாம்) घटः-குடம், यथा-எப்படியோ (அப்படியேதான்), विकारित्वात्-மாறுதலடையும் தன்மையுள்ளதாலும், विनाशित्वात्-நாசத்தையடையும் தன்மையுள்ளதாலும், दृश्यत्वात् च-ஞானத்திற்கு விஷயமாயிருத்தலின் தன்மையுள்ளதாலும் (இவை நீ அல்ல.)

சரீரம், இந்திரியங்கள், பிராணன், மனம், புத்தி இவையெல்லாம் குடம்போலவே மாறுதலடைகிறது, அழிந்துவிடுகிறது. அறியப்படுகிறது. ஆதலால் நீ இவைகளல்ல.

[தேஹம் முதல் புத்தி வரையுள்ளவைகளை நாம் ஆத்மாவென்று நினைக்கிறோம் அது தவறு. அவை யாவும் மாறிக்கொண்டும், நசித்துக்கொண்டும், அறியப்பட்டுக்கொண்டும், இருப்பதால், எவ்விதமாறுதலுமற்று ஏகரூபமாய், நாசமற்று ஶாச்வதமாய், அறியப்படாமல் சுத்த அறிவு ஸ்வரூபமாயுள்ள ஆத்மாவாக இருக்கமுடியாது. குடமானது மாறுகிறது. அறியப்படுகிறது, அழிகிறது. இதை யாரும் ஆத்மாவென எண்ணுவதில்லை. ஆகையால் குடத்தைப்போலவே இருக்கும் தேஹாதிகளும் ஆத்மாவாக முடியாது.] (21)

विशुद्धं केवलं ज्ञानं निर्विशेषं निरञ्जनम् ।
यदेकं परमानन्दं तत् त्वमस्यद्वयं परम् ॥ २२ ॥

விஶுத்தம் கேவலம் ஞாநம் நிர்விஶேஷம் நிரஞ்ஜநம் ।
யதேகம் பரமாநந்தம் தத் த்வமஸ்யத்வயம் பரம் ॥

विशुद्धं-நன்கு சுத்தமாய், केवलं-தனித்து, ज्ञानं-ஞான ஸ்வரூபமாய், निर्विशेषं-எவ்வித விசேஷமும் அற்றதாய்,

**निरञ्जनम्**–எவ்வித தோஷமும் அற்றதாய், **एकं**–ஒன்ருய், **परमानन्दं**–மேலான ஆனந்த ஸ்வரூபமாய், **यत्**–எது (இருக்கிறதோ), **अद्वयं**-இரண்டற்று, **परं**-உத்கிருஷ்டமாயுள்ள, **तत्**–அதுவாகவே, **त्वं असि**–நீ இருக்கிருய்.

நன்கு சுத்தமாய் தனித்து ஞானஸ்வரூபமாய் எவ்வித விசேஷமும் அற்றதாய் எவ்வித தோஷமும் அற்றதாய் ஒன்ருய் மேலான ஆனந்த ஸ்வரூபமாய் இரண்டற்று உத்கிருஷ்டமான வஸ்து எதுவோ, அதுவே நீ. (22)

शब्दस्याद्यन्तयोः सिद्धं मनसोऽपि तथैव च ।
मध्ये साक्षितया नित्यं तदेव त्वं भ्रमं जहि ॥ २३ ॥

சப்தஸ்யாத்யந்தயோ: ஸித்தம் மநஸோபி ததைவ ச ।
மத்யே ஸாக்ஷிதயா நித்யம் ததேவ த்வம் ப்ரமம் ஜஹி ॥

**शब्दस्य**–சப்தத்தினுடைய, **आद्यन्तयोः**–ஆதியிலும் முடிவிலும், **सिद्धं**–ஸித்தமாயும், **मनसोऽपि**–மனஸிற்கும், **तथैव च**–அப்படியே (ஆதியிலும் முடிவிலும் ஸித்தமாயும்), **मध्ये**-நடுவில், **साक्षितया**–பார்த்துக்கொண்டிருக்கும் தன்மையோடு **नित्यं**–எப்பொழுதும் (எது இருக்கிறதோ), **तत् एव**–அதுவே தான், **त्वं**-நீ, **भ्रमं**–பிராந்தியை, **जहि**–விட்டுவிடு.

சப்தத்தினுடைய ஆதியிலும் முடிவிலும், அப்படியே மனஸினுடைய ஆதியிலும் முடிவிலும் ஸித்தமாயும் நடுவில் பார்த்துக்கொண்டிருக்கும் தன்மையோடும் எப்பொழுதும் எது இருக்கிறதோ அதுவேதான் நீ: பிராந்தியை விட்டுவிடு.

[வாக்கின் விருத்தி ஏற்படுவதற்கு முன்னும் விருத்தி முடிந்துவிட்ட பிறகும், அப்படியே மனோ விருத்தி ஏற்படுவதற்கு முன்னும், அவ்விருத்தியடங்கின பிறகும், அவ்விருவிருத்திகளும் இருக்கும்போதும், அவ்விருத்திகளை ஸாக்ஷாத்கரித்துக்கொண்டு இருக்கிறது எதுவோ, அதுவே ஆத்மா. திருஷ்டாந்தம்—ஸங்கீத வித்வான் யாரென்று கேட்டால் எவர் ஒருவர் பாட ஆரம்பிப்பதற்கு முன்னும் இருந்துகொண்டு, பாடி முடிந்தபிறகும் இருந்துகொண்டு, பாடும்போதும் தன் பாட்டை தானே கேட்டுக்கொண்டும் இருக்கிருரோ அவர் என்றுதான் சொல்லவேண்டும்.

ஸங்கீதம் பாடுகிறவர் ஸங்கீதவித்வான் என்று லக்ஷணம் சொன்னால் அவர் பாடாத ஸமயத்தில் அவர் ஸங்கீதவித்வானின் இல்லை என்று ஆகிவிடும்.] (23)

स्थूलवैराजयोरैक्यं सूक्ष्महैरण्यगर्भयोः ।
अज्ञानमाययोरैक्यं प्रत्यग्विज्ञानपूर्णयोः ॥ २४ ॥

ஸ்தூல வைராஜயோரைக்யம் ஸூக்ஷ்ம
ஹைரண்யகர்ப்பயோ: ।
அக்ஞான மாயயோரைக்யம் ப்ரத்யக் விக்ஞான
பூர்ணயோ: ॥

स्थूलवैराजयोः–ஸ்தூலத்திற்கும் (ஸ்தூல சரீராபிமானியான விசுவனுக்கும்) விராட்டுக்கும், ऐक्यं–அபேதம். सूक्ष्म-हैरण्यगर्भयोः–ஸூக்ஷ்மத்திற்கும் (ஸூக்ஷ்ம சரீராபிமானியான தைஜஸனுக்கும்) ஹிரண்யகர்ப்பருக்கும், ऐक्यं–அபேதம். अज्ञानमाययोः–(பிராக்ஞனுக்கு உபாதியான) அக்ஞானத்திற்கும் (ஈசுவரனுக்கு உபாதியான) மாயைக்கும், ऐक्यं–அபேதம். प्रत्यग्विज्ञानपूर्णयोः–(நான் காவதாய் உபாதியற்றதாயுள்ள) பிரத்யகாத்மாவுக்கும் பரிபூர்ணமான பிரஹ்மத்திற்கும் (அபேதம்).

[எப்படிக் காடும் அதில் அடங்கியுள்ள மரமும் வேறில்லையோ, அதேமாதிரி எல்லா ஸ்தூல பிரபஞ்சத்தையும் உபாதியாகக் கொண்ட விராட் என்பவரும், அதிலடங்கிய ஸ்தூல சரீரத்தை மட்டும் நான் என்று நினைக்கிற விசுவன் என்பவனும் வேறல்ல. அப்படியே ஸகல ஸூக்ஷ்ம பிரபஞ்சத்தையும் உபாதியாகக் கொண்ட ஹிரண்யகர்ப்பர் என்பவரும் அதிலடங்கிய ஸூக்ஷ்ம சரீரத்தைமட்டும் நான் என்று பாவிக்கிற தைஜஸன் என்பவனும் ஒன்று. ஸ்தூலஸூக்ஷ்ம பிரபஞ்சங்களுக்கெல்லாம் மூலகாரணமாயிருக்கிற வியாபகமான மாயையை உபாதியாகக்கொண்ட ஈசுவரன் என்பவரும் அதில் அடங்கிய சிறியதான அவித்யையை மட்டும் உபாதியாகக்கொண்ட பிராக்ஞன் என்பவனும் ஒன்று. விராட், ஹிரண்யகர்ப்பர், ஈசுவரன் என்ற உபாதிகளோடு கூடிய மூன்று தத்வங்களையும் வியாபித்துக்கொண்டு அவ்வுபாதிகளால் பாதிக்கப்படாமல் இருந்துவரும் சுத்த சைதன்ய ஸ்வரூபமான

பரப்பிரஹ்மமும், விசுவன், தைஜஸன், பிராக்ஞன் என்ற உபாதிகளோடு கூடிய மூன்று ஜீவகலைகளையும் வியர்பித்துக்கொண்டு அவ்வுபாதிகளால் பாதிக்கப்படாமல் இருந்துவரும் சுத்த சைதன்ய ஸ்வரூபமான பிரத்யகாத்மாவும் ஒன்றே. உபாதிகளோடு கூடியிருக்கும்போது அம்சம் என்றும் அம்சி என்றும் வியவஹாரம் உண்டு. நான்காவதான உபாதியற்ற துரீய நிலையில் அந்த வியவஹாரம் கிடையாது. சுத்தமான ஐக்கியமே தான் ஸித்திக்கும். இதுவே மஹாவாக்கியங்களின் தாத்பர்யம். இதையே இந்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் சுருக்கமாகவும் தெளிவாகவும் எடுத்துக்காட்டியிருக்கிறார்.] (24)

चिन्मात्रैकरसे विष्णौ ब्रह्मात्मैक्यस्वरूपके ।
भ्रमेणैव जगज्जातं रज्ज्वां सर्पभ्रमो यथा ॥ २५ ॥

சின்மாத்ரைகரஸே விஷ்ணௌ ப்ரஹ்மாத்மைக்ய ஸ்வரூபகே ।
ப்ரமேணைவ ஜகஜ்ஜாதம் ரஜ்ஜ்வாம் ஸர்ப்ப ப்ரமோ யதா ॥

रज्ज्वां-கயிற்றில், सर्पभ्रमः-பாம்பு என்கிற பிரமம், यथा-எப்படி (ஏற்படுகிறதோ அப்படியேதான்), भ्रमेण एव-பிரமத்தினாலேயே, चिन्मात्रैकरसे-சுத்த ஞானஸ்வரூபமாய் ஒரேவிதமாய், विष्णौ-வியாபகமாய், ब्रह्मात्मैक्यस्वरूपके-பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்பதையே ஸ்வரூபமாயுள்ள பரமாத்மாவினிடத்தில், जगत्-ஜகத்தானது, जातं-உண்டாயிருக்கிறது.

கயிற்றில் பாம்பு என்கிற பிரமம் தோன்றுவதுபோலவே, பிராந்தியினாலேயே சுத்த ஞான ஸ்வரூபமாய் ஒரேவிதமாய் வியாபகமாய் பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்பதையே ஸ்வரூபமாயுள்ள பரமாத்மாவினிடத்தில் ஜகத்தானது தோன்றுகிறது.

[ஒன்றாக இருக்கிற பதார்த்தத்தில் அதைவிட வேறாக இன்னொன்று இருப்பதாகத் தோன்ற முடியுமா, என்கிற ஸந்தேஹத்தை நிவர்த்திப்பதற்காக ரஜ்ஜு ஸர்ப்ப திருஷ்டாந்தம். கயிறு மாத்திரம் இருக்கும்போது கயிறல்லாத பாம்பு தோன்றவில்லையா? அதேபோல் வாஸ்தவத்தில் ஆத்மா ஒன்றே

இருக்கையில் ஜகத் இருப்பதாகத்தோன்றலாம். ஆனால் அந்தத் தோற்றம் பிரமமேயாகும், வாஸ்தவமல்ல ] (௨௮)

तार्किकाणां तु जीवेशौ वाच्यावेतौ विदुर्बुधाः ।
लक्ष्यौ च सांख्ययोगाभ्यां वेदान्तैरेकता तयोः ॥ २९ ॥

தார்கிகாணும் து ஜீவேசௌ வாச்யாவேதௌ விதுர்புதா: ।
லக்ஷ்யௌ ச ஸாங்க்ய யோகாப்யாம்
வேதாந்தைரேகதா தயோ: ॥

तार्किकाणां–தார்க்கிகர்களின் மதத்தில், वाच्यौ तु–வாச்யர்கள் தான், एतौ–இந்த, जीवेशौ–ஜீவேசுவரர்கள் (என்று) बुधाः–அறிவாளிகள், विदुः–அறிந்துகொண்டிருக்கிறார்கள். सांख्ययोगाभ्यां–ஸாங்க்யர்களுக்கும் யோகிகளுக்கும் लक्ष्यौ च–லக்ஷ்யர்களே (அவ்விருவர்களும்). वेदान्तैः–உபநிஷத் வாக்கியங்கள் ரீதியாய், तयोः–அவ்விருவர்களுக்கும், एकता–ஐக்கியமே.

தார்கிகர்களின் ஸித்தாந்தத்தில் வாச்யர்கள்தான் ஜீவர்களும் ஈசுவரனும். அதாவது வாஸ்தவத்திலேயே உபாதிகளுடன் கூடியவர்கள் ஆகையால் ஆத்மா அநேகம். ஸாங்க்யர்களும் யோகிகளும் அவர்களை லக்ஷ்யர்களாகக் கூறுகிறார்கள். ஆத்மா அஸங்கம், உபாதி ஸம்பந்தம் கிடையாது என்பது அவர்களின் ஸித்தாந்தம். ஆனாலும் அஸங்கமான ஆத்மா அநேகம் என்று கூறுகிறார்கள். உபநிஷத் ஸித்தாந்தத்தில் லக்ஷ்யமான சைதன்யம் ஒன்றுதான்.

[பரமாத்மா ஒன்றேதான், அதுதான் நீ, என்று சொன்னால் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்யும் ஈசுவரன் வேறு, அவரால் ஆளப்படும் நான் வேறு, என்று நன்கு தெரிகிறதே அதற்கு என்ன ஸமாதானம்? என்று கேட்கத்தோன்றும். இந்த ஸந்தேஹம் ஏற்படுவதற்கே காரணம் ஜீவன், ஈசுவரன் ஆகிய இவர்களுடைய தத்வத்தை நன்கு அறியாததுதான். இவ்விருவர்களுடைய தத்வத்தைப்பற்றி எல்லா தர்சனகாரர்களும் விசாரித்திருக்கிறார்கள். ஸாதாரணமாக உலகத்தில் ஜீவன், ஈசுவரன் என்கிற சப்தங்களுக்கு முறையே சரீராதிகளோடு இருந்துகொண்டு பாப புண்யங்களைச் செய்துகொண்டு அவைகளின் பலன்களை

அனுபவித்துக்கொண்டு ஈசுவரனுடைய ஆளுகைக்குக்கட்டுப்பட்டு சிறியவனுய் அல்ப ஞானத்தோடு, அல்ப சக்தியோடு, இருப்ப வனே ஜீவன் என்றும், ஜகத்தை ஸ்ருஷ்டி செய்து பரிபாலித்து ஸம்ஹரித்து வருபவராய் ஜீவர்களை நியமனம்செய்து அவரவர்கள் புண்ணிய பாபங்களுக்குத் தக்கபடி ஸுகதுக்க அனுபவங்களைக் கொடுத்துக்கொண்டு ஸர்வக்ஞனுய், ஸர்வ சக்தனுய், ஸர்வ வியாபகனுய் இருப்பவனே ஈசுவரன் என்றும், அர்த்தஞ் சொல்கிறபடியே தார்க்கிகர்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியேதான் அர்த்தம் என்று வைத்துக்கொண்டால் ஜீவனும் ஈசுவரனும் என்றும் வேறுபட்டவர்களே. ஒருநாளும் ஒன்ருக ஆகமாட்டார்கள். ஸாங்க்யர்கள் ஜீவதத்வத்தைப்பற்றி விசாரிக்கும்போது அதன் ஸ்வரூபத்தில் சரீராதிகளோ, ஸுக துக்கங்களோ சேர்ந்தவையல்லவென்றும் அநாத்மாவான பிரகிருதியின் ஸம்பந்தத்தினுல்தான் இவைகள் ஆத்மாவில் இருப்பதாகத் தோன்றுகின்றனவென்றும் வாஸ்தவத்தில் ஆத்மா சுத்தமான சைதன்ய ஸ்வரூபம்தானென்றும் ஆனுல் இந்த சுத்த சைதன்ய ஸ்வரூபம் ஒவ்வொரு ஜீவனுக்கும் தனித்தனியென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். யோகதர்சனத்திலும் இவ்விதமே ஜீவனுடைய தன்மையை சொல்லிவிட்டு அந்த ஜீவர்களுக்குள் ஸர்வக்ஞனுய் ஸர்வசக்தனுய் இதர ஜீவர்களால் உபாஸிக்கத் தகுந்தவனுய் இருப்பவன் ஈசுவரன் என்று சொல்கிறார்கள். இவ்விரு மதங்களிலும் ஜீவர்களுக்குள்ளேயோ ஈசுவரனுக்கோ தனித்தனி சைதன்யம் ஒப்புக்கொள்ளப்படுகிறபடியால் அவர்கள் என்றைக்கும் வெவ்வேறுதான். வேற்றுமையை உண்டாக்கக் கூடிய அம்சங்கள் எல்லாம் அனுத்மாவை சேர்ந்தபடியால், அவ் வம்சங்களை எல்லாம் விலக்கிப் பார்க்கும்போது ஜீவன், ஈசுவரன் இருவருமே சுத்த சைதன்யமென்று ஏற்படும் நிலையில் வித்யாஸத் திற்கு இடமில்லாததினுல் இருவர்களும் வாஸ்தவத்தில் ஒன்றே ஒன்றுதான் என்று உபநிஷத்துக்களைப் பிரமாணமாகக்கொண்ட வேதாந்திகளின் தீர்மானம். உபாதிகளுடன் சேர்த்துப் பார்க்கும் போது வாச்யார்த்தம் என்றும், உபாதிகளை விலக்கிப் பார்க்கும் போது லக்ஷ்யார்த்தம் என்றும், லக்ஷ்யார்த்தத்தில் தோன்றும் வேற்றுமையையும் விலக்கிவிட்டால் ஐக்கியமே என்றும், இங்கு இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டது.] (26)

(அ) உபநிஷத்துக்கள் காட்டும் ஜீவ—ஈசுவர ஐக்யத்தை நிருபணம் செய்கிறார்:—

कार्यकारणवाच्यांशौ जीवेशोर्यौ जहच्च तौ ।
अजहच्च तयोर्लक्ष्यौ चिदंशावेकरूपिणौ ॥ २७ ॥

கார்ய காரண வாச்யாம்ஶௌ ஜீவேஶோ: யௌ ஜஹச்ச தௌ ।
அஜஹச்ச தயோர் லக்ஷ்யௌ சிதம்ஶாவேகரூபிணௌ ॥

**जीवेशोः**–ஜீவனிடத்திலும் ஈசுவரனிடத்திலும், **यौ**–எந்த **कार्यकारण**–அந்தக்கரணம் மாயை என்னும், **वाच्यांशौ**–வாச்யார்த்தத்தின் அம்சங்களோ, **तौ**–அவைகளை, **जहच्च**–விட்டும் **तयोः**–அவ்விரண்டுகளின், **लक्ष्यौ**–லக்ஷ்யங்களான, **चिदंशौ**–சைதன்யாம்சங்களை, **अजहच्च**–விடாமலும் இருந்தால், **एकरूपिणौ**–(ஜீவனும் ஈச்வரனும்) ஒரேஸ்வரூபமாக ஆகின்றனர்.

ஜீவ ஸ்வரூபத்திலுள்ள கார்யரூபமான அந்தக்கரணம் என்னும் வாச்யார்த்தத்தின் அம்சத்தையும் ஈசுவர ஸ்வரூபத்திலுள்ள காரணரூபமான மாயை என்னும் வாச்யார்த்தத்தின் அம்சத்தையும் விட்டு விட்டு இரண்டிலும் லக்ஷ்யாம்சமான சைதன்யத்தைவிடாமலும் இருந்தால் இரண்டிலும் உள்ள சைதன்யம் ஒரே ரூபமாயிருப்பதால் ஐக்யம் ஸித்திக்கிறது.

[கார்யம் என்பது அந்தக்கரணம். அத்துடன் கூடியவன் ஜீவன். காரணம் என்பது மாயை. அத்துடன் கூடியவன் ஈச்வரன். அந்தக்கரணத்துடன் கூடிய சைதன்யம் த்வம்பதத்தின் வாச்யார்த்தம். மாயையுடன் கூடிய சைதன்யம் தத்பதத்தின் வாச்யார்த்தம், வெவ்வேறு உபாதிகள் இருப்பதால் வாச்யார்த்தத்தைக்கொண்டு இரண்டும் ஒன்று என்பது பொருந்தாது. ஒரு மனிதனைப் பார்த்து 'இவன் ஸிம்மம்' என்று சொன்னால் மனிதன் ஒருக்காலும் ஸிம்மமாக இருக்க முடியாததலால் ஸிம்ஹ சப்தத்திற்கு வாச்யார்த்தமாயிருக்கிற மிருகமென்பதை விட்டு விட்டு அதனிடமுள்ள பலம் சௌர்யம், காம்பீர்யம் முதலான குணங்களை மாத்திரம் வைத்துக்கொண்டு அவைகள் இவனிடமிருப்பதால் இவனை ஸிம்ஹம் என்று வியவஹரிப்பது லக்ஷணையாகும். அவ்வித லக்ஷணையில் சிலஸமயம் வாச்யார்த்தத்தை விட்டு விட்டு அதற்கு ஸம்பந்தப்பட்ட மற்றொரு பதார்த்தத்தை குறிக்கும்படி ஏற்படும் "காசி கங்கையில் இருக்கிறது" என்றால் கங்கை என்பதற்கு வாச்யார்த்தமான ஜலப்

பிரவாஹத்தில் காசி இருக்கமுடியாததினால் கங்கையென்றால் கங்கைக்கரை என்று சொல்லவேண்டியிருக்கிறது. இங்கே ஜலப்பிரவாஹம் என்ற முக்யார்த்தத்தை விட்டுவிடுகிறபடியால் இந்த லக்ஷணையை ஜஹத் லக்ஷணை (விட்ட லக்ஷணை) என்பார்கள். "சிகப்பு பறக்கிறது" என்று சொல்லும்போது சிகப்பு என்பதின் வாச்யார்த்தமான நிறம் தனித்துப் பறக்க முடியாததினால் 'சிகப்புக்கொடி' என்று சொல்லவேண்டிவரும் இங்கே சிகப்பை விடாமலே சிகப்புக்கொடி என்று அர்த்தம் செய்வதால் இந்த லக்ஷணையை அஜஹத் லக்ஷணை (விடாத லக்ஷணை) என்பார்கள். "காசியில் இரண்டு வருஷங்களுக்குமுன் கிருஹஸ்தராகப் பார்த்த அவர்தான் இங்கே இப்பொழுது இருக்கும் ஸன்யாஸி" என்று சொன்னால் முன்னுள்ள தேசம் காலம் அவஸ்தையெல்லாம் இப்பொழுதுள்ள தேசம் காலம் அவஸ்தை இவைகளுடன் முரண்படுகிறபடியால் அவ்வம்சங்களை விலக்கி இரண்டிலும் பொதுவாயுள்ள வியக்தியைமாத்திரம் கிரஹிக்கவேண்டியிருக்கிறது. அதாவது வாச்யார்த்தமான தேசாதிகளை விட்டு விட்டும், இவ்விரண்டிற்கும் பொதுவாயுள்ள வியக்தியை விட்டு விடாமலும் இருப்பதால், இந்த லக்ஷணையை ஜஹத் அஜஹத் லக்ஷணை, (விட்டும் விடாமலுமுள்ள லக்ஷணை) என்பார்கள் பிரகிருதத்தில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் அபேதத்தைச் சொல்லும் வாக்கியங்களில் வாச்யார்த்தமான அந்தக்கரணம், மாயை இவைகளை விட்டு விட்டும், இரண்டிற்கும் பொதுவான சைதன்யத்தை விட்டு விடாமலும், அர்த்தம் செய்யவேண்டி இருப்பதால், இந்த மூன்றாவதான லக்ஷணையையே உபயோகிக்க வேண்டும். அப்பொழுதுதான் இருவருக்கும் அபேதம் ஸித்திக்கும். அவ்விதமாகத்தான் வேதாந்தத்தில் ஐக்யம் சொல்லப்பட்டிருக்கிறது] (27)

(அ) இவ்வித ஜீவேசுவர ஐக்யத்தை போதிக்க வேதாந்தம் எதற்காக? மற்ற சாஸ்திரங்கள் மூலமாக அறியமுடியாதா வென்றால், முடியாதென்பதை மேல் இரண்டு சுலோகங்களினால் காட்டுகிறார்:—

कर्मशास्त्रे कुतो ज्ञानं तर्के नैवास्ति निश्चयः ।
सांख्ययोगौ भिदापन्नौ शाब्दिकाः शब्दतत्पराः ॥ २८ ॥

கர்ம ஶாஸ்த்ரே குதோ ஞானம் தர்க்கே நைவாஸ்தி நிச்சய: |
ஸாங்க்ய யோகௌ பிதாபந்நௌ ஶாப்திகா: ஶப்ததத்பரா: ||

**कर्मशास्त्रे**—கர்மாவை போதிக்கும் சாஸ்திரத்தில், **कुतः**—எப்படி, **ज्ञानं**—ஞானம் (ஏற்படும்?) **तर्के**—தர்க்க சாஸ்திரத்தில் **निश्चयः**—தீர்மானமானது, **न एव अस्ति**—கிடையவே கிடையாது. **सांख्ययोगौ**—ஸாங்க்ய சாஸ்திரமும் யோக சாஸ்திரமும், **भिदापन्नौ**—வேற்றுமையை ஒப்புக்கொண்டவைகள், **शाब्दिकाः**—சப்த விஷயமான வியாகரண சாஸ்திரத்தை அனுஸரிப்பவர்கள், **शब्दतत्पराः**—சப்தத்திலேயே ஈடுபட்டவர்கள்.

கர்ம சாஸ்திரம் கர்மாவைப்பற்றியே உபதேசிப்பதாலும், தர்க்க சாஸ்திரத்தின் மூலம் ஒருவிதத்தீர்மானமும் ஏற்பட முடியாதபடியாலும் ஸாங்க்ய சாஸ்திரமும் யோக சாஸ்திரமும் வேற்றுமையை ஒப்புக்கொண்டுள்ளபடியாலும், சப்த சாஸ்திரம் சப்தத்திலேயே ஈடுபட்டிருப்பதாலும் இந்த சாஸ்திரங்கள் மூலம் ஐக்ய ஞானம் ஏற்பட வழியில்லை.

[ஆத்மாவை கர்த்தாவென்றும் போக்தாவென்றும் ஒப்புக்கொண்டால்தான் அவனைப்பார்த்து இதைச் செய், இந்த பலனை அடைவாய் என்று சொல்லமுடியும். அவ்விதம் கட்டளையிடும் சாஸ்திரம் மூலம் கர்த்தாவும் போக்தாவுமல்லாத சுத்த சைதன்ய ரூபமான ஆத்மாவின் ஞானம் ஏற்படுவதற்கு இடமேயில்லை. தர்க்கத்தை எடுத்துக்கொண்டால் ஒருவன் தன் யுக்தியினால் ஒருவிதமாகத் தீர்மானம் செய்தாலும் அவனுக்குமேல் புத்திசாலியாயுள்ள மற்றொருவன் அந்தத்தீர்மானம் யுக்திக்குப் பொருந்தாது என்று காட்டிவிடமுடியும். ஆகையால் தர்க்க சாஸ்திரத்தின் உதவியைக்கொண்டு மாற்ற முடியாத ஒரு முடிவிற்கு வருவது ஸாத்தியமாகாது. ஸாங்க்யமும் யோகமும் முன் சொன்னபடி ஜீவனும் ஈசுவரனும் வெவ்வேறு என்றே வைத்துக்கொண்டிருப்பதால் இவ்விருவர்களும் அபேதத்தை போதிக்க முடியாது. சப்த சாஸ்திரத்தில் ஈடுபட்டவர்கள் வார்த்தைகளுடைய வ்யுத்பத்தியுடன் நின்றுவிடுவார்களே தவிர அர்த்த விசாரத்தில் இறங்குவதில்லை. ஆகவே இந்த சாஸ்திரங்கள் மூலம் அபேத ஞானத்தை அடையமுடியாது] (28)

**अन्ये पाषण्डिनः सर्वे ज्ञानवार्तासुदुर्लभाः ।**
**एकं वेदान्तविज्ञानं स्वानुभूत्या विराजते ॥ २९ ॥**

**அந்யே பாஷண்டிநः ஸர்வே ஞாநவார்த்தா ஸுதுர்லபா: ।**
**ஏகம் வேதாந்தவிக்ஞாநம் ஸ்வாநுபூத்யா விராஜதே ॥**





**अन्ये**—மற்ற, **सर्वे**—எல்லாரும், **पाषण्डिनः**—பாஷண்டிகள், **ज्ञानवार्तासुदुर्लभाः**—அவர்களுக்கு ஞானம் என்ற பேச்சே வெகு துர்லபம். **वेदान्तविज्ञानं**—வேதாந்தத்திலுல் அறியப்படும் ஞானம், **एकं**-ஒன்றுதான், **स्वानुभूत्या**-தன்னுடைய அனுபவத்திற்கு விஷயமாகி, **विराजते**—பிரகாசிக்கின்றது

மற்ற எல்லாரும் பாஷண்டிகள். அவர்களுக்கு ஞானம் என்ற பேச்சே வெகு துர்லபம். வேதாந்தத்தினுல் அறியப்படும் ஞானம் ஒன்றுதான் தன்னுடைய அனுபவத்திற்கு விஷயமாகி பிரகாசிக்கிறது.

[வேதம் பிரமாணம் என்று ஒப்புக்கொள்ளும் ஆஸ்திகர்களான சாஸ்திரகாரர்களே ஜீவேசுவர ஐக்கிய ஞானத்தையடைய முடியாதென்ருல், வேதவிருத்தமான மார்க்கங்களில் இருந்து வருகிறவர்களுக்கு இந்த ஞானம் வெகு துர்லபமேயாகும். ஆகவே வேதாந்தம் மூலம் தான் ஐக்யஞானம் உண்டாகும் அதுதான் ஸ்வானுபவத்துடன் விளங்கும்] (29)

(அ) இவ்விதம் வேதாந்தத்திலுல் போதிக்கப்பட்டு ஸ்வானுபவத்திலுல் ஸாக்ஷாத்கரிக்கப்படும் ஞானத்தின் ஸ்வரூபம் மேல் சுலோகங்களில் விவரிக்கப்படுகிறது :—

**अहं ममेत्ययं बन्धो ममाहं नेति मुक्तता ।**
**बन्धमोक्षौ गुणैर्भातो गुणाः प्रकृतिसंभवाः ॥ ३० ॥**

அஹம் மமேத்யயம் பந்தோ மமாஹம் நேதி முக்ததா ‖
பந்த மோக்ஷௌ குணைர் பாதோ குணா: ப்ரக்ருதி
ஸம்பவா: ‖

**अहं**—நான், **मम**—என்னுடையது, **इति**—என்று, **अयं**—(உள்ள) இது, **बन्धः**—பந்தமாகும். **मम**—என்னுடையது, **अहं**—நான் (ஆகிய இரண்டும்), **न**-இல்லை, **इति**—என்ருல், **मुक्तता**-விடுபட்ட தன்மையாகும், **बन्धमोक्षौ**-பந்தமும் மோக்ஷமும், **गुणैः**—குணங்களினுல்தான், **भातः**—தோன்றுகின்றன. **गुणाः**—அக்குணங்கள், **प्रकृतिसंभवाः**—பிரகிருதியினுல் ஏற்பட்டவைகள்.

∴ ஆத்மாவல்லாத் வஸ்துக்களை நான் என்றும் என்னுடையது என்றும் எண்ணுவது தான் பந்தமாகும். இவ்விரண்டும் நீங்கி விட்டால் அதுவே முக்தியாகும் மாயையினுல் ஏற்பட்ட குணங் களால்தான் இந்த பந்த மோக்ஷங்கள் தோன்றுகின்றன.

[நான் அல்லாத சரீராதிகளில் நான் என்றும், அதையொட்டி வெளிப்பதார்த்தங்களில் என்னுடையது என்றும், தோன்று வதினுல் தான் ஸம்ஸாரபந்தம் ஏற்படுகிறது. இவ்விரண்டுவிதத் தோற்றங்களும் இல்லையானுல் பந்தத்திலிருந்து விடுதலை. பந்த மோக்ஷங்களுக்கும் அவைகளின் நிமித்தமான தோற்றங்களுக்கும் காரணம் பிரகிருதியின் அம்சங்களாகிய ஸத்வம், ரஜஸ், தமஸ், என்கிற முக்குணங்களேயாகும். அக்குணங்களுக்குக்கட்டுப்படா மலிருந்துவிட்டால் பந்தமோக்ஷமென்ற வியவஸ்தையே விலகி விடும்.] (30)

ज्ञानमेकं सदा भाति सर्वावस्थासु निर्मलम् ।
मन्दभाग्या न जानन्ति स्वरूपं केवलं बृहत् ॥ ३१ ॥

ஞாநமேகம் ஸதா பாதி ஸர்வாவஸ்த்தாஸு நிர்மலம் |
மந்தபாக்யா ந ஜாநந்தி ஸ்வரூபம் கேவலம் ப்ருஹத் ||

ज्ञानं–ஞானமானது, एकं–ஒரேவிதமாய், निर्मलं–நிர்மல மாய், सर्वावस्थासु–எல்லா நிலைகளிலும், सदा–எப்பொழுதும், भाति-பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. (இவ்விதம் பிரகாசிக் கிற), केवलं–தனித்து உள்ள, बृहत्–பெரியதான, स्वरूपं– தன்னுடைய ஸ்வரூபத்தை, मन्दभाग्याः- பாக்யமில்லாத வர்கள், न जानन्ति-அறிகிறதில்லை.

ஞானமானது ஒரேவிதமாய் நிர்மலமாய் எல்லா நிலைகளிலும் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. இவ்விதம் பிரகாசிக்கிற தனித்து உள்ள பெரியதான தன்னுடைய ஸ்வரூபத்தை பாக்யமில்லாதவர்கள் அறிகிறதில்லை.

[நமக்கு எப்பொழுதும் எல்லாநிலைகளிலும் ஏதாவதொரு ஞானம் ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கிறது. ஏதாவதொரு விஷயத்தை அறிந்துகொண்டு தானிருக்கிறோம். ஆனுல் இந்த ஞானம் தொடர்ச்சியாக இல்லாமலும் மற்றதுடன் சேர்ந்தும் தான் இருக்கிறது பாக்யமுள்ளவர்களுக்கு இந்த ஞானம் ஒரே

ஷித்தமாய் பரிசுத்தமாய் ஒன்றுடனும் சேராமல் தனித்து அகண்டமாக பிரகாசிக்கிறது பாக்யமில்லாதவர்களுக்கு இம்மாதிரி பிரகாசிப்பதில்லை.] (31)

संकल्पसाक्षि यज्ज्ञानं सर्वलोकैकजीवनम् ।
तदेवास्मीति यो वेद स मुक्तो नात्र संशयः ॥ ३२ ॥

ஸங்கல்ப ஸாக்ஷி யத் ஞானம் ஸர்வலோகைக ஜீவனம் ।
ததேவாஸ்மீதி யோ வேத ஸ முக்தோ நாத்ர ஸம்ஶய: ॥

**संकल्पसाक्षि**–மனதில் தோன்றும் எண்ணங்களையெல்லாம் ஸாக்ஷியாயிருந்து பார்த்துக்கொண்டும், **सर्वलोकैकजीवनम्**–எல்லா பிராணிகளையும் உயிர்ப்பித்துக்கொடுக்கும் ஒரே காரணமாயும் இருக்கிற, **यत्**–எந்த, **ज्ञानं**–ஞானஸ்வரூபமான ஆத்மா உண்டோ, **तत् एव**–அதுவாகவே, **अस्मि**–நான் இருக்கிறேன், **इति**–என்று, **यः**–எவன், **वेद**–அறிகிறானோ, **सः**–அவன், **मुक्तः**–விடுபட்டவன். **अत्र**–இந்த விஷயத்தில், **संशयः**–ஸந்தேஹம், **न**–கிடையாது.

மனதில் தோன்றும் எண்ணங்களையெல்லாம் ஸாக்ஷியாயிருந்து அறிந்துகொண்டு எல்லா பிராணிகளும் ஜீவிப்பதற்கு ஒரே காரணமாக இருக்கிற ஞான ஸ்வரூபமான ஆத்மாவாகவே நான் இருக்கிறேன் என்று அறிகிறவன் விடுபட்டவன், இந்த விஷயத்தில் ஸந்தேஹம் கிடையாது. (32)

(அ) ஆத்ம ஸ்வரூபத்தையறிகிறவன் முக்தன் என்று சொன்னபடியால் அந்த ஸ்வரூபத்தை அறிவதற்கு என்ன ஸாதனம் என்ற கேள்வி பிறக்கிறது. அது ஸ்வயம்பிரகாசமானதினால் அதை அறிய ஸாதனங்களுடைய அபேக்ஷை கிடையாது. மற்ற பதார்த்தங்களை அறிவதற்கும் ஆத்மாவை அறிவதற்கும் வித்யாஸம் உண்டு என்பதை மேலால் எடுத்துக் காட்டுகிறார்:—

प्रमाता च प्रमाणं च प्रमेयं प्रमितिस्तथा ।
यस्य भासाऽवभासन्ते मानं ज्ञानाय तस्य किम् ॥ ३३ ॥

ப்ரமாதா ச ப்ரமாணம் ச ப்ரமேயம் ப்ரமிதிஸ் ததா ।
யஸ்ய பாஸாऽவபாஸந்தே மானம் ஞானாய தஸ்ய கிம் ॥

प्रमाता च–அறிகிறவனும், प्रमाणं च–அறிவின் ஸாதனமும், प्रमेयं–அறியப்படும் விஷயமும், तथा–அப்படியே; प्रमितिः–அறிகிறதென்ற புத்தியின் விருத்தியும், यस्य–எவருடைய, भासा–பிரகாசத்தினால், अवभासन्ते–பிரகாசிக்கின்றனவோ, तस्य–அவருடைய, ज्ञानाय–ஞானத்தை யுத்தேசித்து, मानं–அறிவின் ஸாதனம், किं–என்ன இருக்கமுடியும்?

அறிகிறவன், அறிவின் ஸாதனங்கள், அறியப்படும் விஷயம் அறிவு அதாவது புத்திவிருத்தி இவைகளெல்லாவற்றையுங்கூட பிரகாசப்படுத்துகிற ஞான ஸ்வரூபமான ஆத்மாவை அறிந்து கொள்ள அவரைத்தவிற வேறு என்ன ஸாதனம் இருக்க முடியும்?

[ஒரு இருட்டு அறையிலுள்ள பதார்த்தத்தைப்பார்ப்பதற்காக வெளிச்சம் தேவைப்படுகிறது. அவ்வெளிச்சத்தினால் பார்க்கிறவன், விளக்கு, பார்க்கப்படும் பதார்த்தம், வெளிச்சம் பதார்த்தத்தின் பேரில் பட்டிருப்பது, என்கிற நான்கு அம்சங்களும் தெரிகின்றன. பார்க்கப்படவேண்டிய பதார்த்தம் வெளிச்சமாகவேயிருந்தால், அதைப்பார்க்க வேறு வெளிச்சம் வேண்டியதில்லை. ஒரு அறையில் தீபம் எரிகிறதா என்று பார்ப்பதற்கு அந்த தீபத்தின் பேரில் பட்டு அதை விளங்கும்படி செய்வதற்கு வேறு வெளிச்சம் தேவையில்லை. அப்படியே ஆத்மாவல்லாத ஜடமான பதார்த்தங்களை அறிவதற்கு ஆத்மாவின் வெளிச்சம் தேவை. ஞான ஸ்வரூபமான ஆத்மாவையே பார்க்கவேண்டுமானால் அது ஸ்வயம்பிரகாசமானதினால் அதற்கு ஸாதனம் தேவையேயில்லை.] (33)

अर्थाकारा भवेद् वृत्तिः फलेनार्थः प्रकाशते ।
अर्थज्ञानं विजानाति स एवार्थः प्रकाशते ॥ ३४ ॥

அர்த்தாகாரா பவேத் வ்ருத்திः பலேநார்த்தः ப்ரகாஶதே ।
அர்த்த ஜ்ஞாநம் விஜாநாதி ஸ ஏவார்த்தः ப்ரகாஶதே ॥

वृत्तिः–புத்தியினுடைய விருத்தியானது (விஷயத்தை நோக்கிச்சென்று), अर्थाकारा–விஷயத்தின் ஆகாரத்தையே எடுத்துக்கொண்டதாக, भवेत्–ஆகும். फलेन–சைதன்யத்தால், अर्थः–விஷயமானது, प्रकाशते–தெரிகிறது अर्थज्ञानं–

விஷய ஞானமானது தனக்கு ஏற்பட்டிருக்கிறதென்பதை, विजानाति-நன்கு அறிகிருன். अर्थः-விஷயம், प्रकाशते-பிரகாசிக்கிறது என்பது, स एव-அதுவேதான்.

அந்தக்கரணமானது விஷயத்தை நோக்கிச்சென்று விஷயத்தின் ஆகாரத்துடன் கூடினதாக ஆகிறது. சைதன்யத்தால் விஷயம் பிரகாசிக்கிறது பிறகு தனக்கு விஷயஞானம் ஏற்பட்டிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்கிருன். இதுதான் விஷயம் ப்ரகாசிக்கிறது என்பது.

[உலகில் ஒவ்வொரு நிமிஷமும் நாம் எத்தனையோ பொருள்களைப் பார்த்துத் தெரிந்துகொள்கிரேும். நாம் கண்ணுல் பார்க்காதவரை நமக்குத்தெரியாமலிருந்த பொருளை நாம் கண்ணுல் பார்த்ததும் அறிந்து கொள்கிரேும். அப்பொழுது இது குடம் என்ற அறிவு நமக்கு ஏற்படுகிறது. இதை இந்த சுலோகத்தில் விவரித்துக்காட்டுகிருர். அதாவது நாம் கண்ணுல் குடத்தைப் பார்த்ததும் நம்முள் இருக்கிற மனமானது கண்வழியாக வெளியில் சூரியகிரணம்போல் நீண்டு சென்று குடத்தை வியாபித்து குடத்தின் உருவத்தை அடைந்துவிடுகிறது. நதியிலுள்ள நீர் வாய்க்கால் வழியாகச்சென்று வயலை அடைந்து வயல் முழுவதும் பரவி வயலின் ஆகாரத்தை அடைந்துவிடுகிறதல்லவா! இதையே திருஷ்டாந்தமாக எடுத்துக்கொள்ளலாம். விஷயாகாரத்தை அந்தக்கரணம் அடைவதைத்தான் அந்தக்கரண விருத்தி என்று சொல்கிருர்கள். இந்த விருத்தியினுல் ஆவரணம் அதாவது மறைவு நீங்குகிறது அதன்பிறகு ப்ரகாசரூபமான சைதன்யத்தால் குடம் நமக்குத் தெரியவருகிறது. 'இது குடம்' என்று சொல்கிரேும். 'குடத்தை நான் அறிகிறேன்' என்றும் சொல்கிரேும், இதுபோலவேதான் எல்லா விஷயங்களிலும். இதுதான் விஷயத்தை அறிந்துகொள்வது என்பது] (34)

वृत्तिव्याप्यत्वमेवास्तु फलव्याप्तिः कथं भवेत् ।
स्वप्रकाशस्वरूपत्वात् सिद्धत्वाच्च चिदात्मनः ॥ ३५ ॥

வ்ருத்திவ்யாப்யத்வமேவாஸ்து பலவ்யாப்தி: கதம் பவேத் ।
ஸ்வப்ரகாஶ ஸ்வரூபத்வாத் ஸித்தத்வாச்ச சிதாத்மந: ॥

(ஆத்மஞான விஷயத்தில்), वृत्तिव्याप्यत्वं एव-விருத்தியினுல் வியாபிக்கப்படும் தன்மை மாத்திரம், अस्तु-இருக்

கட்டும். फलव्याप्तिः-சைதன்யத்தால் வியாபிக்கிறது என்பது, कथं-எப்படி, भवेत्-இருக்கமுடியும்? चिदात्मनः-ஞானஸ்வரூபனான ஆத்மா, स्वप्रकाशस्वरूपत्वात्-ஸ்வயம் ப்ரகாசஸ்வரூபனாயும், सिद्धत्वात् च-ப்ரஸித்தனாயும் இருப்பதால்.

*ஆத்மாவின் ஸ்வரூபம் ஸ்வயம் ப்ரகாசமாயும் ஏற்கெனவே பிரஸித்தமாயும் இருப்பதால் அதில் விருத்தி வ்யாப்தி மட்டும் தான். அதில் சைதன்ய வ்யாப்தி எப்படி இருக்கமுடியும்?*

[உலகிலுள்ள எந்த ஜடப்பொருளையும் நாம் தெரிந்து கொள்வதற்கு விருத்தி வ்யாப்தி பலவ்யாப்தி இரண்டும் வேண்டும். அந்தக்கரணம் விஷயமிருக்குமிடம் சென்று விஷயம் முழுவதும் பரவி விஷயாகாரத்தை அடைவது விருத்தி வ்யாப்தி என்பது. சைதன்ய ஸம்பந்தம் பலவ்யாப்தியாகும். இவற்றில் விருத்தி வ்யாப்தியால் ஆவரணம் நீங்குகிறது. பல வியாப்தியால் ஜடமான பொருள் நமக்குத் தெரியவருகிறது. ஆத்மாவை நாம் தெரிந்துகொள்வதற்கு விருத்தி வியாப்திமட்டும் போதும். பல வ்யாப்தி தேவையில்லை. ஏனெனில் ஆத்மாவை நமக்குத் தெரியவொட்டாமல் மறைத்துக்கொண்டிருக்கும் ஆவரணம் நீங்க அந்தக்கரண விருத்தி வ்யாப்தி அவசியம் வேண்டியதுதான். மறைவு நீங்காதவரை ஆத்மா நமக்குத்தெரியாதல்லவா. ஆனாலும் ஆத்மா சைதன்ய ரூபமாய் ஸ்வயம்ப்ரகாசமாய் ப்ரஸித்தமாய் இருப்பதால் வேறொரு சைதன்ய வ்யாப்தி வேண்டியதில்லை. சைதன்யமல்லாத ஜடவஸ்துவைத் தெரிந்து கொள்ளத்தான் சைதன்ய வியாப்தி வேணுமே தவிற, சைதன்யத்தையே தெரிந்து கொள்ள அதுவேண்டாம். இருட்டில் திரைக்குள் இருக்கும் பொருளைப்பார்க்க திரையை நீக்கினால் மட்டும் போதாது. வெளிச்சமும் வேண்டும். ஆனால் திரைக்குள் இருக்கும் வெளிச்சத்தைப்பார்க்க திரையை நீக்கினால் மட்டும் போதும். வேறு வெளிச்சத்தின் உதவி வேண்டாம்.] (35)

चित्तं चैतन्यमात्रेण संयोगाच्चेतनं भवेत् ।

अर्थादर्थान्तरे वृत्तिर्गन्तुं चलति चान्तरे ।
निराधारा निर्विकारा या दशा सोन्मनी स्मृता ॥ ३६ ॥

சித்தம் சைதன்யமாத்ரேண ஸம்யோகாத் சேதநம் பவேத் I

அர்த்தார்த்தாந்தரே வ்ருத்திர் கந்தும் சலதி சாந்தரே I
நிராதாரா நிர்விகாரா யா தஶா ஸோந்மநீ ஸ்ம்ருதா II

चित्तं–புத்தியானது, चैतन्यमात्रेण–சுத்த சைதன்யத்தோடு மட்டும், संयोगात्–சேருவதினால், चेतना–அறிவுள்ளதாக भवेत्–ஆகும். वृत्तिः–புத்தி விருத்தியானது, अर्थात्–ஒரு விஷயத்திலிருந்து, अर्थान्तरे–வேறு விஷயத்தில், गन्तुं–போவதற்காக, चलति–அசைகிறது. अन्तरे च–(ஒரு விருத்திக்கும் வேறு விருத்திக்கும்) மத்தியில், निराधारा–எவ்வித விஷயத்தையும் ஆசிரயிக்காமல், निर्विकारा–தான் மாறுதலுமடையாமல் இருக்கும், दशा–நிலை, या–எதுவோ, सा–அது, उन्मनी–" உன்மனீ " (மனஸிற்கு மேலானது) என்று, स्मृता–எண்ணப்படுகிறது.

புத்தியானது சுத்த சைதன்யத்தோடு சேருவதினால் தான் அறிவுள்ளதாக ஆகும் புத்தி விருத்தியானது ஒரு விஷயத்திலிருந்து வேறு விஷயத்திற்குப் போவதற்காக அசைகிறது. ஒரு விருத்திக்கும் வேறு விருத்திக்கும் மத்தியில் எவ்வித விஷயத்தையும் ஆசிரயிக்காமல், தான் மாறுதலுமடையாமல், இருக்கும் நிலை எதுவோ அது " உன்மனீ " மனஸிற்குமேலானது என்று எண்ணப்படுகிறது.

[ எறிக்கப்படும் தன்மையோடு கூடின விறகு எறிக்கும் தன்மையுள்ள அக்னியோடு சேரும்போது, தானும் வேறு விறகை எறிக்கும் தன்மையை அடைவதுபோல், அறியப்படும் தன்மையுள்ள ஜடமான சித்தம் ஞான ஸ்வருபமான ஸ்வயம் பிரகாசமான ஆத்ம சைதன்யத்தோடு சேரும்போது, தானும் மற்ற ஜடபதார்த்தங்களை அறியும் தன்மையுள்ளதுபோல் தோன்றுகிறது. அதற்கு ஸ்வபாவமாக அறியும் தன்மைகிடையாது. ஆத்மாவிற்குள்ள அறியும் தன்மை ஸ்வபாவ ஸித்தமாயிருப்பதால் இன்னொரு பதார்த்தத்தின் சேர்க்கையை அபேக்ஷிக்கிறதில்லை. அது எப்பொழுதும் ஒரேவிதமாய்த்தான் இருக்கும். வியாபகமாயும் இருக்கும். புத்தி விருத்தி தான் சிறியதாயிருப்பதால் ஏககாலத்தில் பல விஷயங்களை கிரஹிக்க யோக்கியதை

இல்லாதபடியால் ஒவ்வொன்ருய் விஷயீகரிக்க வேண்டியிருக்கிறது. ஆத்மாவிற்கு அப்படியல்ல. ஒரு விருத்தி அடங்கி இன்னெரு விருத்தியேற்படுவதற்கு முன்னுள்ள இடைவெளியில் நிர்விஷயமாய் பிரகாசிக்கும் ஆத்மா நன்கு தெரியவரும். ஆனல் ஸாதாரணமாக அந்த இடைவெளி ஒரு க்ஷணம்தான் இருக்கும். அதையே அப்யாஸத்தினல் நீடிக்கும்படிச்செய்து மனஸை விஷய மற்று நிறுத்தினல் அந்த நிலையை உன்மனீ தசை என்பார்கள்] (36)

चित्तं चिदिति जानीयात् तकाररहितं यदा ।
तकारो विषयाध्यासो जपारागो यथा मणौ ॥ ३७ ॥

சித்தம் சிதிதி ஜாநீயாத் தகார ரஹிதம் யதா ।
தகாரோ விஷயாத்யாஸோ ஜபாராகோ யதா மணௌ ॥

चित्तं–சித்தம், यदा–எப்பொழுது, तकाररहितं–"த" என்ற அக்ஷரம் இல்லாமல் போகிறதோ அப்பொழுது அதை, चित् इति–"சித்" என்று, जानीयात्–அறியவும். (சித்தை சித்தமாக ஆக்குகிற), तकारः–"த" என்ற அக்ஷரம், विषयाध्यासः–விஷயத்தோடு ஒன்ருய்த்தோன்றும்படி கலப்பது என்பதை குறிக்கும். यथा–எப்படி, मणौ–சுத்தமான ஸ்படிகமணியில், जपारागः–ஜபாபுஷ்பத்தின் (செம்பரத்தம்பூவின்) வர்ணம் தோன்றுகிறதோ (அதேமாதிரி).

சித்தம் எப்பொழுது "த" என்கிற அக்ஷரம் இல்லாமல் போகிறதோ அப்பொழுது அதை "சித்" என்று அறியவும். சித்தை சித்தமாக ஆக்குகிற "த" என்ற அக்ஷரம் விஷயத்தோடு ஒன்ருய்த்தோன்றும்படி கலப்பது என்பதை குறிக்கும். எப்படி சுத்தமான ஸ்படிகமணியில் ஜபா புஷ்பத்தின் வர்ணம் தோன்றுகிறதோ அதே மாதிரி.

[சித்தத்தில் விஷயம் தோன்ருமலிருந்தால் அதுவே சுத்த சைதன்யமான சித் ஆகும் என்று சப்த சமத்காரத்தினல் இங்கு போதிக்கிருர்.] (37)

ज्ञेयवस्तुपरित्यागात् ज्ञानं तिष्ठति केवलम् ।
त्रिपुटी क्षीणतामेति ब्रह्मनिर्वाणमृच्छति ॥ ३८ ॥

ஜ்ஞேய வஸ்து பரித்யாகாத் ஞாநம் திஷ்ட்டதி கேவலம் ।
த்ரிபுடீ க்ஷீணதாமேதி ப்ரஹ்ம நிர்வாணம் ருச்சதி ॥

ज्ञेयवस्तुपरित्यागात्-அறியப்படும் பதார்த்தத்தை விட்டு விட்டால், ज्ञानं-ஞானம், केवलं-தனித்து, तिष्ठति-நிற்கும். त्रिपुटी-அறிகிற ஞாதா, அறியப்படும் ஜ்ஞேயம், அறிகிற கிரியையான ஞானம், இம்மூன்றும், क्षीणतां-நாசமடைந்த நிலையை, एति-அடைந்துவிடும். அப்பொழுது, ब्रह्मनिर्वाणं-பிரஹ்மானந்தத்தை, ऋच्छति-அடைகிருன்.

அறியப்படும் பதார்த்தத்தை விட்டு விட்டால் ஞானம் தனித்து நிற்கும். அறிகிற ஞாதா, அறியப்படும் ஜ்ஞேயம், அறிகிற கிரியையான ஞானம், இம்மூன்றும் நாசமடைந்துவிடும். அப்பொழுது பிரஹ்மானந்தத்தை அடைகிருன்.

[ஸூர்ய வெளிச்சத்தில் ஒரு பதார்த்தத்தை வைத்தால், ஸூர்யன் அதை பிரகாசப்படுத்துகிறவர், அது பிரகாசப் படுத்தப்பட்ட வஸ்து, பிரகாசப்படுத்துகிறதென்ற வியாபாரம், ஆக மூன்றும் ஏற்படும். இதையே த்ரிபுடீ என்பார்கள். வெளிச் சத்திலிருந்து அப்பதார்த்தத்தை எடுத்துவிட்டால் இம்மூன்று வியவஹாரங்களும் நின்றுவிடும். இவ்வியவஹாரங்கள் நின்றாலும் ஸூர்யன் எப்பொழுதும்போல் பிரகாசித்துக்கொண்டேயிருப்ப தால் அவருடைய பிரகாச ஸ்வரூபத்திற்கு எவ்விதக் குறைவும் கிடையாது. அது முன்போல் வியாபகமாகவே இருந்துவரும். அதுபோலவே ஆத்மாவிற்கு அறியப்படும் பதார்த்தம் தோன்ருத தினல் அவருடைய ஸ்வபாவ ஸித்தமான ஞான ஸ்வரூபத்திற்கு எவ்விதக் குறைவும் கிடையாது. அந்த ஸ்வரூபஞானம் வியாபக மாகவே இருக்கும்.] (38)

मनोमात्रमिदं सर्वं तन्मनो ज्ञानमात्रकम् ।
अज्ञानं भ्रम इत्याहुर्विज्ञानं परमं पदम् ॥ ३९ ॥

மநோமாத்ரமிதம் ஸர்வம் தன்மநோ ஞாநமாத்ரகம் ।
அக்ஞானம் ப்ரம இத்யாஹுர் விக்ஞாநம் பரமம் பதம் ॥

इदं-இந்த, सर्वं-எல்லாம், मनोमात्रं-மனஸ்தான். तत्-அந்த, मनः-மனஸ், ज्ञानमात्रकं-அறிவேதான். अज्ञानं-

அறியாமை, भ्रमः-பிராந்தி. विज्ञानं-ஸாக்ஷாத்காரம், परमं-மேலான, पदं-நிலை, इति-என்று, आहुः-சொல்கிறார்கள்.

இந்த ஜகத் எல்லாம் மனஸ்தான். அந்த மனஸ் அறிவே தான், அறியாமை பிராந்தி, ஸாக்ஷாத்காரம் மேலான நிலை, என்று சொல்கிறார்கள்.

[மனஸ் இல்லையானால் இரண்டாவது பதார்த்தம் தோன்றாது. மனஸ் ஸ்வபாவத்தில் ஜடமானபடியால் ஞான ஸ்வரூபனை ஆத்மா இல்லையானால் மனஸ் எதையும் காணமுடியாது. அறியாமையினால் மனஸ்ஸையும் ஆத்மாவையும் ஒன்றுபடுத்தினதினால்தான் ஜகத் தோன்றுகிறது. அந்த அறியாமை நீங்கி சுத்தமான ஆத்ம ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டால் அதற்கு மேல் உத்தமமான நிலை கிடையாது.] (39)

**अज्ञानं चान्यथाज्ञानं मायामेतां वदन्ति ते ।**
**ईश्वरं मायिनं विद्यात् मायातीतं निरञ्जनम् ॥ ४० ॥**

அக்ஞானம் சாந்யதாஞானம் மாயாமேதாம் வதந்தி தே ।
ஈச்வரம் மாயிநம் வித்யாத் மாயாதீதம் நிரஞ்ஜநம் ॥

अज्ञानं च-அக்ஞானமென்பது, अन्यथाज्ञानं-விபரீதமாக அறிந்துகொள்வது, एतां-இதை, मायां-மாயையாக, ते-அவர்கள் (பெரியோர்கள்), वदन्ति-சொல்கிறார்கள். मायिनं-மாயையை உபாதியாயுள்ள சைதன்யத்தை, ईश्वरं-ஈசுவரன் என்றும், मायातीतं-மாயைக்கு அதீதமாயுள்ள சைதன்யத்தை, निरञ्जनम्-சுத்த ப்ரஹ்மம் என்றும், विद्यात्-அறிய வேண்டும்.

விபரீதமாகத் தெரிந்துகொள்வதுதான் அக்ஞானம் என்பது இதையே மாயை என்று பெரியோர்கள் சொல்கிறார்கள். இந்த மாயையைத் தன் வசப்படுத்திக்கொண்டு அத்துடன் கூடியவர் ஈசுவரன். மாயைக்கு அதீதமாயுள்ளது எவ்வித தோஷமுமற்ற சுத்த ப்ரஹ்மம். (40)

(அ) மாயைக்கு உட்பட்டவன் ஜீவன். மாயையோடு கூடி அதைத் தன் வசப்படுத்திக்கொண்டிருப்பவன் ஈசுவரன்.

மாயையின் ஸம்பந்தமில்லாமலிருப்பது சுத்த சைதன்யம் என்ற இவ்விஷயத்தை ஒரு ரூபகத்தினால் விளக்குகிறார் :—

सदानन्दे चिदाकाशे माया मेघस्तडिन्मनः ।
अहंता गर्जनं तत्र धारासारा हि वृत्तयः ॥ ४१ ॥

महामोहान्धकारेऽस्मिन् देवो वर्षति लीलया ।
तस्या वृष्टेर्विरामाय प्रबोधैकसमीरणः ॥ ४२ ॥

ஸதானந்தே சிதாகாசே மாயா மேகஸ் தடின் மந: ।
அஹந்தா கர்ஜநம் தத்ர தாராஸாரா ஹி வ்ருத்தய: ॥

மஹா மோஹாந்தகாரே௨ஸ்மின் தேவோ வர்ஷதி லீலயா ।
தஸ்யா வ்ருஷ்டேர் விராமாய ப்ரபோதைக ஸமீரண: ॥

सदानन्दे—ஸத்தாகவும் ஆனந்தமாகவும், चिदाकाशे—சித்தாகவுமுள்ள ஆகாசத்தில், माया—மாயை என்பது, मेघः—மேகம்; मनः—மனஸானது, तटित्—மின்னல். तत्र—அந்த மேகத்தில், अहंता—அஹங்காரம் என்பது, गर्जनं—கர்ஜனம் (இடி). वृत्तयः हि—புத்தி விருத்திகள் தான், धारासाराः—தாரையாகப்பெய்யும் மழை. अस्मिन्—இந்த, महामोहान्धकारे—மஹாமோஹமாகிற இருட்டில், देवः—ஸ்வயம்ப்ரகாசமான பரமாத்மா लीलया—விளையாட்டாக, वर्षति—பெய்கிறார். तस्याः—அந்த, वृष्टेः—மழை பெய்தல், विरामाय—நிற்பதற்காக, प्रबोधैकसमीरणः—நல்ல ஞானம் என்ற ஒரே காற்றுதான் (உபயோகப்படும்).

[பரிசுத்தமாயிருந்த ஆகாசத்தில் திடீரென்று மேகங்கள் உண்டாகி மின்னலுடனும் இடியுடனும்கூட இருளும் சேர்ந்து மழையைப் பொழிகிறது. மழைக்குக் காரணமான தேவதை தேவேந்திரன். பெருங்காற்று வந்து மேகங்களைச் சிதறடித்து விட்டால் மழை நின்றுவிடுகிறது. இதுபோல் ஸச்சிதானந்த ரூபமான ப்ரஹ்மத்தில் மாயை ஏற்பட்டு அதிலிருந்து மனம், அஹங்காரம், புத்தி விருத்திகள் எல்லாம் ஏற்படுகின்றன. மஹா மோஹமும் சேருகிறது. மாயாவியான பரமாத்மாதான் விளையாட்டாக இவைகளை ஏற்படுத்துகிறார். ப்ரஹ்மஞானத்தால்

தான் இவை நீங்கும். இங்கு ஸச்சிதானந்த ரூபமான ப்ரஹ்மம் ஆகாசம். மாயை மேகம். மனம் மின்னல். அஹங்காரம் இடி. ஈசுவரன் தேவேந்திரன். மனோவிருத்திகள் மழை. மஹா மோஹம் இருள். ப்ரஹ்மஞானம் காற்று.] (41-42)

(அ) அந்த ஞானத்தின் ஸ்வரூபத்தையும் அது இருவகைப் படுமென்பதையும் மேல் சுலோகங்களில் விளக்குகிறார்:—

ज्ञानं दृग्दृश्ययोर्भानं विज्ञानं दृश्यशून्यता ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानाऽस्ति किंचन ॥ ४३ ॥

ஞாநம் த்ருக்த்ருச்யயோர் பாநம் விக்ஞாநம் த்ருச்ய
ஶூந்யதா ।
ஏகமேவாத்வயம் ப்ரஹ்ம நேஹ நாநாऽஸ்தி கிஞ்சந ॥

**दृग्दृश्ययोः**–பார்க்கிற சேதனனான ஆத்மாவும் பார்க்கப் படுகிற ஜடமான பிரபஞ்சமும், **भानं**–தனித்தனியே தோன்று வது, **ज्ञानं**-ஞானம். **दृश्यशून्यता**–பார்க்கப்படும் ஜடமான பிரபஞ்சம் மறைந்துவிடுவது, **विज्ञानं**–விக்ஞானம். (அந்த நிலையில் பார்க்கிறவன் என்ற வியவஹாரமும் இல்லாத தினால்), **अद्वयं**–இரண்டற்றதாக, **ब्रह्म**–பிரஹ்மம், **एकं एव**–ஒன்றுதான் உண்டு. **इह**–இந்த ப்ரஹ்மத்தினிடத்தில், **नाना**–வேற்றுமையானது, **किंचन**–கொஞ்சமேனும், **न अस्ति**–கிடையாது.

1. பார்க்கிற சேதனனான ஆத்மாவும் பார்க்கப்படுகிற ஜடமான பிரபஞ்சமும் தனித்தனியே தோன்றுவது ஞானம். பார்க்கப்படும் ஜடமான பிரபஞ்சம் மறைந்துவிடுவது விக் ஞானம் அந்த நிலையில் பார்க்கிறவன் என்ற வியவஹாரமும் இல்லாததினால் இரண்டற்ற பிரஹ்மம் ஒன்றுதான் உண்டு. இந்த பிரஹ்மத்தில் வேற்றுமையானது கொஞ்சமேனும் கிடையாது. (43)

(அ) ஞானம் என்பது ஸாதாரண ஞானம் என்றும் விக் ஞானம் என்பது விசேஷ ஞானம் என்றும் சொல்லிவிட்டு அந்த பதங்களுக்கே வேறு விதமாகவும் பலவிதமாகவும் பொருள் சொல்லலாமென்பதை மேலால் காட்டுகிறார்:—

क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं तज्ज्ञानं ज्ञानमुच्यते ।
विज्ञानं चोभयोरैक्यं क्षेत्रज्ञपरमात्मनोः ॥ ४४ ॥

க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோர் ஞானம் தத்ஞானம் ஞாநமுச்யதே ।
விக்ஞாநம் சோபயோரைக்யம் க்ஷேத்ரக்ஞ பரமாத்மநோ: ॥

क्षेत्रक्षेत्रज्ञयोः-தேஹாதிகளான க்ஷேத்திரத்தையும் அதையறிகிற க்ஷேத்திரக்ஞனையும், ज्ञानं-அறிவது எதுவோ तत्-அந்த, ज्ञानं-அறிவு, ज्ञानं-ஞானம் என்று, उच्यते-சொல்லப்படுகிறது. विज्ञानं च-விக்ஞானமோ, क्षेत्रज्ञपरमात्मनोः-க்ஷேத்திரக்ஞன் பரமாத்மா, उभयोः-இவ்விருவருக்குமுள்ள, ऐक्यं-ஐக்கியம்.

2. தேஹாதிகளான க்ஷேத்திரத்தையும் அதையறிகிற க்ஷேத்திரக்ஞனையும் அறிவது எதுவோ அந்த அறிவு ஞானம் என்று சொல்லப்படுகிறது. விக்ஞானமோ க்ஷேத்திரக்ஞன் பரமாத்மா இவ்விருவருக்குமுள்ள ஐக்கியம்.

[முன் சுலோகத்தில் திருக் (பார்க்கிறவன்) என்று சொல்லியதையே இங்கே க்ஷேத்திரக்ஞன் என்றும், திருச்யம் (பார்க்கப்படும் வஸ்து) என்று சொன்னதையே இங்கே க்ஷேத்ரம் என்றும் சொல்லியிருக்கிறார். முன் சுலோகத்தில் திருச்யத்திற்கு மறைவு சொல்லி பிரஹ்ம பதார்த்தம் மிஞ்சுவதாக சொன்னார். இங்கே திருச்யம் மறைந்ததும் மிஞ்சும் திருக்தான் பிரஹ்மம், வேறில்லை என்பதை எடுத்துக்காட்டுகிறார்.] (44)

परोक्षं शास्त्रजं ज्ञानं विज्ञानं चात्मदर्शनम् ।
आत्मनो ब्रह्मणः सम्यगुपाधिद्वयवर्जितम् ॥ ४५ ॥

பரோக்ஷம் ஶாஸ்த்ரஜம் ஞாநம் விக்ஞாநம் சாத்ம தர்ஶநம் ।
ஆத்மநோ ப்ரஹ்மண: ஸம்யகுபாதி த்வய வர்ஜிதம் ॥

शास्त्रजं-சாஸ்திராப்யாஸத்தினால் ஏற்பட்டு, परोक्षं-பரோக்ஷமாய் (வெளியிலுள்ளதாய்) அறியும் ஞானம், ज्ञानं-ஞானம், आत्मनः-ஆத்மாவினுடையவும், ब्रह्मणः-பிரஹ்மத்

திணுடையவும், सम्यक्-பூராவாக, उपाधिद्वयवर्जितम्-(ஆத்மாவின் உபாதியான அவித்யை, பிரஹ்மத்தின் உபாதியான மாயை ஆகிய) இரண்டு உபாதிகளையும் விலக்கி, आत्मदर्शनं च-(சுத்த சைதன்யஸ்வரூபமான) ஆத்மாவை ஸாக்ஷாத்தாக பார்ப்பது, विज्ञानं-விக்ஞானம்.

3. சாஸ்திராப்பியாஸத்தினல் ஏற்பட்டு பரோக்ஷமாய் வெளியிலுள்ளதாய் அறியும் ஞானம் ஞானம். ஆத்மாவினுடையவும் ப்ரஹ்மத்தினுடையவும் பூராவாக, ஆத்மாவின் உபாதியான அவித்யை, ப்ரஹ்மத்தின் உபாதியான மாயை, ஆகிய இரண்டு உபாதிகளையும் விலக்கி (சுத்த சைதன்ய ஸ்வரூபமாக) ஆத்மாவை ஸாக்ஷாத்தாக பார்ப்பது விக்ஞானம்.

[உபாதிகளை விலக்கினல் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்று மாத்திரம் கிரந்தங்களை வாசித்துத் தெரிந்துகொள்வது ஞானம். உபாதிகளை விலக்கியேவிட்டு சுத்தமான ஆத்மாவை நேராக அனுபவிப்பது விக்ஞானம்.] (45)

त्वमर्थविषयं ज्ञानं विज्ञानं तत्पदाश्रयम् ।
पदयोरैक्यबोधस्तु ज्ञानविज्ञानसंज्ञितम् ॥ ४६ ॥

த்வமர்த்த விஷயம் ஞாநம் விக்ஞாநம் தத்பதாச்ரயம் ।
பதயோரைக்யபோதஸ்து ஞான விக்ஞான ஸம்ஞிதம் ॥

त्वमर्थविषयं-நீ என்கிற பதத்தின் அர்த்தமான ஆத்மாவின் ஸ்வரூபத்தை விஷயமாயுள்ளது, ज्ञानं-ஞானம். तत्पदाश्रयम्-அது என்கிற பதத்தின் அர்த்தமான ஈசுவரனின் ஸ்வரூபத்தை விஷயமாயுள்ளது, विज्ञानं-விக்ஞானம். पदयोः-நீ என்கிற பதம், அது என்கிற பதம், இவ்விரண்டினலும் குறிக்கப்படும் வஸ்து, ऐक्यबोधः तु-ஒன்றுதான் என்று உணர்வதே, ज्ञानविज्ञानसंज्ञितम्-ஞானவிக்ஞானம் எனப்படும்.

4. நீ என்கிற பதத்தின் அர்த்தமான ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்வது ஞானம். அது என்கிற பதத்தின் அர்த்தமான ஈசுவர ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்வது விக்ஞானம். நீ என்கிற பதம் அது என்கிற பதம், இவ்விரண்டினலும் குறிக்கப்

படும் வஸ்து ஒன்றுதான் என்று உணர்வதே ஞானவிக்ஞானம் எனப்படும்.

["தத் த்வம் அஸி" என்கிற மஹாவாக்கியத்தில் த்வம் என்பது ஜீவனையும், தத் என்பது ஈசுவரனையும் அஸி என்பது இரண்டின் ஐக்கியத்தையும் குறிக்கின்றன. அந்த மஹா வாக்கியத்தின் அர்த்தத்தையொட்டி, த்வம் என்ற பதத்தின் அர்த்தத்தை சோதித்து அதன் உள் அர்த்தத்தைத் தெரிந்துகொள்வது ஞானம் என்றும், தத் என்ற பதத்தின் அர்த்தத்தை சோதித்து அதன் உள் அர்த்தத்தை தெரிந்துகொள்வது விக்ஞானம் என்றும், இரண்டு பதங்களின் உள் அர்த்தங்களான பிரத்யகாத்மாவும் பிரஹ்மமும் வாஸ்தவத்தில் ஒன்றுதான் என்று அறிந்துகொள்வது ஞானவிக்ஞானம் என்றும் சொல்லலாம்.] (46)

आत्मानात्मविवेकं च ज्ञानमाहुर्मनीषिणः ।
अज्ञानं चान्यथा लोके विज्ञानं तन्मयं जगत् ॥ ४७ ॥

ஆத்மாநாத்மவிவேகம் ச ஞாநமாஹுர் மநீஷிண: I
அக்ஞானம் சாந்யதா லோகே விக்ஞாநம் தந்மயம் ஜகத் II

**आत्मानात्मविवेकं च**–ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்து அறிவதே, **ज्ञानं**–ஞானம் என்று, **मनीषिणः**–அறிவாளிகள், **आहुः**–சொல்வார்கள். **लोके**–உலகத்தில், **अज्ञानं**–அக்ஞானம் என்பது, **अन्यथा च**–மாற்றி அறிவது (ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரிக்காமல் ஒன்றாகவே கலந்து அறிவது) ஆகும். **जगत्**-பிரபஞ்சமானது, **तन्मयं**–அதினாலேயே (அக்ஞானத்தினாலேயே) ஏற்பட்டது என்று அறிவது, **विज्ञानं**-விக்ஞானம் எனப்படும்.

6. ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்து அறிவதே ஞானம் என்று அறிவாளிகள் சொல்வார்கள். உலகத்தில் அக்ஞானம் என்பது மாற்றி அறிவது அதாவது ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரிக்காமல் ஒன்றாகவே கலந்து அறிவது ஆகும். பிரபஞ்சமானது அக்ஞானத்தினாலேயே ஏற்பட்டது என்று அறிவது விக்ஞானம் எனப்படும்.

[உலகத்தில் ஆத்மா என்றும் அநாத்மா என்றும் இரண்டு பதார்த்தங்கள் இருப்பதாக வைத்துக்கொண்டு அதன் லக்ஷணங்களை அறிந்து பிரித்து அறிவது ஞானம் என்றும், ஆத்மாவைத்தவிர இரண்டாவது பதார்த்தமாகத் தோன்றுகிற அநாத்மாவான ஜகத் அக்ஞானத்தினுலேயே தோன்றுகிறபடியால் வாஸ்தவமாக இரண்டாவது பதார்த்தமே இல்லை என்று அறிவது விக்ஞானம் என்றும், இங்கு சொல்கிறார்.] (47)

अन्वयव्यतिरेकाभ्यां सर्वत्रैकं प्रपश्यति ।
यत् तत् तु वृत्तिजं ज्ञानं विज्ञानं ज्ञानमात्रकम् ॥ ४८ ॥

அந்வயவ்யதிரேகாப்யாம் ஸர்வத்ரைகம் ப்ரபச்யதி ।
யத் தத்து வ்ருத்திஜம் ஞாநம் விக்ஞாநம் ஞாநமாத்ரகம் ॥

सर्वत्र—எல்லாவிடத்திலும், अन्वयव्यतिरेकाभ्यां—அன்வயம் மூலமாகவும் வியதிரேகம் மூலமாயும், एकं—ஒன்றாகவே இருப்பதை, यत्—எது, प्रपश्यति—நன்கு அறிகிறதோ, तत् तु—அதுவே, वृत्तिजं—விருத்தியினுல் உண்டான, ज्ञानं—ஞானம் ज्ञानमात्रकं—சுத்தமான அறிவாகவே இருப்பது, विज्ञानं—விக்ஞானம்.

6. எல்லாவிடத்திலும் அன்வயம் மூலமாயும் வியதிரேகம் மூலமாயும் ஒன்றாகவே இருப்பதை எது நன்கு அறிகிறதோ அதுவே விருத்தியினுல் உண்டான ஞானம். சுத்தமான அறிவாகவே இருப்பது விக்ஞானம்.

[உலகத்திலுள்ள பதார்த்தங்களை கவனிக்கையில் ஸத்தான ஆத்மாவின் வியாப்தி இருப்பதினுலேயே அவைகள் இருப்பதாகத் தோன்றுகின்றன. ஆத்மாவின் வியாப்தி இல்லாமல் போனுல் அவைகள் இல்லாமலே போய்விடுகின்றன, என்று இரண்டு விதமாயும் ஆத்மா ஒன்றுதான் வாஸ்தவமாக இருக்கும் வஸ்து என்று புத்தி விருத்தியினுல் உணர்வது ஞானம், இம்மாதிரி யுக்திகளுக்கு அவசியமில்லாமல் தன் அனுபவத்திலுலேயே ஸாக்ஷாத்தாக ஆத்மஸ்வரூபத்தை அறிவது விக்ஞானம்.] (48)

अज्ञानध्वंसकं ज्ञानं विज्ञानं चोभयात्मकम् ।
ज्ञानविज्ञाननिष्ठेयं तत्सदूब्रह्मणि चार्पणम् ॥ ४९ ॥

அக்ஞாநத்வம்ஸகம் ஞாநம் விக்ஞாநம் சோபயாத்மகம் ।
ஞாநவிக்ஞாந நிஷ்டேயம் தத்ஸத் ப்ரஹ்மணி சார்ப்பணம் ॥

**अज्ञानध्वंसकं**–அக்ஞானத்தைப் போக்கடிப்பது, **ज्ञानं**–ஞானம். **विज्ञानं च**-விக்ஞானமோ, **उभयात्मकम्**-(அக்ஞானம், ஞானம், ஆக) இரண்டாகவும் இருக்கும் தன்மையுள்ளது. **तत्सद्ब्रह्मणि**–அதுவாகவும் ஸத்தாகவுமுள்ள பிரஹ்மத்தினிடத்தில், **अर्पणं च**–(அக்ஞானம், ஞானம், இரண்டையும்)லயப்படுத்தி விடுவது என்பது எதுவோ, **इयं**–இது, **ज्ञानविज्ञाननिष्ठा**–ஞான விக்ஞானத்தில் நிலைத்தல் ஆகும்.

7. அக்ஞானத்தைப் போக்கடிப்பது ஞானம் விக்ஞானமோ அக்ஞானம், ஞானம், ஆக இரண்டாகவும் இருக்கும் தன்மையுள்ளது. அதுவாகவும் ஸத்தாகவுமுள்ள பிரஹ்மத்தினிடத்தில் அக்ஞானம், ஞானம், இரண்டையும் லயப்படுத்திவிடுவதுதான் ஞான விக்ஞானத்தில் நிலைத்தல் ஆகும்.

[அக்ஞானத்தைப் போக்கடிக்கக்கூடிய தன்மை அக்ஞானத்திற்கு விரோதியான, ஆத்மஸ்வரூபத்தை விஷயீகரிக்கும் புத்தி விருத்திக்குத்தான் உண்டு. அதுவே ஞானம் என்பது. அக்ஞானமோ, இந்த புத்தி விருத்தியோ இரண்டிற்கும் ஸத்தையைக் கொடுப்பது ஆத்மா என்று அறிவது விக்ஞானம். அக்ஞானத்தையும், அதைப் போக்கடிக்கும் விருத்தி ஞானத்தையும் பிரகாசிக்கும்படிச் செய்யும் சுத்த சைதன்யத்தை மாத்திரம் அறிவது ஞான விக்ஞானம் என்பது

இவ்விதமாக ஞானம் என்ற பதத்திற்கும் விக்ஞானம் என்ற பதத்திற்கும் ஏழுவிதமாக தார்த்பர்யம் சொல்லப்பட்டது. எந்த விதத்தை எடுத்துக்கொண்டாலும் ஞானத்திற்கு மேல்படி விக்ஞானம் என்ற அம்சம் பொது.] (49)

(அ) ஆத்மஞானிக்கும் ஸதாசாரமுண்டென்று நிருபணம் செய்யவாரம்பித்து 16வது சுலோகத்தில் ஸன்யாஸியின் தன்மை அவனிடமுண்டென்று காண்பித்துவிட்டு ஸன்யாஸியால் அடைய வேண்டிய ஆத்மஞானத்தைப்பற்றி இதுவரை விஸ்தாரமாக வர்ணித்து வந்தார். இப்பொழுது ஒரு சுலோகத்தினுல் குணங்களுக்கும் ஆத்மாவுக்குமுள்ள ஸம்பந்தத்தை சொல்லிவிட்டு,

ஆத்மஞானி ஸன்யாஸி என்பதுமட்டுமல்ல, அவனை பிரஹ்மசாரி என்றும் சொல்லலாம், கிருஹஸ்தன் என்றும் சொல்லலாம், வானப்பிரஸ்தன் என்றும் சொல்லலாம், அதிவர்ணாசிரமீ என்றும் சொல்லலாம், என்று மேல் சுலோகங்களால் எடுத்துக் காட்டுகிறார் :—

भोक्ता सत्त्वगुणः शुद्धो भोगानां साधनं रजः ।
भोग्यं तमोगुणः प्राहुरात्मा चैषां प्रकाशकः ॥ ५० ॥

போக்தா ஸத்வகுண: ஶுத்தோ போகாநாம் ஸாதநம் ரஜ: ।
போக்யம் தமோகுண: ப்ராஹுராத்மா சைஷாம்
ப்ரகாஶக: ॥

शुद्धः-சுத்தமான, सत्त्वगुणः-ஸத்வகுணமானது, भोक्ता-அனுபவிக்கிறவன், रजः-ரஜோகுணமானது, भोगानां-ஸுக துக்கங்களை அனுபவிக்க, साधनं-ஸாதனம். तमोगुणः-தமோ குணமானது, भोग्यं-அனுபவிக்கப்படும் பதார்த்தம் என்றும் एषां च-இவைகளையெல்லாம், प्रकाशकः-பிரகாசிக்கும்படி செய் கிறது, आत्मा-ஆத்மா என்றும், प्राहुः-சொல்கிறார்கள்.

சுத்தமான ஸத்வகுணமானது அனுபவிக்கிறவன், ரஜோ குணமானது ஸுகதுக்கங்களை அனுபவிக்க ஸாதனம், தமோ குணமானது அனுபவிக்கப்படும் பதார்த்தம், இவைகளையெல்லாம் பிரகாசிக்கும்படி செய்கிறது ஆத்மா என்று சொல்கிறார்கள்.

[சைதன்யமானது முக்குணங்களோடு ஸம்பந்தப்படும்போது ஸத்வத்தினால் போக்தா என்றும், ரஜஸ்ஸினால் போக ஸாதனம் என்றும் தமஸ்ஸினால் போக்யம் என்றும் பிரிந்துவிடுகிறது. குழந்தை விரலை சப்பும்போது, சப்புவது ஸுகத்தைக்கொடுக்கும் என்று நினைப்பதான ஆசை ரஜோகுணத்தினாலும், சப்புவதி லுள்ள ஸுகத்தை அனுபவிக்கிறவனாக ஆனது ஸத்வ குணத் தினாலும், சப்பப்படும் பதார்த்தமாக தானே ஆனது தமோ குணத்தினாலும் என்றிருப்பதை திருஷ்டாந்தமாக வைத்துக் கொள்ளலாம்] (50)

ब्रह्माध्ययनसंयुक्तो ब्रह्मचर्यारतः सदा ।
सर्वं ब्रह्मेति यो वेद ब्रह्मचारी स उच्यते ॥ ५१ ॥

ப்ரஹ்மாத்யயனஸம்யுக்தோ ப்ரஹ்மசர்யாரத: ஸதா ।
ஸர்வம் ப்ரஹ்மேதி யோ வேத ப்ரஹ்மசாரீ ஸ உச்யதே ॥

**ब्रह्माध्ययनसंयुक्तः**-ப்ரஹ்மத்தை உபதேசிக்கும் உபநிஷத்தை அத்யயனம் செய்துகொண்டு, **सदा**-எப்பொழுதும் **ब्रह्मचर्यारतः**-ப்ரஹ்மசர்யத்தில் ஈடுபட்டு, **सर्वं ब्रह्मेति**-எல்லாம் ப்ரஹ்மம் என்று, **यो वेद**-எவன் அறிந்துகொள்கிறானோ, **सः**-அவன், **ब्रह्मचारी**-ப்ரஹ்மசாரி என்று, **उच्यते**-சொல்லப்படுகிறான்.

எப்பொழுதும் ப்ரஹ்மசர்ய நியமத்துடன் வேதத்தை அத்யயனம் செய்பவன் ப்ரஹ்மசாரி எனப்படுவான். எல்லாம் ப்ரஹ்மம் என்று அறிந்த ஞானியும் ப்ரஹ்மத்தை உபதேசிக்கும் உபநிஷத்தை ஜபித்துக்கொண்டு ப்ரஹ்மசர்ய நியமத்துடனிருப்பதால் ப்ரஹ்மசாரி எனப்படுகிறான். (51)

गृहस्थो गुणमध्यस्थः शरीरं गृहमुच्यते ।
गुणाः कुर्वन्ति कर्माणि नाहं कर्तेति बुद्धिमान् ॥ ५२ ॥

க்ருஹஸ்தோ குணமத்யஸ்த: ஶரீரம் க்ருஹமுச்யதே ।
குணா: குர்வந்தி கர்மாணி நாஹம் கர்த்தேதி புத்திமான் ॥

**गुणमध्यस्थः**-குணங்களின் நடுவிலிருந்துகொண்டு, (ஆனால்) **कर्माणि**-கர்மாக்களை, **गुणाः**-குணங்கள்தான், **कुर्वन्ति**-செய்கின்றன, **अहं**-நான், **कर्ता**-செய்கிறவன், **न**-அல்ல, **इति**-என்று, **बुद्धिमान्**-அறிந்தவன், **गृहस्थः**-கிருஹஸ்தன் ஆகிறான். இந்த ஆத்ம ஞானிக்கு, **शरीरं**-சரீரமே, **गृहं**-வீடு என்று, **उच्यते**-சொல்லப்படுகிறது.

வீட்டில் இருந்துகொண்டு ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் மத்தியில் அவைகளால் ஏவப்பட்டு காரியங்களைச் செய்து வருபவன் கிருஹஸ்தனாவான். இந்த ரீதியில் ஞானியும் கிருஹஸ்தனே. ஞானிக்கு சரீரமே வீடு. சரீரமென்னும் வீட்டில் இருக்கிறான். சரீரத்தைக்காட்டிலும் வேறான ஆத்மாவை அறிந்தவன் தான் சரீரத்தில் இருப்பதாகக் கூறமுடியும். சரீரத்தையே நான் என எண்ணுபவன் சரீரத்தில் இருப்பதாகக்

கூறமுடியாது. ஞானியும் குணங்களின் நடுவில் இருக்கிறான். ஆனாலும் அக்ஞானி போல குணங்களுக்கு வசப்பட்டு கர்மாக்களைச் செய்யவில்லை. குணங்கள் தான் கர்மாக்களைச் செய்கின்றன. நான் ஒன்றும் செய்யவில்லை. நான் அகர்த்தா என்று அறிபவன் ஞானி.] (52)

किमुग्रैश्च तपोभिः स्यात् यस्य ज्ञानमयं तपः ।
हर्षामर्षविनिर्मुक्तो वानप्रस्थः स उच्यते ॥ ५३ ॥

கிமுக்ரைச்ச தபோபி: ஸ்யாத் யஸ்ய ஞாநமயம் தப: ।
ஹர்ஷாமர்ஷ விநிர்முக்தோ வாநப்ரஸ்த: ஸ உச்யதே ॥

यस्य–எவனுக்கு, ज्ञानमयं–ஞானமயமான, तपः–தபஸ் இருக்கிறதோ அவனுக்கு, उग्रैः–உக்கிரமான, तपोभिः च–தபஸ்களினால், किं–என்ன பிரயோஜனம், स्यात्–ஏற்படும்? हर्षामर्षविनिर्मुक्तः–ஸந்தோஷம், வெறுப்பு இவைகளிலிருந்து நன்கு விடுபட்ட, सः–அவன், वानप्रस्थः–வானப்பிரஸ்தன் என்று, उच्यते–சொல்லப்படுகிறான்.

எவனுக்கு ஞானமயமான தபஸ் இருக்கிறதோ அவனுக்கு உக்கிரமான தபஸ்களினால் என்ன பிரயோஜனம்? ஸந்தோஷம், வெறுப்பு இவைகளிலிருந்து நன்கு விடுபட்டவன் வானப்ரஸ்தன் என்று சொல்லப்படுகிறான்.

[ஆத்மஞானியிடம் ஞானமயமான தபஸ் இருப்பதாலும் ஸந்தோஷம், வெறுப்பு இவைகள் இல்லாததாலும் இவனும் வானப்பிரஸ்தன் ஆவான்] (53)

स गृही यो गृहातीतः शरीरं गृहमुच्यते ॥ ५४ ॥

ஸ க்ருஹீ யோ க்ருஹாதீத: ஶரீரம் க்ருஹமுச்யதே ।

यः–எவன், गृहातीतः–கிருஹத்திற்கு மேல்பட்டவனோ, सः–அவன்தான், गृही–கிருஹத்திற்கு யஜமானன், शरीरं–சரீரமே, गृहं–கிருஹம் என்று, उच्यते–சொல்லப்படுகிறது.

எவன் கிருஹத்திற்கு மேல்பட்டவனோ அவன்தான் கிருஹத்திற்கு யஜமானன். சரீரமே கிருஹம் என்று சொல்லப்படுகிறது.

[வீட்டு யஜமானன் வீட்டை தான் என்று நினைப்பது கிடையாது. வீடு வேறு, தான் வேறு, என்றே நினைப்பான். அப்படியே ஆத்ம ஞானி சரீரத்தில் ஆத்மாவென்கிற எண்ணம் வைக்காமல், தான் அதை விட வேறு, அதற்கு அதீதமானவன் என்றே உணர்ந்தவன். ஆகையால் சரீரத்திற்குரிய வர்ணாசிரமங்கள் தனக்குச் சேர்ந்தவையல்லவென்ற உணர்ச்சி இருக்கும். அவனே அதிவர்ணாசிரமியும் ஆவான்.] (54)

सदाचारमिमं नित्यं योऽनुसंदधते बुधः ।
संसारसागराच्छीघ्रं स मुक्तो नात्र संशयः ॥ ५५ ॥

ஸதாசாரமிமம் நித்யம் யோऽநுஸந்ததே புத: ।
ஸம்ஸார ஸாகராத் ஶீக்ரம் ஸ முக்தோ நாத்ர ஸம்ஶய: ॥

इमं-இந்த, सदाचारं-ஸதாசாரத்தை, यः-எந்த, बुधः-அறிவாளி, नित्यं-எப்பொழுதும், अनुसंदधते-அனுஸந்தானம் செய்கிறானோ, सः-அவன், शीघ्रं-சீக்கிரமாக, संसारसागरात्-ஸம்ஸார ஸமுத்திரத்திலிருந்து, मुक्तः-விடுபடுகிறான். अत्र-இவ்விஷயத்தில், संशयः-சந்தேகம், न-இல்லை.

இந்த ஸதாசாரத்தை எந்த அறிவாளி எப்பொழுதும் அனுஸந்தானம் செய்கிறானோ அவன் சீக்கிரமாக ஸம்ஸார சமுத்திரத்திலிருந்து விடுபடுகிறான். இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. (55)

ஸதாசாராநுஸந்தானம் முற்றும்.



॥ श्रीः ॥

# ॥ निर्गुणमानसपूजा ॥

# நிர்குணமானஸ பூஜா

[ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்த ஞானிக்கு ஸதாசாரானுஷ்டானம் எவ்விதம் என்பதைப் பற்றி "ஸதாசாரானுஸந்தானம்" என்ற சிறிய கிரந்தத்தில் ஸ்ரீமத் பரமாசார்யார் வர்ணித்திருக்கிறார். ஞானிக்கும் ஒருவிதமாக ஸ்நாநம், ஸந்த்யா, ஜபம் ஹோமம் எல்லாம் உண்டு என்று சொல்லிவிட்டு அவருக்கு தேவதாராதனமும் உண்டு என்கிறார். ஆனால் அந்த தேவதாராதனம்,

[1]देहो देवालयः प्रोक्तो देही देवो निरञ्जनः ।
अर्चितः सर्वभावेन स्वानुभूत्या विराजते ॥

என்ற முறையில் இருக்குமென்று விளக்குகிறார். அதாவது தேஹத்தையே தேவாலயமாகவும் ஹ்ருதய குகையாகிற கர்ப்ப கிருஹத்தில் பிரகாசிக்கும் பரமாத்மாவையே தேவதையாகவும் வைத்துக்கொண்டு எல்லாவிதத்திலும் தன்னுடைய ஞானானந்த அநுபவத்தினாலேயே பூஜை செய்வது என்கிறார். பூஜை என்பது ஸாதாரணமாக தியான ஆவாஹனாதி ஷோடச உபசாரங்கள் அடங்கியுள்ளதாகையால் அவ்வுபசாரங்களை ஆத்ம ஞானி எவ்விதம் செய்ய முடியுமென்று ஏற்படும் ஸந்தேஹத்தை எடுத்துச் சொல்லி அதற்கு ஸமாதானம் விரிவாக இந்தப் பிரகரணத்தில் ஸ்ரீமத் ஆசார்யாரால் மிகக் கருணையுடன் சொல்லப்படுகிறது.]

शिष्य उवाच —

अखण्डे सच्चिदानन्दे निर्विकल्पैकरूपिणि ।
स्थितेऽद्वितीयभावेऽपि कथं पूजा विधीयते ॥ १ ॥

ஶிஷ்ய உவாச:—

அகண்டே ஸச்சிதானந்தே நிர்விகல்பைகரூபிணி ।
ஸ்திதேऽத்விதீய பாவேऽபி கதம் பூஜா விதீயதே ॥

1. ஸதாசாரானுஸந்தானம் ச. 13

**सच्चिदानन्दे**-ஸத்தாகவும், சித்தாகவும், ஆனந்தமாகவும் உள்ள ப்ரஹ்மமானது, **अखण्डे**-பிரிவற்றதாகவும், **निर्विकल्पैकरूपिणि**-எவ்வித விகல்பத்திற்கும் இடமில்லாமல் ஒரே ரூபமாகவும் **अद्वितीयभावेपि**-இரண்டாவது பொருளில்லாததாகவும், **स्थिते**-இருக்கும்போது, **पूजा**-பூஜையானது, **कथं**-எப்படி, **विधीयते**-செய்யப்படுகிறது?

"ஸச்சிதானந்த ஸ்வரூபமான ப்ரஹ்மம் பிரிவற்றது. ஒருவித விகல்பமும் இல்லாமல் ஒரே ரூபமாக உள்ளது. அதைத்தவிர இரண்டாவது பொருள் கிடையாது. இப்படி இருக்க அதில் பூஜை எப்படி செய்யக்கூடும்?

[தன்னைத்தவிர வேருக தேவதை, பூஜைக்கு வேண்டிய ஸாதனங்கள் இடம் முதலானவை இருந்தாலல்லவா பூஜைநடத்த முடியும். ஆத்மஞானிக்கோ தன்னைத்தவிர வேறு எதுவும் கிடையாதே? அவர் எப்படி பூஜை செய்வார்? என்பது சிஷ்யனுடைய கேள்வி. "எப்படி" என்ற பதத்திற்கு இரண்டு விதமாகத் தாத்பர்யம் சொல்லலாம். பூஜை செய்யவேண்டிய முறை எப்படி என்று தெரிந்துகொள்ள விரும்பியும் "எப்படி" என்று கேட்கலாம். பூஜை செய்யவே முடியாதே என்று ஆக்ஷேபிக்கவும் "எப்படி" என்று சொல்லலாம். இந்த இரண்டு வித தாத்பர்யங்களையுமே மனஸில் வைத்துக்கொண்டுதான் இந்த சுலோகத்திலும் மேல் சுலோகங்களிலும் சிஷ்யன் தன் குருவை அண்டி தன் ஸந்தேஹங்களைப்போக்கடித்துக் கொடுக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிருன். முதல் சுலோகத்தில் ஆத்மஞானிக்கு பூஜை சிக்க வியாயமில்லையென்பதற்குள்ள காரணத்தைப் பொதுவாக சொல்லிவிட்டு மேல்சுலோகங்களில் தேவதாராதனத்திலுள்ள ஒவ்வொரு அம்சத்தையும் தனித்தனியாக எடுத்துச் சொல்கிருன்.] (1)

**पूर्णस्यावाहनं कुत्र सर्वाधारस्य चासनम् ।**
**स्वच्छस्य पाद्यमर्घ्यं च शुद्धस्याचमनं कुतः ॥ २ ॥**

பூர்ணஸ்யாவாஹனம் குத்ர ஸர்வாதாரஸ்ய சாஸனம் ।
ஸ்வச்சஸ்ய பாத்யமர்க்யம் ச சுத்தஸ்யாசமனம் குத: ॥

**पूर्णस्य**-எங்கும் நிரம்பியிருக்கிற ப்ரஹ்மத்திற்கு, **आवाहनं**-ஆவாஹனம், **कुत्र**-எங்கே செய்வது? **सर्वाधारस्य**-எல்லா

வற்றிற்குமே ஆதாரமாயிருப்பதற்கு, आसनं च–ஆஸனமும் (எங்கே கொடுப்பது)? स्वच्छस्य–மிகவும் நிர்மலமாயிருப்பதற்கு, पाद्यं–பாத்யமும், अर्घ्यं च–அர்க்யமும் (எது?) शुद्धस्य–சுத்தமாயிருப்பதற்கு, आचमनं–ஆசமனம், कुतः–எங்கிருந்து வரும்?

எங்கும் நிரம்பியிருக்கிற பிரஹ்மத்திற்கு ஆவாஹனம் எங்கே செய்வது? எல்லாவற்றிற்குமே ஆதாரமாயிருப்பதற்கு ஆஸனம் எங்கே கொடுப்பது? மிகவும் நிர்மலமாயிருப்பதற்கு பாத்யம், அர்க்யம், ஆசமனம் இவை எங்கிருந்து வரும்?

[தேவதைகளுக்கும் எல்லா இடங்களிலும் இருக்கும் யோக்கியதை இருந்த போதிலும் சிறிய பிரதிமை முதலான ப்ரதீகங்களில் விசேஷஸாந்நித்யமடைந்து பூஜையை கிரஹித்துக் கொள்ள வேண்டியதற்காக ஆவாஹனம் செய்வதுண்டு. ஸர்வ வியாபகமாய் எங்கும் ஒரே மாதிரி நிறைந்திருக்கும் வஸ்துவான பிரஹ்மத்திற்கு ஆவாஹனம் எவ்விதம் செய்வது? ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்கும்படிச் செய்வதல்லவா ஆஸனம் என்பது? எவ்விடத்திலும் இருந்துகொண்டு தான் எல்லா பதார்த்தங்களுக்கும் ஆதாரமாய் இருந்துகொண்டு, தான் இருப்பதற்கு வேறு எதையும் ஆதாரமாகத் தேடாத, பிரஹ்மத்திற்கு ஆஸனம் எப்படி? வெளியில் ஸஞ்சாரம் செய்வதனால் கைகால்கள் அசுத்தப்பட்டிருக்கக்கூடியவர்களுக்கு கால்கழுவ பாத்யமும் கையலம்ப அர்க்யமும் அவசியமாகும். பிரஹ்மமோ எப்பொழுதும் நிர்மலமாய் இருக்கும் வஸ்து. அதற்கு பாத்யமும் அர்க்யமும் தேவையில்லை. அப்படியே சுத்தி ஏற்படுவதற்காக ஆசமனம் சொல்லப்பட்டிருக்கிறது எப்பொழுதும் சுத்தமாகவேயிருக்கும் பிரஹ்மத்திற்கு ஆசமனம் எதற்கு?] (2)

निर्मलस्य कुतः स्नानं वासो विश्वोदरस्य च ।
अगोत्रस्य त्ववर्णस्य कुतस्तस्योपवीतकम् ॥ ३ ॥

நிர்மலஸ்ய குத: ஸ்நாநம் வாஸோ விச்வோதரஸ்ய ச ।
அகோத்ரஸ்ய த்வவர்ணஸ்ய குதஸ்தஸ்யோபவீதகம் ॥

निर्मलस्य – நிர்மலமாயிருக்கிறவருக்கு, स्नानं–ஸ்நாநம் कुतः–எதற்காக? विश्वोदरस्य-பிரபஞ்சத்தையே தன் வயிற்றில்

அடக்கியுள்ளவருக்கு, वासः च–வஸ்திரம்தான் (எதற்கு)? अगोत्रस्य–கோத்திரமில்லாதவரும், अवर्णस्य तु–ஜாதியில்லாதவருமான, तस्य–அவருக்கு, कुतः–எதற்காக, उपवीतकम्–யக்ஞோபவீதம்?

நிர்மலமாயிருக்கிறவருக்கு ஸ்நாநம் எதற்காக? பிரபஞ்சத்தையே தன் வயிற்றில் அடக்கி வியாபகமாக உள்ளவருக்கு வஸ்திரம்தான் எதற்கு? கோத்திரமும் ஜாதியுமில்லாத அவருக்கு எதற்காக யக்ஞோபவீதம்?

[அழுக்குப் போவதற்காக ஜலத்தினுலும், பாபம் நீங்குவதற்காக மந்திரத்தினுலும் ஸ்நாநம் செய்வதுண்டு. வெளி அழுக்கோ உள் பாபமோ, இருவித மலமும் பிரஹ்மத்திற்குக் கிடையாத படியால் அதற்கு எதற்காக எப்படி ஸ்நாநம் செய்துவைக்க வேண்டும்? சிறிய சரீரத்தோடு கூடியவருக்கு அவரைச்சுற்றி வஸ்திரம் கட்டிவிட முடியும். பிரபஞ்சம் பூராவையுமே தன் குக்ஷியில் அடக்கிக்கொண்டும், தனக்கு வெளியில் இடமேயில்லாமலும், இருக்கிறவருக்கு எப்படி வஸ்திரம் கட்டுகிறது? பிரஹ்ம க்ஷத்திரிய வைசியர்களென்ற மூன்று வர்ணங்களில் ஏதேனும் ஒரு வர்ணத்தில், ஏதேனும் ஒரு வம்ச பரம்பரையில், பிறந்தோருக்கல்லவா யக்ஞோபவீதம் விதிக்கப்பட்டிருக்கிறது? பிறக்காமலும், முன்னோர்கள் அற்றும், ஜாதியற்றும், இருக்கும் பிரஹ்மத்திற்கு யக்ஞோபவீதம் ஏது?] (3)

निर्लेपस्य कुतो गन्धः पुष्पं निर्वासनस्य च ।
निर्विशेषस्य का भूषा कोऽलंकारो निराकृतेः ॥ ४ ॥

நிர்லேபஸ்ய குதோ கந்த: புஷ்பம் நிர்வாஸநஸ்ய ச ।
நிர்விசேஷஸ்ய கா பூஷா கோऽலங்காரோ நிராக்ருதே: ॥

निर्लेपस्य–எவ்வித பூச்சும் அற்றவருக்கு, गन्धः–வாஸனை திரவ்யமான சந்தனம் முதலானது, कुतः–எதற்காக? निर्वासनस्य–எவ்வித வாஸனையுமற்றவருக்கு, पुष्पं च–புஷ்பமும் (எதற்கு)? निर्विशेषस्य–எந்த விசேஷமுமில்லாதவருக்கு, भूषा–நகை, का–எது? निराकृतेः–ரூபமேயில்லாதவருக்கு अलंकारः–அலங்காரம், कः–எது?

எவ்வித பூச்சுமற்றவருக்கு வாஸனை திரவ்யமான சந்தனம் முதலின்து எதற்காக? எவ்வித வாஸனையுமற்றவருக்கு புஷ்பமும் எதற்கு? எவ்வித விசேஷமும் இல்லாதவருக்கு நகை எது? ரூபமே இல்லாதவருக்கு அலங்காரம் எது?

[எதிலும் ஒட்டாத பிரஹ்மத்திற்கு சந்தனப் பூச்சு எதற்காக? ஸகலவித வாசனைகளும் அற்ற நிலையே பிரஹ்மமாயிருக்க அதற்கு புஷ்பம் எதற்காக? கை, கால், முகம், மார்பு முதலான அங்கங்களே இல்லாதவருக்கு நகை எப்படிப்போடுகிறது? அவருக்கு திலகம், ஹாரம் முதலான அலங்காரங்கள் தான் எப்படிச் செய்ய முடியும்?] (4)

**निरञ्जनस्य किं धूपैर्दीपैर्वा सर्वसाक्षिणः ।**
**निजानन्दैकतृप्तस्य नैवेद्यं किं भवेदिह ॥ ५ ॥**

நிரஞ்ஜநஸ்ய கிம் தூபைர் தீபைர் வா ஸர்வஸாக்ஷிண:।
நிஜாநந்தைக த்ருப்தஸ்ய நைவேத்யம் கிம் பவேதிஹ ॥

**निरञ्जनस्य** – எவ்வித தோஷமுமில்லாதவருக்கு, **धूपैः** – தூபங்களினால், **किं**–என்ன பிரயோஜனம்? **सर्वसाक्षिणः** – எல்லாவற்றையும் நேரில் பார்த்துக்கொண்டிருக்கிறவருக்கு, **दीपैर्वा**–தீபங்களினால்தான் (என்ன பிரயோஜனம்)? **निजानन्दैकतृप्तस्य**–தன்னுடைய ஆனந்தத்தினாலேயே திருப்தி அடைந்துள்ளவருக்கு, **इह**–இங்கே, **किं**–எது, **नैवेद्यं**–நைவேத்யமாக, **भवेत्** –ஆகும்?

எவ்வித தோஷமுமில்லாதவருக்கு தூபங்களினால் என்ன பிரயோஜனம்? எல்லாவற்றையும் நேரில் பார்த்துக்கொண்டிருக்கிறவருக்கு தீபங்களினால்தான் என்ன பிரயோஜனம்? தன்னுடைய ஆனந்தத்தினாலேயே திருப்தியடைந்துள்ளவருக்கு இங்கே எது நைவேத்யமாக ஆகும்?

[துர்வாஸனையைப் போக்கடிக்கவோ, நல்ல வாஸனையை உண்டாக்கவோ, தூபம் அவசியம். பிரஹ்மத்தினிடத்தில் துர்வாஸனை கிடையாது. புதிதாக வாஸனையை ஏற்றவும் முடியாது. ஆகையால் தூபத்திற்கு அவசியம் இல்லை. தனக்குத் தெரியாத பதார்த்தத்தைப் பார்ப்பதற்காக தீபவெளிச்சம்

தேவையாகும். தானே ஸ்வயம்பிரகாசமாயிருந்து வேறு வெளிச்சத்தை அபேக்ஷிக்காமல் எல்லாப் பதார்த்தங்களையும் ஸாக்ஷாத்கரிக்கும் பிரஹ்மத்திற்கு தீபம் எதற்காக? பசியுள்ளவனுக்கும், ஆஹாரத்தினல் பசிதீரக்கூடியவனுக்கும் ஆஹாரம் கொடுக்கவேண்டியது நியாயம். பிரஹ்மமோ தன் ஸ்வருபமான ஆனந்தத்திலேயே திருப்தியுடையதாயிருப்பதால் அதற்கு ஆஹாரம் வேண்டுமென்ற பசிக்கே இடமில்லை. தவிரவும் அது ஆனந்தானுபவத்தினல் திருப்தியடைந்துகொண்டேயிருப்பதினல் வேறு எவ்வித ஆஹாரமும் தேவையில்லை. அப்படியிருக்க அதற்கு நைவேத்யம் எதற்காகக் கொடுக்கவேண்டும்?] (5)

विश्वानन्दयितुस्तस्य किं ताम्बूलं प्रकल्पते ।

விச்வாநந்தயிதுஸ்தஸ்ய கிம் தாம்பூலம் ப்ரகல்பதே I

**विश्वानन्दयितुः**-பிரபஞ்சம் பூராவையும் ஆனந்திக்கும்படி செய்கிற, **तस्य**-அவருக்கு, **किं**-எது, **ताम्बूलं**-தாம்பூலமாக, **प्रकल्पते**-ஆகும்?

:-பிரபஞ்சம் பூராவையும் ஆனந்திக்கும்படிச்செய்கிற அவருக்கு எது தாம்பூலமாக ஆகும்?

[வாயின் நாற்றத்தைப்போக்கி நல்ல வாஸனையைக்கொடுத்து முகத்திற்கே ஒருவிதத் தெளிவையும் ஆனந்தத்தையும் கொடுப்பதற்காகத் தாம்பூலம் ஏற்பட்டிருக்கிறது. தான் ஆனந்தருபமாயிருந்துகொண்டு ஸகல பிரபஞ்சத்திற்கும் தன்னுடைய ஸ்வபாவ ஸித்தமான ஆனந்தத்தின் லேசத்தைக்கொடுத்து ஆனந்திக்கும்படி செய்கிற ப்ரஹ்மத்திற்கு எதற்காகத்தாம்பூலம்]

स्वयंप्रकाशचिद्रूपो योऽसावर्कादिभासकः ॥ ६ ॥
गीयते श्रुतिभिस्तस्य नीराजनविधिः कुतः ।

ஸ்வயம்ப்ரகாஶசித்ரூபோ யோऽஸாவர்காதிபாஸக: ll
கீயதே ச்ருதிபிஸ்தஸ்ய நீராஜநவிதி: குத: 1

**यः**-எவர், **स्वयंप्रकाशचिद्रूपः**-ஸ்வயம்பிரகாசமான ஞான ஸ்வருபரோ, **असौ**-அவர், **अर्कादिभासकः**-ஸூர்யன் முதலானவர்களை பிரகாசிக்கச்செய்புவராக, **श्रुतिभिः**-வேத

வாக்யங்களினால், गीयते-சொல்லப்படுகிறார். तस्य-அவருக்கு कुतः-எதற்காக, नीराजनविधिः-நீராஜனம் என்ற முறை?

[ ]

ப்ரஹ்மம் ஸ்வயம்ப்ரகாசம், ஸூர்யன் முதலானவர்களைக் கூட அதுதான் ப்ரகாசப்படுத்துகிறது என்று உபநிஷத் கூறுகிறது. அப்பேற்பட்ட ஆத்மாவுக்கு நீராஜனம் எதற்கு?

[தானாக விளங்கக்கூடாத பதார்த்தங்கள் விளங்கவேண்டுமானால் வெளிச்சம் வேண்டும். வெளிச்சத்தைப்பார்க்க இன்னொரு வெளிச்சம் தேவையில்லை. பிரஹ்மமோ ஸ்வயம் பிரகாசம். மேலும் உலகத்தில் எதையெல்லாம் நாம் வெளிச்சமென்று நினைக்கிறோமோ, அதாவது ஸூர்யன், சந்திரன், அக்னி, முதலானதுகள், இவைகளுக்கெல்லாம் சொந்தமான பிரகாசமில்லாமல் பிரஹ்மத்தினாலேயே இவைகள் பிரகாசிக்கின்றபடியால், இவைகளைக்கொண்டு பிரஹ்மத்தை எப்படிக்காண முடியும்? ஆகையால் கற்பூரம் ஆரத்தி முதலிய நீராஜனம் பிரஹ்ம விஷயத்தில் கொஞ்சமேனும் பிரயோஜனப்படாது].

प्रदक्षिणमनन्तस्य प्रणामोऽद्वयवस्तुनः ॥ ७ ॥

ப்ரதக்ஷிணமநந்தஸ்ய ப்ரணாமோ௨த்வயவஸ்துந: ॥

अनन्तस्य-எல்லையற்றவருக்கு, प्रदक्षिणं-சுற்றிவருவது, अद्वयवस्तुनः-இரண்டாவதற்ற வஸ்துவிற்கு, प्रणामः-நமஸ்காரம், (कुतः-ஏது)?

எல்லையற்றவரை எப்படிச் சுற்றிவருவது, இரண்டாவதற்ற வஸ்துவை எப்படி நமஸ்காரம் செய்வது?

[ஒருவன் ஒரு வஸ்துவைச் சுற்றிவரவேண்டுமானால் அந்த வஸ்துவிற்கு வெளியில் இடமிருக்கவேண்டும், அதாவது அந்த வஸ்துவிற்கு நான்கு பக்கங்களிலும் எல்லையிருக்கவேண்டும். ஸர்வவியாபகமான பிரஹ்மத்திற்கு அவ்விதம் எல்லையோ, வெளியில் இடமோ. கிடையாதபடியால் பிரதக்ஷிணத்திற்கு வழியில்லை. நமஸ்காரம் செய்வதென்றால் நமஸ்கரிக்கிறவன் நமஸ்கரிக்கப்படுகிறவன் என்ற வேற்றுமை அவசியம். பிரஹ்மத்தினிடத்திலோ அவ்வித வேற்றுமைக்கு வழியேயில்லை. ஆகையால் நமஸ்காரமும் ஸாத்தியமில்லை]. (7)

वेदवाचामवेद्यस्य किं वा स्तोत्रं विधीयते ।

வேதவாசாம்வேத்யஸ்ய கிம் வா ஸ்தோத்ரம் விதீயதே ।

**वेदवाचां**—வேத வாக்யங்களினுலேயே, **अवेद्यस्य**—அறிய முடியாமலிருப்பவருக்கு, **स्तोत्रं**—ஸ்தோத்திரமாக, **किंवा**-எது தான், **विधीयते**—விதிக்கமுடியும் ?

வேத வாக்கியங்களினுலேயே அறிய முடியாமலிருப்பவருக்கு ஸ்தோத்திரமாக எதுதான் விதிக்கமுடியும் ?

[ஸ்தோத்திரம் என்ருல் ஒருவருடைய குணங்களைப்பற்றியோ செய்கைகளைப்பற்றியோ ஸ்வரூபத்தைப்பற்றியோ விசேஷமாக எடுத்துச்சொல்வது என்று தாத்பர்யம். பிரஹ்மம் நிர்குணமாயும் நிஷ்கிரியமாயும் இருப்பதுடன் அதன் ஸ்வரூபம் வாக்குக்கும் மனஸுக்கும் எட்டாததாக இருப்பதால் அதை எப்படி ஸ்தோத்திரம் செய்யமுடியும்? பிரஹ்மத்தை பிரதிபாதனம் பண்ணுவதற்காகவே பிரவிருத்திக்கும் அபௌருஷேயமான வேத வாக்குக்கே அதை இவ்விதமென்று தெரியப்படுத்த முடியாமலிருக்கும்போது, வேறு வாக்கியங்களுக்கு ஸ்தோத்திரம் செய்ய சக்தி ஏது ?]

अन्तर्बहिःसंस्थितस्य उद्वासनविधिः कुतः ॥ ८ ॥

அந்தர் பஹிः ஸம்ஸ்திதஸ்ய உத்வாஸந விதிः குதः ॥

**अन्तर्बहिःसंस्थितस्य**—உள்ளும் வெளியும் நன்கு நிலைத்திருப்பவருக்கு, **उद्वासनविधिः**—வெளிக் கிளம்பும் முறை, **कुतः** எப்படி ?

[ஒரு குறுகிய இடத்தில் இருக்கச்செய்து பூஜை செய்தான பிறகு அவரை அந்த இடத்திலிருந்து உத்வாஸனம் செய்வது, அதாவது கிளம்பிப்போக வழியனுப்புவது நியாயமாகும். எங்கேயும் வியாபித்திருக்கும் பிரஹ்மத்தை வழியனுப்புவது எப்படி ?]

(அ) இவ்விதமாகப் பூஜையின் அம்சங்களான ஆவாஹனம் முதல் உத்வாஸனம் வரையுள்ள எதுவும் நிர்குண பிரஹ்மத்தினிடத்தில் ஸம்பவிக்காது என்று விஸ்தாரமாக சிஷ்யன் எடுத்துச் சொல்லியதின் பேரில் குருவானவர், ஆத்மஞானி பூஜை செய்யும்

முறை உலகத்திலுள்ளதுபோலல்ல, வேறுபட்டது, என்பதை மேல் சுலோகங்களில் எடுத்துச்சொல்கிறார் :—

श्रीगुरुरुवाच —

आराधयामि मणिसंनिभमात्मलिङ्गं
मायापुरीहृदयपङ्कजसंनिविष्टम् ।
श्रद्धानदीविमलचित्तजलाभिषेकैः
नित्यं समाधिकुसुमैरपुनर्भवाय ॥ ९ ॥

ஸ்ரீ குருருவாச:—

ஆராதயாமி மணிஸந்நிபமாத்மலிங்கம்
மாயாபுரீ ஹ்ருதயபங்கஜஸந்நிவிஷ்டம் ।
ச்ரத்தா நதீவிமல சித்த ஜலாபிஷேகை:
நித்யம் ஸமாதிகுஸுமைரபுநர்பவாய ॥

मायापुरीहृदयपङ्कजसंनिविष्ट-மாயாபுரியின் ஹ்ருதய பத்மத்தில் நன்குவீற்றிருக்கும், मणिसंनिभं-ஸ்படிகம்போல் நன்கு விளங்குகிற, आत्मलिङ्गं-ஆத்மாவாகிற லிங்கத்தை, श्रद्धानदीविमलचित्तजलाभिषेकैः- சிரத்தையாகிற நதியிலுள்ள நிர்மலமான மனஸாகிற ஜலத்தினால் அபிஷேகங்கள் செய்து வைத்து, समाधिकुसुमैः-ஸமாதியாகிற புஷ்பங்களினால், नित्यं எப்பொழுதும், अपुनर्भवाय-மறுபடியும் ஸம்ஸாரபந்தத்தில் அகப்படாமலிருக்க வேண்டியதற்காக, आराधयामि-ஆராதிக்கிறேன்.

மாயாபுரியின் ஹ்ருதயபத்மத்தில் நன்கு வீற்றிருக்கும், ஸ்படிகம்போல் நன்கு விளங்குகிற ஆத்மாவாகிற லிங்கத்தை சிரத்தையாகிற நதியிலுள்ள நிர்மலமான மனஸாகிற ஜலத்தினால் அபிஷேகங்கள் செய்துவைத்து ஸமாதியாகிற புஷ்பங்களினால் எப்பொழுதும் மறுபடியும் ஸம்ஸாரபந்தத்தில் அகப்படாமலிருக்க வேண்டியதற்காக ஆராதிக்கிறேன்.

[ ஆத்ம ஞானியின் ஆராதனைக்குத் தனக்கு வெளியில் லிங்கம் இருக்கவேண்டிய அவசியமில்லை. மாயாபுரீ என்ற இந்த சரீரத்திலுள்ள ஹ்ருதய புண்டரீகத்தில் எப்பொழுதும் ஸ்வயம்பிரகா

ஷித்துக்கொண்டிருக்கும் ஆத்மாதான் லிங்கம். அதற்கு அபிஷேகம் செய்துவைக்க கங்கை முதலான நதிகளிலிருந்து தீர்த்தமோ, தாமரை முதலான புஷ்பமோ, தேவையில்லை. பகவானிடத்திலும் வேதத்திலும் குருவினிடத்திலும் சிரத்தை அதிகப்பட அதிகப்பட மனஸ் பரிசுத்தமாகும். அவ்விதம் பரிசுத்தமான மனஸையே ஜலமாகக்கொண்டு ஆத்மலிங்கத்திற்கு அபிஷேகம். அப்படியே நிர்மலமான அந்த மனஸை ஏகாக்ரமாகச் செய்து தியானம் செய்து ஸமாதி நிலையை ஸாதிப்பதே தான் புஷ்பார்ச்சனை ]. (9)

(அ) இவ்வாறு குருநாதர் பொதுவாகச் சொல்லிவிட்டு ஆத்மஞானிக்கும் ஆவாஹனாதி கிரமங்கள் உண்டு என்பதை விஸ்தாரமாக வர்ணிக்கிறார் :—

अयमेकोऽवशिष्टोऽस्मीत्येवमावाहयेच्छिवम् ।
आसनं कल्पयेत् पश्चात् स्वप्रतिष्ठात्मचिन्तनम् ॥ १० ॥

அயமேகோZவஶிஷ்டோZஸ்மீத்யேவமாவாஹயேத் ஶிவம் ।
ஆஸனம் கல்பயேத் பச்சாத் ஸ்வப்ரதிஷ்டாத்மசிந்தனம் ॥

अयं-இந்த, एकः-தனித்து, अवशिष्टः-மிஞ்சினவனாக, अस्मि-(நான்,தான்) இருக்கிறேன், इति-என்று, एवं-இவ்விதமாக, शिवं-மங்களஸ்வரூபியான பரமாத்மாவை, आवाहयेत्-ஆவாஹனம் செய்யவேண்டும், पश्चात्-பிறகு, स्वप्रतिष्ठात्मचिन्तनं-தன்னிடத்தில் நிலைத்திருக்கும் ஆத்மாவை சிந்தனை செய்வதையே, आसनं-ஆஸனம் (இருக்கச் செய்வது) என்று, कल्पयेत्-பாவிக்கவேண்டும்.

தனித்து மிஞ்சினவனாக நான் ஒருவன்தான் இருக்கிறேன் என்று மங்கள ஸ்வரூபியான பரமாத்மாவை ஆவாஹனம் செய்ய வேண்டும். பிறகு தன்னிடத்தில் நிலைத்திருக்கும் ஆத்மாவைச் சிந்தனை செய்வதையே ஆஸனம் (இருக்கச்செய்வது) என்று பாவிக்கவேண்டும். (10)

पुण्यपापरजःसङ्गो मम नास्तीति वेदनम् ।
पाद्यं समर्पयेद्विद्वान् सर्वकल्मषनाशनम् ॥ ११ ॥

புண்யபாபரஜஸ்ஸங்கோ மம நாஸ்தீதி வேதநம் ।
பாத்யம் ஸமர்பயேத் வித்வான் ஸர்வகல்மஷநாஶநம் ॥

**पुण्यपापरजःसङ्गः**–புண்ணியம், பாபம் என்கிற அழுக்கின் சேர்க்கை, **मम**–எனக்கு, **न अस्ति**–கிடையாது, **इति**–என்று, **वेदनं**–அறிவதையே, **सर्वकल्मषनाशनं**–எல்லா தோஷங்களையும் போக்கடிக்கக்கூடிய, **पाद्यं**–பாத்யமாக, **विद्वान्**–அறிவாளி, **समर्पयेत्**–கொடுக்க வேண்டும்.

*புண்ணியம் பாபம் என்கிற அழுக்கின் சேர்க்கை எனக்குக் கிடையாது என்று அறிவதையே எல்லா தோஷங்களையும் போக்கடிக்கக்கூடிய பாத்யமாகக் கொடுக்கவேண்டும். (11)*

अनादिकल्पविधृतमूलाज्ञानजलाञ्जलिम् ।
विसृजेदात्मलिङ्गस्य तदेवार्घ्यसमर्पणम् ॥ १२ ॥

அநாதிகல்பவித்ருதமூலாக்ஞாந ஜலாஞ்ஜலிம் ।
விஸ்ருஜேதாத்மலிங்கஸ்ய ததேவார்க்யஸமர்பணம் ॥

**अनादिकल्पविधृत**–அநாதி கல்ப காலமாய் சுமந்து வந்த **मूलाज्ञान**–மூல அவித்யையான, **जलाञ्जलिं**–ஜலம் கொண்ட அஞ்ஜலியை, **विसृजेत्**–நழுவ விடவேண்டும். **तत् एव**–அதுவே தான், **आत्मलिङ्गस्य**–ஆத்மாவாகிற லிங்கத்திற்கு, **अर्घ्यसमर्पणं**–அர்க்யத்தைக் கொடுத்தல் ஆகும்.

*அநாதி கல்ப காலமாய் சுமந்து வந்த மூல அவித்யையான ஜலம் கொண்ட அஞ்ஜலியை விடவேண்டும். அதுவே தான் ஆத்மாவாகிற லிங்கத்திற்கு அர்க்யத்தைக்கொடுத்தல் ஆகும்.*

ब्रह्मानन्दाब्धिकल्लोलकणकोट्यंशलेशकम् ।
पिबन्तीन्द्रादय इति ध्यानमाचमनं मतम् ॥ १३ ॥

ப்ரஹ்மாநந்தாப்தி கல்லோல கண கோட்யம்ஶ லேஶகம் ।
பிபந்தீந்த்ராதய இதி த்யாநமாசமநம் மதம் ॥

**ब्रह्मानन्दाब्धि** – பிரஹ்மாநந்தமாகிற ஸமுத்திரத்தில், **कल्लोलकण**–அலையிலிருந்து கிளம்பிய திவிலையில், **कोट्यंश**-

கோடியில் ஒரு அம்சத்தின், लेशं-சிறு துளியைத்தான், इन्द्राद्यः-இந்திரன் முதலான தேவர்கள், पिबन्ति-பானம் செய்கிறார்கள், इति-என்று, ध्यानं-தியானம் செய்வது, आचमनं-ஆசமனமென்று, मतं-எண்ணப்படுகிறது.

*பிரஹ்மானந்தமாகிற ஸமுத்திரத்தில் அலையின் திவலையில் கோடியில் ஒரு அம்சத்தின் சிறுதுளியைத் தான் இந்திரன் முதலான தேவர்கள் பானம் செய்கிறார்கள் என்று தியானம் செய்வது ஆசமனமென்று எண்ணப்படுகிறது. (13)*

**ब्रह्मानन्दजलेनैव लोकाः सर्वे परिप्लुताः ।**
**अक्लेद्योऽयमिति ध्यानमभिषेचनमात्मनः ॥ १४ ॥**

ப்ரஹ்மாநந்தஜலேனைவ லோகா: ஸர்வே பரிப்லுதா: ।
அக்லேத்யோऽயமிதி த்யாநமபிஷேசனமாத்மந: ॥

ब्रह्मानन्दजलेनैव-பிரஹ்மாநந்தமாகிற ஜலத்தினாலேயே, सर्वे-எல்லா, लोकाः-உலகங்களும், परिप्लुताः-நாலாபக்கங்களிலும் மூழ்கப்பட்டிருக்கின்றன. (ஆனால்) अयं-இந்த ஆத்மா (எந்த ஜலத்தினாலும்), अक्लेद्यः-நனைக்கக்கூடியவரல்ல, इति-என்று, ध्यानं-எண்ணுவதே, आत्मनः-ஆத்மாவிற்கு, अभिषेचनं-அபிஷேகமாகும்.

*பிரஹ்மாநந்தமாகிற ஜலத்தினாலேயே எல்லா உலகங்களும் நாலாபக்கங்களிலும் மூழ்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்த ஆத்மா எந்த ஜலத்தினாலும் நனைக்கக்கூடியவரல்ல என்று எண்ணுவதே ஆத்மாவிற்கு அபிஷேகமாகும். (14)*

**निरावरणचैतन्यं प्रकाशोऽस्मीति चिन्तनम् ।**
**आत्मलिङ्गस्य सद्वस्त्रमित्येवं चिन्तयेन्मुनिः ॥ १५ ॥**

நிராவரண சைதன்யம் ப்ரகாஶோऽஸ்மீதி சிந்தனம் ।
ஆத்மலிங்கஸ்ய ஸத்வஸ்த்ரமித்யேவம் சிந்தயேன்முனி: ॥

निरावरणचैतन्यं - மறைவில்லாத சைதன்யமாகவும், प्रकाशः-பிரகாச ஸ்வரூபமாகவும், अस्मि-நான் இருக்கிறேன்

इति-என்று; चिन्तनं-நினைப்பதே, आत्मलिङ्गस्य-ஆத்மாவாகிற லிங்கத்திற்கு, सद्वस्त्रं-நல்ல வஸ்திரம், इति-என்று, एवं-இவ்விதமாய், मुनिः - முனியானவர், चिन्तयेत् - எண்ண வேண்டும்.

மறைவில்லாத சைதன்யமாகவும் பிரகாச ஸ்வரூபமாகவும் நான் இருக்கிறேன் என்று நினைப்பதே ஆத்ம லிங்கத்திற்கு நல்ல வஸ்திரம் என்று எண்ணவேண்டும். (15)

त्रिगुणात्माशेषलोकमालिकासूत्रमस्म्यहम् ।
इति निश्चय एवात्र ह्युपवीतं परं मतम् ॥ १६ ॥

த்ரிகுணாத்மாசேஷ லோக மாலிகா ஸூத்ரமஸ்ம்யஹம் ।
இதி நிச்சய ஏவாத்ர ஹ்யுபவீதம் பரம் மதம் ॥

त्रिगुणात्म-ஸத்வ ரஜஸ் தமோ குணங்களாகிய முக்குணங்களை ஸ்வபாவமாகவுடைய अशेषलोक-எல்லா உலகங்களும் சேர்ந்த, मालिका=மாலைக்கு, सूत्रं-நாராக, अहं-நான், अस्मि-இருக்கிறேன் इति-என்ற, निश्चयः एव-தீர்மானமே, अत्र-இங்கு, परं-உத்தமமான, उपवीतं-யக்ஞோபவீதமாக, मतं हि-கருதப்படுகிறது.

ஸத்வ ரஜஸ் தமோ குணங்களாகிய முக்குணங்களை ஸ்வபாவமாகவுடைய எல்லா உலகங்களும் சேர்ந்த மாலைக்கு நாராக நான் இருக்கிறேன் என்ற தீர்மானமே இங்கு உத்தமமான யக்ஞோபவீதமாகக் கருதப்படுகிறது. (16)

अनेकवासनामिश्रप्रपञ्चोऽयं धृतो मया ।
नान्येनेत्यनुसंधानमात्मनश्चन्दनं भवेत् ॥ १७ ॥

அநேக வாஸநா மிச்ர ப்ரபஞ்சோऽயம் த்ருதோ மயா ।
நாந்யேநேத்யனுஸந்தானமாத்மநச்சந்தனம் பவேத் ॥

अनेक-பலவிதமான, वासना-வாஸனைகள், मिश्र-கலந்த प्रपञ्चः-பிரபஞ்சமாகிற, अयं-இது, मया-என்னால், धृतः-தாங்கப்பட்டிருக்கிறது. अन्येन-வேறு எதனாலும், न-இல்லை इति-

என்று; अनुसंधानं-அனுஸந்தானம் செய்வதுதான், आत्मनः-ஆத்மாவிற்கு, चन्दनं-சந்தனம் கொடுப்பதாக, भवेत्-ஆகும்.

பலவிதமான வாஸனைகள் கலந்த இந்த பிரபஞ்சம் என்னால் தாங்கப்பட்டிருக்கிறது, வேறு எதனாலும் இல்லை, என்று அனுஸந்தானம் செய்வதுதான் ஆத்மாவிற்குச்சந்தனம் கொடுப்பதாக ஆகும். (17)

रजःसत्त्वतमोवृत्तित्यागरूपैस्तिलाक्षतैः ।
आत्मलिङ्गं यजेन्नित्यं जीवन्मुक्तिप्रसिद्धये ॥ १८ ॥

ரஜஸ்ஸத்வ தமோவ்ருத்தி த்யாகரூபைஸ் திலாக்ஷதை: ।
ஆத்மலிங்கம் யஜேத் நித்யம் ஜீவன்முக்தி ப்ரஸித்தயே ॥

जीवन्मुक्तिप्रसिद्धये-ஜீவன்முக்தி நிலை நன்கு ஸித்திக்க வேண்டியதற்காக, रजःसत्त्वतमोवृत्तित्यागरूपैः-ரஜஸ், ஸத்வம், தமஸ் இவைகளால் ஏற்படும் மனோவிருத்திகளை விட்டு விடுவது என்பதாகிய, तिलाक्षतैः-எள்ளு கலந்த அக்ஷதைகளால், आत्मलिङ्गं ஆத்மாவாகிற லிங்கத்தை, नित्यं-எப்பொழுதும், यजेत्-பூஜிக்கவேண்டும்.

ஜீவன் முக்தி நிலை நன்கு ஸித்திக்கவேண்டியதற்காக ரஜஸ், ஸத்வம் தமஸ் இவைகளால் ஏற்படும் மனோவிருத்திகளை விட்டு விடுவது என்பதாகிய எள்ளுகலந்த அக்ஷதைகளால் ஆத்மாவாகிற லிங்கத்தை எப்பொழுதும் பூஜிக்கவேண்டும். (18)

ईश्वरो गुरुरात्मेति भेदत्रयविवर्जितैः ।
बिल्वपत्रैरद्वितीयैरात्मलिङ्गं यजेच्छिवम् ॥ १९ ॥

ஈச்வரோ குருராத்மேதி பேதத்ரய விவர்ஜிதை: ।
பில்வ பத்ரை ரத்விதீயைராத்மலிங்கம் யஜேத் ஶிவம் ॥

ईश्वरः-ஈசுவரன், गुरुः-குரு, आत्मा-ஆத்மா, इति-என்கிற, भेदत्रयविवर्जितैः-மூன்றுவித வேற்றுமையும் அற்று अद्वितीयैः-இரண்டற்றதாயிருக்கும் தன்மையாகிற, बिल्वपत्रैः பில்வபத்திரங்களினால், शिवं-மங்களஸ்வருபமான, आत्मलिङ्गं-ஆத்மாவாகிற லிங்கத்தை, यजेत्-பூஜிக்கவேண்டும்.

ஈச்வரன், குரு, ஆத்மா என்கிற மூன்றுவித வேற்றுமையும்மற்று இரண்டற்றதாயிருக்கும் தன்மையாகிற பில்வபத்திரங்களினால் மங்களஸ்வரூபமான ஆத்மலிங்கத்தைப் பூஜிக்கவேண்டும். (19)

समस्तवासनात्यागं धूपं तस्य विचिन्तयेत् ।
ज्योतिर्मयात्मविज्ञानं दीपं संदर्शयेद्बुधः ॥ २० ॥

ஸமஸ்த வாஸநா த்யாகம் தூபம் தஸ்ய விசிந்தயேத் ।
ஜ்யோதிர்மயாத்ம விஜ்ஞாநம் தீபம் ஸந்தர்சயேத் புத: ॥

**समस्तवासनात्यागं**–எல்லா வாஸனைகளையும் விட்டு விடுவதையே, **तस्य**–அவருக்கு, **धूपं**–தூபம் என்று, **विचिन्तयेत्**–எண்ண வேண்டும். **ज्योतिर्मयात्मविज्ञानं** ஜ்யோதி ஸ்வரூபமாயிருக்கும் ஆத்மாவை நன்கு அறிவது என்பதையே, **दीपं**–தீபமாக, **बुधः**–ஞானி, **संदर्शयेत्**–காட்ட வேண்டும்.

எல்லா வாஸனைகளையும் விட்டுவிடுவதையே அவருக்கு தூபம் என்று எண்ணவேண்டும். ஜ்யோதிஸ்வரூபமாயிருக்கும் ஆத்மாவை நன்கு அறிவது என்பதையே தீபமாக ஞானி காட்ட வேண்டும். (20)

नैवेद्यमात्मलिङ्गस्य ब्रह्माण्डाख्यं महोदनम् ।
पिबा(चिदा)नन्दरसं स्वादु मृत्युरस्योपसेचनम् ॥ २१ ॥

நைவேத்யமாத்மலிங்கஸ்ய ப்ரஹ்மாண்டாக்யம் மஹோதநம் ।
பிபா (சிதா) நந்தரஸம் ஸ்வாது ம்ருத்யுரஸ்யோபஸேசநம் ॥

**पिबा (चिदा) नन्दरसं**–சிதாநந்தத்தை ரஸமாகக்கொண்ட **ब्रह्माण्डाख्यं**–பிரஹ்மாண்டம் என்கிற, **महोदनं**–பெரிய அன்னம்தான். **आत्मलिङ्गस्य**–ஆத்மாவாகிற லிங்கத்திற்கு, **स्वादु**-வெகு ருசியாயுள்ள, **नैवेद्यं**–நைவேத்தியம், **अस्य**–அதற்கு, **मृत्युः**–மிருத்யுவேதான், **उपसेचनं**–தயிர் முதலிய வியஞ்ஜனம்.

சிதாநந்தத்தை ரஸமாகக்கொண்ட ப்ரஹ்மாண்டம் என்கிற பெரிய அன்னம்தான் ஆத்மாவாகிற லிங்கத்திற்கு ருசியுள்ள நைவேத்தியம். அதற்கு மிருத்யுவேதான் தயிர் முதலிய வியஞ்ஜனம். (21)

अज्ञानोच्छिष्टकरस्य क्षालनं ज्ञानवारिणा ।
विशुद्धस्यात्मलिङ्गस्य हस्तप्रक्षालनं स्मरेत् ॥ २२ ॥

அக்ஞானோச்சிஷ்டகரஸ்ய க்ஷாளநம் ஞானவாரிணா ।
விசுத்தஸ்யாத்மலிங்கஸ்ய ஹஸ்தப்ரக்ஷாளனம் ஸ்மரேத் ॥

**अज्ञानोच्छिष्टकरस्य**-அக்ஞானமாகிற எச்சில்பட்ட கைக்கு, **ज्ञानवारिणा**-ஞானமாகிற ஜலத்தினுல், **क्षालनं**-அலம்புதலையே **विशुद्धस्य**-மிகவும் பரிசுத்தமான, **आत्मलिङ्गस्य**-ஆத்மாவாகிற லிங்கத்திற்கு, **हस्तप्रक्षालनं**-கையலம்புதல் என்று, **स्मरेत्**-நினைக்கவேண்டும்.

அக்ஞானமாகிற எச்சில் பட்ட கையை ஞானமாகிற ஜலத்தினுல் அலம்புவதையே அதிபரிசுத்தமான ஆத்மாவாகிற லிங்கத்திற்கு கையலம்புதல் என்று நினைக்கவேண்டும். (22)

रागादिगुणशून्यस्य शिवस्य परमात्मनः ।
सरागविषयाभ्यासत्यागस्ताम्बूलचर्वणम् ॥ २३ ॥

ராகாதி குண சூந்யஸ்ய சிவஸ்ய பரமாத்மந: ।
ஸராக விஷயாப்யாஸ த்யாகஸ் தாம்பூலசர்வணம் ॥

**रागादिगुणशून्यस्य**-ராகம் முதலான குணங்களற்ற, **शिवस्य**-மங்களமான, **परमात्मनः**-பரமாத்மாவிற்கு, **सरागविषयाभ्यासत्यागः**-ஆசையுடன் விஷயங்களில் ஈடுபடுவது என்பதை விடுவதே, **ताम्बूलचर्वणं**-தாம்பூலம் போட்டுக்கொள்ளுதலாகும்.

ராகம் முதலான குணங்களற்ற மங்களமான பரமாத்மாவிற்கு, ஆசையுடன் விஷயங்களில் ஈடுபடுவதென்பதை விடுவதே தாம்பூலம் போட்டுக்கொள்ளுதலாகும். (23)

अज्ञानध्वान्तविध्वंसप्रचण्डमतिभास्करम् ।
आत्मनो ब्रह्मताज्ञानं नीराजनमिहात्मनः ॥ २४ ॥

அக்ஞாந த்வாந்த வித்வம்ஸ ப்ரசண்ட மதிபாஸ்கரம் ।
ஆத்மநோ ப்ரஹ்மதா ஞாநம் நீராஜநமிஹாத்மந: ॥

**अज्ञानध्वान्त**—அக்ஞானமாகிற இருட்டை, **विध्वंस**—போக்கடிப்பதில், **प्रचण्डं**—மிகவும் ஸாமர்த்தியமுள்ளதாயும், **अतिभास्करं**—ஸூர்யனை மீறியதாயும் (வெகு பிரகாசத்தைக் கொடுக்கக்கூடியதாயும்) உள்ள, **आत्मनो ब्रह्मताज्ञानं**—ஆத்மா பிரஹ்மம்தான் என்ற ஞானமே, **इह**—இங்கு, **आत्मनः**—ஆத்மாவிற்கு, **नीराजनं**—நீராஜனம் (கர்பூர ஆரத்தி) ஆகும்.

அக்ஞானமாகிற இருட்டைப் போக்கடிப்பதில் மிகவும் ஸாமர்த்தியமுள்ளதாயும் ஸூர்யனை மீறினதாயும் (வெகு பிரகாசத்தைக் கொடுக்கக்கூடியதாயும்) உள்ள ஆத்மா பிரஹ்மம் தான் என்கிற ஞானமே இங்கு ஆத்மாவிற்கு நீராஜனம் (கர்பூர ஆரத்தி) ஆகும். (24)

विविधब्रह्मसंदृष्टिमालिकाभिरलंकृतम् ।
पूर्णानन्दात्मतादृष्टिं पुष्पाञ्जलिमनुस्मरेत् ॥ २५ ॥

விவித ப்ரஹ்ம ஸந்த்ருஷ்டி மாலிகாபி ரலங்க்ருதம் ।
பூர்ணாநந்தாத்மதா த்ருஷ்டிம் புஷ்பாஞ்ஜலிமனுஸ்மரேத் ॥

**विविध**—நாநாவிதமான பிரபஞ்சம், **ब्रह्म**—ப்ரஹ்மம் என்ற **संदृष्टि**—ஸம்யக்ஞானமாகிற, **मालिकाभिः**—மாலைகளினால், **अलंकृतं**—அலங்கரிக்கப்பட்டதாயுள்ள, **पूर्णानन्दात्मतादृष्टिं**—பூர்ணமான ஆனந்தமே தன்னுடைய ஸ்வரூபமென்று உணர்வதை, **पुष्पाञ्जलिं**—புஷ்பாஞ்ஜலியாக, **अनुस्मरेत्**—நினைக்கவேண்டும்.

பலவிதமான பிரபஞ்சமும் ப்ரஹ்மம்தான் என்ற நல்லறிவு பூமாலை. இத்துடன் கூட நிறைந்த ஆனந்த ஸ்வரூபமான ப்ரஹ்மமே நான் என்று அறிவதையே புஷ்பாஞ்ஜலியாக நினைக்க வேண்டும். (25)

परिभ्रमन्ति ब्रह्माण्डसहस्राणि मयीश्वरे ।
कूटस्थाचलरूपोऽहमिति ध्यानं प्रदक्षिणम् ॥ २६ ॥

பரிப்ரமந்தி ப்ரஹ்மாண்ட ஸஹஸ்ராணி மயீச்வரே ।
கூடஸ்த்தாசலரூபோ஽ஹமிதி த்யானம் ப்ரதக்ஷிணம் ॥

ईश्वरे—ஈச்வரனுயிருக்கிற, मयि—என்னிடத்தில், ब्रह्माण्ड-सहस्राणि-ஆயிரக்கணக்கான பிரஹ்மாண்டங்கள், परिभ्रमन्ति சுழலுகின்றன. अहं—நான், कूटस्थाचलरूपः—கூடம் (பட்டரையில் அடி இரும்பு)போல் இருந்துகொண்டு அசையாமலிருக்கும் ஸ்வரூபத்தை உடையவன் इति—என்று, ध्यानं—தியானம் செய்வதுதான் प्रदक्षिणं—பிரதக்ஷிணம் செய்வதாகும்.

ஈசுவரனுயிருக்கிற என்னிடத்தில் ஆயிரக்கணக்கான பிரஹ்மாண்டங்கள் சுழலுகின்றன. நான் கூடம் (பட்டரையில் அடி இரும்பு) போல் இருந்துகொண்டு அசையாமலிருக்கும் ஸ்வரூபத்தையுடையவன் என்று தியானம் செய்வதுதான் பிரதக்ஷிணம் செய்வதாகும். (26)

विश्ववन्द्योऽहमेवास्मि नास्ति वन्द्यो मदन्यकः ।
इत्यालोचनमेवात्र स्वात्मलिङ्गस्य वन्दनम् ॥ २७ ॥

விச்வவந்த்யோ஽ஹமேவாஸ்மி நாஸ்தி வந்த்யோ மதந்யக: ।
இத்யாலோசனமேவாத்ர ஸ்வாத்மலிங்கஸ்ய வந்தனம் ॥

अहं एव—நான்தான், विश्ववन्द्यः—ஜகத்பூராவிலும் நமஸ்காரம் செய்யப்படவேண்டியவனுக, अस्मि—இருக்கிறேன். मदन्यकः—என்னைத்தவிர வேறு யாரும், वन्द्यः-வந்தனம் செய்யப்படவேண்டியவனுக, न अस्ति—கிடையாது इति-என்று, आलोचनं एव—ஆலோசிப்பதுதான், अत्र—இங்கு, स्वात्मलिङ्गस्य—தன்னுடைய ஆத்மாவாகிற லிங்கத்திற்கு वन्दनं—வந்தனமாகும்.

நான்தான் ஜகத் பூராவிலும் வந்தனம் செய்யப்படவேண்டியவனுக இருக்கிறேன். என்னைத்தவிர வேறு யாரும்

வந்தனம் செய்யப்படவேண்டியவஞக இல்லை என்று ஆலோசிப்பதுதான் இங்கு தன்னுடைய ஆத்மாவாகிற லிங்கத்திற்கு வந்தனமாகும். (27)

आत्मनः सत्क्रिया प्रोक्ता कर्तव्याभावभावना ।
नामरूपव्यतीतात्मचिन्तनं नामकीर्तनम् ॥ २८ ॥

ஆத்மந: ஸத்க்ரியா ப்ரோக்தா கர்தவ்யாபாவ பாவநா ।
நாமரூபவ்யதீதாத்ம சிந்தனம் நாமகீர்த்தனம் ॥

**आत्मनः**-ஆத்மாவிற்கு, **सत्क्रिया**-உபசாரம் என்பது, **कर्तव्याभावभावना**-செய்யவேண்டியதொன்றும் கிடையாது என்று பாவிப்பதே என்று, **प्रोक्ता**-சொல்லப்பட்டிருக்கிறது. **नामकीर्तनं**-நாம கீர்த்தனம் என்பது, **नामरूपव्यतीतात्मचिन्तनं**-நாமரூபங்களையெல்லாம் தாண்டின ஆத்மாவைச் சிந்திப்பதுதான்.

ஆத்மாவிற்கு உபசாரம் என்பது செய்யவேண்டியதொன்றும் கிடையாதென்று பாவிப்பதே என்று சொல்லப்பட்டிருக்கிறது. நாம கீர்த்தனம் என்பது நாமரூபங்களையெல்லாம் தாண்டின ஆத்மாவைச் சிந்திப்பதுதான். (28)

(அ) ஸாதாரணமாயுள்ள பாஹ்ய பூஜையில் த்ரிகரணங்கள் என்று சொல்லப்படும் சரீரம், வாக்கு, மனஸ் என்பவைகளால் செய்யவேண்டிய அம்சங்களில் ஆவாஹனத்தில் ஆரம்பித்து ஸ்தோத்திரம் வரையில் சரீரத்திலும் வாக்கிலும் செய்ய வேண்டியவைகளாகும். ஸ்தோத்திரம் முடிந்த பிறகு மனஸை ஒருமைப்படுத்தி தியானத்தில் ஈடுபடச்செய்வதே முறை. அந்த தியானம் நிலைக்கவேண்டுமாஞல் உபாஸிக்கப்படும் தேவதையின் ஏதேனும் ஒரு நாமாவை மனதிற்குள் உச்சரித்துக்கொண்டு அதன் அர்த்தத்தை அனுஸந்தானம் செய்யவேண்டும். அதன் பிறகு அந்த நாமா எவ்விதம் அந்த தேவதைக்கு நன்கு பொருந்துகிறதென்று ஆலோசிக்கவேண்டும். பிறகு அந்த நாமாவிஞல் குறிக்கப்படும் குணத்தோடு கூடிய மூர்த்தியை நன்கு தியானம் செய்ய முடியும். தியானம் செய்யச்செய்ய, தான் தியானம் செய்கிறேமென்பதையே மறந்து தியானத்திற்கு விஷயமான ஸ்வரூபத்திலேயே மனது லயித்துவிடும். ஆக வேதாந்த

விசாரத்தில் எப்படியோ அப்படியே பூஜாக்கிரமத்திலும் ஒருவிதமாக சிரவணம், மனனம், நிதித்யாஸனம், ஸமாதி என்கிற நான்கு படிகளும் உண்டு. அவைகள் ஞானிக்கு எவ்விதம் என்பதை மேலுள்ள சுலோகங்களில் ஸ்ரீமத் ஆசார்யார் வர்ணிக்கிறார்:—

श्रवणं तस्य देवस्य श्रोतव्याभावचिन्तनम् ।
मननं त्वात्मलिङ्गस्य मन्तव्याभावचिन्तनम् ॥ २९ ॥

ச்ரவணம் தஸ்ய தேவஸ்ய ச்ரோதவ்யாபாவ சிந்தனம் ।
மநநம் த்வாத்மலிங்கஸ்ய மந்தவ்யாபாவ சிந்தனம் ॥

तस्य–அந்த, देवस्य–ஸ்வயம்பிரகாச ஆத்மாவிற்கு, श्रवणं–சிரவணம் என்பது, श्रोतव्याभावचिन्तनं–கேட்டறிய வேண்டியதாக ஒன்றும் கிடையாதென்று சிந்திப்பதுதான். आत्मलिङ्गस्य–ஆத்மாவாகிற லிங்கத்திற்கு, मननं तु–மனனம் என்பதோ, मन्तव्याभावचिन्तनं–மனனம் செய்யவேண்டியதாக ஒன்றும் கிடையாதென்று சிந்திப்பதுதான்.

அந்த ஸ்வயம்பிரகாச ஆத்மாவிற்கு சிரவணம் என்பது கேட்டறியவேண்டியதாக ஒன்றும் கிடையாதென்று சிந்திப்பது தான். ஆத்மாவென்கிற லிங்கத்திற்கு மனனம் என்பது மனனம் செய்யவேண்டியதாக ஒன்றும் கிடையாதென்று சிந்திப்பதுதான்.

ध्यातव्याभावविज्ञानं निदिध्यासनमात्मनः ।
समस्तभ्रान्तिविक्षेपराहित्येनात्मनिष्ठता ॥ ३० ॥

समाधिरात्मनो नाम नान्यच्चित्तस्य विभ्रमः ।
तत्रैवं ब्रह्मणि सदा चित्तविश्रान्तिरिष्यते ॥ ३१ ॥

த்யாதவ்யாபாவ விக்ஞாநம் நிதித்யாஸனமாத்மந: ।
ஸமஸ்த ப்ராந்தி விக்ஷேப ராஹித்யேநாத்ம நிஷ்டதா ॥

ஸமாதிராத்மநோ நாம நாந்யத் சித்தஸ்ய விப்ரம: ।
தத்ரைவம் ப்ரஹ்மணி ஸதா சித்த விச்ராந்திரிஷ்யதே ॥

**आत्मनः**—ஆத்மாவிற்கு, **निदिध्यासनं**—நிதித்யாஸனம் என்பது, **ध्यातव्याभावविज्ञानं**—தியானம் செய்யவேண்டிய விஷயமே கிடையாதென்று அறிவதேயாகும். **आत्मनः**—ஆத்மாவிற்கு, **समाधिर्नाम**—ஸமாதி என்பது, **समस्त**—எல்லாவித, **भ्रान्ति**—பிராந்தியும், **विक्षेप**—விக்ஷேபமும், **राहित्येन** இல்லாத்தன்மையோடு, **आत्मनिष्ठता**—ஆத்மாவிடத்திலேயே நிலைத்திருத்தல் என்பதுதான். **अन्यत्**—வேறு, **न**—அல்ல. (மற்றவை) **चित्तस्य**—மனஸின், **विभ्रमः**—பிரமமேதான். **एवं**—இவ்விதமாக, **तत्र**—அந்த, **ब्रह्मणि**—பிரஹ்மத்தினிடத்தில், **सदा**—எப்பொழுதும், **चित्तविश्रान्तिः**—மனஸிற்கு ஓய்வு, **इष्यते**—விரும்பப்படுகிறது.

ஆத்மாவிற்கு நிதித்யாஸனம் என்பது தியானம் செய்ய வேண்டிய விஷயமே கிடையாதென்று அறிவதேயாகும். ஆத்மாவிற்கு ஸமாதி என்பது எல்லாவித பிராந்தியும் விக்ஷேபமும் இல்லாத்தன்மையோடு ஆத்மாவிடத்திலேயே நிலைத்திருத்தல் என்பதுதான், வேறு அல்ல. அவை மனஸின் பிரமமேதான். இவ்விதமாக அந்த பிரஹ்மத்தினிடத்தில் எப்பொழுதும் மனஸிற்கு ஓய்வு விரும்பப்படுகிறது.

[சிஷ்யன் எட்டாவது சுலோகத்தில் "உள்ளேயும் வெளியிலும் நிலைத்திருக்கும் பிரஹ்மத்திற்கு உத்வாஸனம் எப்படி?" என்று கேட்டதற்கு மாத்திரம் குரு பதில் சொல்லவில்லையென்பதை கவனிக்கவேண்டும் அவர் பதில் சொல்லாததினாலேயே ஸர்வ வியாபகமான பிரஹ்மத்திற்கு உத்வாஸனம் ஸாத்தியமில்லைதான் என்பது உறுதிப்படுத்தப்பட்டது.] (30–31)

(அ) பூஜாக்கிரமம் எல்லாம் ஏதாவது ஒரு பூஜாகல்பத்தி லிருக்குமே இந்த நிர்குண பிரஹ்மத்தை மனஸினால் பூஜை செய்வதற்கு என்ன பிரமாணம் எனில் வேதாந்தமே பிரமாணம் என்பதையும், இவ்விதம் மானஸிக பூஜை செய்கிறவருக்கு நிரதிசயானந்தருபமான மோக்ஷமே பலன் என்பதையும் கடைசி இரண்டு சுலோகங்களில் விளக்குகிறார்:—

**एवं वेदान्तकल्पोक्तस्वात्मलिङ्गप्रपूजनम् ।**
**कुर्वन्नामरणं वाऽपि क्षणं वा सुसमाहितः ॥ ३२ ॥**

सर्वदुर्वासनाजालं पदपांसुमिव त्यजेत् ।
विधूयाज्ञानदुःखौघं मोक्षानन्दं समश्नुते ॥ ३३ ॥

ஏவம் வேதாந்த கல்போக்த ஸ்வாத்ம லிங்க ப்ரபூஜனம் I
குர்வன்னாமரணம் வாऽபி க்ஷணம் வா ஸுஸமாஹித: II

ஸர்வதுர்வாஸநா ஜாலம் பதபாம்ஸுமிவ த்யஜேத் I
விதூயாக்ஞாந துக்கௌகம் மோக்ஷாநந்தம் ஸமச்நுதே II

**एवं**-இவ்விதமாக, **वेदान्तकल्पोक्त**-வேதாந்தமாகிற கல்பத்தில் சொல்லப்பட்ட, **स्वात्मलिङ्गप्रपूजनं**-தன்னுடைய ஆத்மாவாகிற லிங்கத்தை பூஜை செய்வதை, **आमरणं वाऽपि**-மரணம் வரையிலோ, **क्षणं वा**-ஒரு க்ஷணமேனுமோ, **सुसमाहितः**-நன்கு மனதை ஒருமைப்படுத்தியவராக, **कुर्वन्**-செய்கிறவர், **सर्वदुर्वासनाजालं**-எல்லாக் கெட்டவாஸனைக் கூட்டத்தையும், **पदपांसु इव**-காலிலுள்ள புழுதியைப்போல, **त्यजेत्**-உதறி விடுவர். **अज्ञानदुःखौघं**-அக்ஞானத்தையும் துக்கக் குவியலையும், **विधूय**-உதறிவிட்டு, **मोक्षानन्दं**-மோக்ஷானந்தத்தை, **समश्नुते**-நன்கு அடைவார்.

*இவ்விதமாக வேதாந்தமாகிற கல்பத்தில் சொல்லப்பட்ட தன்னுடைய ஆத்ம லிங்க பூஜையை மரணம் வரையிலோ ஒரு க்ஷணமேனுமோ நன்கு மனதை ஒருமைப்படுத்திச் செய்கிறவர் எல்லா கெட்ட வாஸனைக்கூட்டத்தையும் காலிலுள்ள புழுதியைப் போல உதறிவிடுவர் அக்ஞானத்தையும் அதனுல் ஏற்படும் துக்கக்குவியலையும் உதறிவிட்டு மோக்ஷானந்தத்தை நன்கு அடைவார்.* (32-33)

நிர்குண மாநஸ பூஜை முற்றும்

|| श्रीः ||

# || लघुवाक्यवृत्तिः ||

## லகுவாக்ய விருத்தி

[இச்சிறு பிரகரணத்தின் பெயரிலிருந்து ஏற்கனவே ஸ்ரீமத் ஆசார்யார் அனுக்ரஹித்திருக்கிற "வாக்ய விருத்தி" என்ற பிரகரணத்தின் ஸங்கிரஹமோ இது என்று தோன்றக்கூடியதே. ஆனால் வாக்கியத்தை எடுத்துக்கொண்டு அதிலுள்ள பதங்களுடைய தாத்பர்யத்தைத்தெளிவாக அந்த 'வாக்ய விருத்தி'யில் விளக்கியிருக்கிறபடியால் ஆத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் உள்ள ஐக்கியத்தை எப்படி அனுஸந்தானம் செய்வது என்பதை மாத்திரம் இதில் சுருக்கமாகக் கண்டிருக்கிறார். சுருக்கமாயிருப்பதினாலேயே விஷயம் கடினமாகிவிட்டது. அதை வேறு பாஷையில் சொல்வதும் மிக சிரமம். கூடியமட்டும் தெளிவாய் மொழி பெயர்ப்பதற்கு பிரயத்தினம் செய்கிறேன்.]

**स्थूलो मांसमयो देहः सूक्ष्मः स्याद्वासनामयः ।**
**ज्ञानकर्मेन्द्रियैः सार्धं धीप्राणौ तच्छरीरगौ ॥ १ ॥**

ஸ்தூலோ மாம்ஸமயோ தேஹ: ஸூக்ஷ்ம: ஸ்யாத்
வாஸநாமய: ।
ஞான கர்மேந்த்ரியை: ஸார்த்தம் தீப்ராணௌ
தச்சரீரகௌ ॥

**मांसमयः**–மாம்ஸமயமாயிருக்கிறதுதான், **स्थूलः**–ஸ்தூலமான, **देहः**–சரீரம், **वासनामयः**–வாஸனாமயமாயிருக்கிறதுதான், **सूक्ष्मः**–ஸூக்ஷ்ம சரீரம், **स्यात्**–ஆகும். **ज्ञानकर्मेन्द्रियैः**–ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் இவைகளுடன், **सार्धं**–சேர்ந்து, **धीप्राणौ**–அந்தக்கரணமும் பிராணனும், **तच्छरीरगौ**–அந்த ஸூக்ஷ்ம சரீரத்தில் இருப்பவைகள்.

மாம்ஸமயமாக நம் கண்ணுக்குப்புலப்படுவது ஸ்தூல சரீரமாகும், நம் கண்ணுக்குப்புலப்படாமல் வாஸனைமயமாயிருப்பது

ஸூக்ஷ்ம சரீரம். அந்தக்கரணம், பிராணன் ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள் இவைகளெல்லாம் ஸூக்ஷ்ம சரீரத்தில் உள்ளவை.

[ஞானஸ்வரூபமான ஆத்மாவை மறைத்துக்கொண்டு தெரியவொட்டாமல் செய்துகொண்டிருப்பது ஜடமாயும் அனாத்மாவாயுமுள்ள சரீரம். ஆத்மாவை உணர்வதற்கு இம்மறைவை விலக்க வேண்டியது அவசியமாயிருப்பதால் ஆத்மாவையும், அனாத்மாவையும் பிரித்துக் காட்டவேண்டியிருக்கிறது. இந்த சரீரம் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்று மூன்றுவிதம் அவைகளில் ஸ்தூலமென்பது இந்த மாம்ஸம், எலும்பு ரத்தம் முதலிய ஏழு தாதுக்கள் சேர்ந்து செய்யப்பட்டிருக்கும் சரீரம். இந்த சரீரம் தன்னால் அறியக்கூடியதாயிருப்பதுடன் மற்றவர்களினலும் அறியக்கூடியதாயிருப்பதால் ஸ்தூலம் எனப்படும். இதற்குக் காரணம் பஞ்சீகிருதமான பஞ்ச பூதங்களால் செய்யப்பட்டிருப்பதே. இது அன்னரஸத்தினலே ஏற்பட்டு அன்னத்தினலேயே போஷிக்கப்படுகிறபடியால் இதை அன்னமயகோசம் என்பார்கள். ஸூக்ஷ்ம சரீரம் என்பது பஞ்சீகரணம் செய்யப்படாத ஸூக்ஷ்ம பூதங்களாலேயே செய்யப்பட்டிருப்பதாலும் மற்றவர்களுக்கு விஷயமாகாததாலும் ஸூக்ஷ்மம் எனப்படும். இந்த சரீரத்தில் அடங்கியிருப்பவை பிராணமயகோசம், மனோமய கோசம், விக்ஞானமயகோசம், என்ற மூன்று கோசங்களும், பிராணமய கோசம் என்பது ஐந்து விருத்திகளோடு கூடிய பிராணனும், கர்மேந்திரியங்களும் சேர்ந்தது. மனோமய கோசம் என்பது ஸங்கல்ப விகல்பாத்மகமான மனஸ் என்கிற அந்தகரணத்தின் அம்சமும், ஞானேந்திரியங்களும் சேர்ந்தது. விக்ஞானமய கோசமென்பது நிச்சயாத்மகமான புத்தி என்கிற அந்தக்கரணத்தின் அம்சமும் ஞானேந்திரியங்களும் சேர்ந்தது. அந்தக்கரணத்தின் மற்ற அம்சங்களாகிய சித்தம் அஹங்காரம் என்பவைகளை முறையே மனஸிலும் புத்தியிலும் அந்தர்பாவம் செய்துகொள்ளவேண்டியது. இவ்விதமாயுள்ள மூன்று கோசங்களும் அடங்கிய ஸூக்ஷ்ம சரீரத்தில் கர்மேந்திரியங்களுடன் பிராணனும் ஞானேந்திரியங்களுடன் அந்தக்கரணமும் சேர்ந்தவை என்று இந்த சுலோகத்தில் சுருக்கமாகக் கண்டிருக்கிறார். மூன்றாவது சரீரமான காரண சரீரம் என்பது பஞ்சீகிருத பூதங்களாலாவது அபஞ்சீகிருத பூதங்களாலாவது செய்யப்பட்டதில்லை. இவ்விரண்டுவித பஞ்சபூதங்களுக்கும் ஆதிகாரணமா

யுள்ள அவ்யாகிருதம், அவித்யை, அக்ஞானம் முதலான பெயர்களால் வியவஹரிக்கப்படும் காரண பதார்த்தமே அதன் தன்மையாகும். இவ்விஷயம் அடுத்த சுலோகத்தின் ஆரம்பத்தில் சொல்லப்படுகிறது]. (1)

अज्ञानं कारणं साक्षी बोधस्तेषां विभासकः ।
बोधाभासो बुद्धिगतः कर्ता स्यात् पुण्यपापयोः ॥ २ ॥

அக்ஞாநம் காரணம் ஸாக்ஷீ போதஸ்தேஷாம் விபாஸக: ।
போதாபாஸோ புத்திகத: கர்த்தா ஸ்யாத் புண்யபாபயோ: ॥

**कारणं**—காரண சரீரம் என்பது, **अज्ञानं**—அக்ஞானமே யாகும். **तेषां**-இந்த மூன்றுவித சரீரங்களையும், **विभासकः**—பிரகாசப்படுத்துகிற, **बोधः**—அறிவு, **साक्षी**—ஸாக்ஷியெனப் படும். **बुद्धिगतः**—புத்தியில் ஏற்பட்ட, **बोधाभासः**-அந்த அறிவின் ஆபாஸம் (பிரதி பிம்பம்)தான், **पुण्यपापयोः**—புண்ணியத்தையும் பாபத்தையும், **कर्ता**—செய்கிறவனாக, ஆவான்.

அக்ஞானம்தான் காரணசரீரம். இந்த மூன்றுவித சரீரங்களையும் பிரகாசப்படுத்துகிற அறிவு ஸாக்ஷியெனப்படும். புத்தியில் ஏற்பட்ட அந்த அறிவின் பிரதிபிம்பம் தான் புண்ணியத்தையும் பாபத்தையும் செய்கிறவனாக ஆவான்.

[காரண சரீரம், கார்யங்களான ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்கள், இவை யாவும் ஜடமேயானதால் தானாக பிரகாசிக்கக்கூடிய யோக்கியதையற்றவை. இவைகளை பிரகாசிக்கும்படி செய்து கொண்டு அவைகளால் ஒருவிதத்திலும் பாதிக்கப்படாமல் ஸாக்ஷியாகவிருந்து இவைகளைப் பார்த்துக்கொண்டிருக்கும் அறிவே ஆத்மாவாகும். இந்த சுத்தமான ஆத்மாவிற்கு கர்மாவின் ஸம்பந்தமோ, கர்மாவினால் ஏற்படும் புண்ய பாப ஸம்பந்தமோ, புண்ய பாபங்களால் ஏற்படும் ஸுகதுக்க ஸம்பந்தமோ கிடையாது. சரீராதிகளுடன் கலந்துகொண்டு அவைகளையும் தான் என்று அபிமானிக்கும் ஜீவன் என்கிற ஆபாஸ ஆத்மாவிற்குத்தான் இவையெல்லாம் உண்டு. தான் என்று முதலில் அந்தக்கரணத்திலும் அதையொட்டி இந்திரியங்களிலும், அதையொட்டி சரீரத்திலும், நினைக்கும் ஆத்மாதான்

கர்மாவைச் செய்யவும் கர்ம பலனை அனுபவிக்கவும் முடியும். கர்மாவைச்செய்வதும் அதன்பலனை அனுபவிப்பதுமே ஸம்ஸாரம் என்பபடும். ஆகையால் புத்தியில் பிரதிபலித்திருக்கும் ஆபாஸ ஆத்மாவான ஜீவன்தான் கர்மாவிற்குக் கட்டுப்பட்டு பலவித ஜன்மாக்களையடைந்து பலவித ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறான்]. (2)

स एव संसरेत् कर्मवशात् लोकद्वये सदा ।
बोधाभासात् शुद्धबोधं विविच्यादतियत्नतः ॥ ३ ॥

ஸ ஏவ ஸம்ஸரேத் கர்மவஶாத் லோகத்வயே ஸதா I
போதாபாஸாத் ஶுத்தபோதம் விவிச்யாததியத்நத: II

**सः एव**– அவன் தான், **कर्मवशात्** –கர்மாவிற்கு வசப்பட்டு **सदा**-எப்பொழுதும், **लोकद्वये**-இஹலோகம் பரலோகம் இரண்டிலும், **संसरेत्** –சுழலுவான் (ஆகையால்), **बोधाभासात्**- அறிவின் ஆபாஸமான ஜீவனிடமிருந்து, **शुद्धबोधं**-சுத்தமான அறிவான ஆத்மாவை, **अतियत्नतः**–விசேஷமாக பிரயத்தினம் செய்து, **विविच्यात्** –பிரித்து அறியவேண்டும்.

அந்த சிதாபாஸன் தான் கர்மாவிற்கு வசப்பட்டு எப்பொழுதும் இஹலோகம் பரலோகம் இரண்டிலும் சுழலுகிறான். ஆகையால் அறிவின் ஆபாஸமான ஜீவனிடமிருந்து சுத்தமான அறிவான ஆத்மாவை விசேஷமாக பிரயத்தினம் செய்து பிரித்து அறியவேண்டும்.

[சுத்தமான அறிவு ஸ்வரூபமான ஆத்மா கேவலம் ஸாக்ஷியேயாகும், புத்தியில் பிரதிபலிக்கும் அறிவின் ஆபாஸமான ஜீவனே ஸம்ஸாரத்தில் சுழலுகிறான் என்ற காரணத்தினால் ஸம்ஸாரத்திலுள்ள ஸுகதுக்கங்களிலிருந்து விலகிக்கொள்ள நினைப்பவன் தன்னை சுத்தமான ஆத்மாவென்றே உணரவேண்டுமென்று ஏற்படுகிறது.] (3)

(அ) அவ்விதம் உணர்வது எப்படியென்பதை மேல் சுலோகங்களில் விளக்குகிறார்:—

जागरस्वप्नयोरेव बोधाभासविडम्बना ।
सुप्तौ तु तल्लये बोधः शुद्धो जाड्यं प्रकाशयेत् ॥ ४ ॥

ஜாகர ஸ்வப்னயோரேவ போதாபாஸ விடம்பநா I
ஸுப்தௌ து தல்லயே போத: ஶுத்தோ ஜாட்யம்
ப்ரகாஶயேத் II

**जागरस्वप्नयोरेव**-ஜாக்கிரத், ஸ்வப்னம் என்ற இரண்டு நிலைகளில்தான், **बोधाभासविडम्बना**-அறிவின் ஆபாஸமான ஜீவனின் சேஷ்டை. **सुप्तौ तु**-ஸுஷுப்தியிலோ, **तल्लये**-அந்த ஆபாஸன் அடங்கியிருக்கும்போது, **शुद्धः**-சுத்தமான, **बोधः**-அறிவே, **जाड्यं**-அக்ஞானத்தை, **प्रकाशयेत्**-பிரகாசப் படுத்தும்.

*ஜாக்ரத், ஸ்வப்னம் என்ற இரண்டு நிலைகளில்தான் சிதாபாஸனுன ஜீவனின் சேஷ்டை. ஸுஷுப்தியிலோ சிதாபாஸன் அடங்கியிருக்கும்போது சுத்தமான அறிவே அக்ஞானத்தைப் பிரகாசப்படுத்தும்.*

*[உலகத்திலுள்ள அனுபவங்கள் யாவற்றையும் மூன்ருகப் பிரிக்கலாம். தேஹேந்திரியாதிகளை வைத்துக்கொண்டு வெளிப் பிரபஞ்சத்துடன் வியவஹாரம் செய்வதான ஜாக்கிரத் என்பது ஒன்று. தேஹம் இந்திரியங்கள் எல்லாம் ஒடுங்கியும் வாஸனை மயமான புத்தி மாத்திரம் இருந்துகொண்டு வாஸனையினுலேயே தேஹேந்திரியாதிகளையும் பிரபஞ்சத்தையும் உண்டுபண்ணிக் கொண்டு தனக்குள்ளேயே வியவஹரிப்பது ஸ்வப்னம் எனப் படும். இந்த புத்தியும் அடங்கி எவ்வித வியவஹாரமுமன்னியி லிருந்த போதிலும் "நான் ஸுகமாகத்தூங்கினேன், நான் எதையும் அறியவில்லை" என்று பின்னுல் ஞாபகப்படுத்திச் சொல்லக்கூடியதான அனுபவம் மூன்ருவது நிலையான ஸுஷுப்தி எனப்படும். புத்தியில் பிரதிபலிக்கிறவனே ஆபாஸன் என்றும் அவனே ஸுகதுக்க ரூபமான ஸம்ஸாரத்தை அனுபவிக்கிருன் என்றும் சொன்னபடியாலும் புத்தி ஜாக்கிரத்தில் தேஹேந்திரி யாதிகளுடனும், ஸ்வப்னத்தில் தனித்தும் வியவஹரிக்கிறபடி யாலும், ஸுகதுக்கானுபவம் இவ்விரண்டு நிலைகளில்தான் உண்டு. ஜாக்கிரத்தில் போல வெளிப்பிரபஞ்சமும், ஸ்வப்னத் தில் போல உள் வாஸனுப்பிரபஞ்சமும் இல்லாமல் போனுலும் அனுபவத்திற்கு ஸாதனமாக ஸாமான்யமாகக் கருதப்படுகிற தேஹம், இந்திரியங்கள் புத்தி இவை யாவும் அடங்கியிருந்தும் கூட ஸுஷுப்தி தசையில்-ஏற்படும் பிரஸித்தமான விலக்ஷண*

மான அனுபவம் எப்படி ஏற்படுகிறதென்று கவனித்துப் பார்த்தால் அந்த நிலையில் ஆபாஸனும் அடங்கிவிட்டபடியால் சுத்தமான அறிவு ரூபமான ஆத்மாதான் எவ்விதக்கருவியையும் அபேக்ஷிக்காமல் ஸ்வயம்பிரகாசனாய் விளங்குகிறான் என்று தெரிகிறது. ஆனால் புத்தியானது இல்லாமலே போய்விடாமல் பீஜரூபமாகத் தன் காரணமான அக்ஞானத்தில் அடங்கி மாத்திரம் இருப்பதால், அந்த ஸ்வயம்பிரகாச ஆத்மா இந்த அக்ஞானத்தை விளக்குகிறது. ஆத்மஸ்வரூபம் பிரகாசிப்பதினால் ஸுகானுபவமும் அக்ஞானத்தை விளக்குவதினால் அக்ஞான அனுபவமும் ஸமகாலத்தில் இருக்கின்றன. அதினாலேயே "நான் ஸுகமாகத் தூங்கினேன்" என்று சொல்வதுடன் "நான் எதையும் அறியவில்லை" என்றும் சொல்ல முடிகிறது. "நான் எதையும் அறியவில்லை" என்று சொல்வதினாலேயே "அறியப்படும் விஷயங்கள் எதுவும் என் அறிவிற்கு விஷயமாகவில்லை" என்று மாத்திரம் ஏற்படுமே தவிர "அந்த ஸமயம் எனக்கு அறிவும் இல்லை" என்று ஏற்படாது. ஆகையால் விஷயத்தை எதிர்பாராததாயும் அக்ஞானத்தை மாத்திரம் விளக்குவதாயும் ஓர் அறிவு இருக்கிறதென்பது ஸித்தம். இவ்விதமாக ஜாக்ரத் ஸ்வப்னவஸ்தைகளில் சேஷ்டிக்கும் ஆபாஸனையும் ஸுஷுப்தியில் விளங்கும் சுத்தபோதஸ்வரூபனாக ஆத்மாவையும் தனித்துப் பிரித்துப்பார்க்கமுடியுமென்பதை எடுத்துக் காட்டுகிறார். ஆனால் இதிலிருந்து சுத்தமான ஆத்மா ஸுஷுப்தியில் மட்டும் தான் பிரகாசிப்பதுபோலவும் ஜாக்ரத் ஸ்வப்னங்களில் சுத்த ஆத்மாவிற்கு பிரகாசமே இல்லை போலவும் தோன்றக் கூடும். அதற்காக சுத்த ஆத்மா அவ்விரண்டு அவஸ்தைகளிலும் கூட பிரகாசிக்கிறதென்றும், அவ்விரண்டு அவஸ்தைகளில் பிரகாசிக்கிறதாய்த் தோன்றுகிற ஆபாஸனுடைய பிரகாசமே வாஸ்தவத்தில் ஆத்மப்பிரகாசம்தான் என்றும், சுத்த ஆத்மாவின் ஸம்பந்தமன்னியில் ஆபாஸனுக்கு பிரகாசிக்கும் தன்மையோ பிரகாசப்படுத்தும் தன்மையோ கிடையாதென்றும் மேலால் விளக்குகிறார்.] (4)

जागरेऽपि धियस्तूष्णींभावः शुद्धेन भास्यते ।
धीव्यापाराश्च चिद्भास्याश्चिदाभासेन संयुताः ॥ ५ ॥

ஜாகரேऽபி தியஸ்தூஷ்ணீம்பாவ: ஶுத்தேன பாஸ்யதே ।
தீவ்யாபாராச்ச சித்பாஸ்யாச் சிதாபாஸேன ஸம்யுதா: ॥

**जागरे अपि**–ஜாக்கிரத் காலத்திலும்கூட, **धियः तूष्णीं-भावः**–புத்தியானது எவ்வித வியாபாரமும் அன்னியில் இருப்பது, **शुद्धेन**–சுத்தபோத ஸ்வரூபனான ஆத்மாவினால், **भास्यते**–விளக்கப்படுகிறது. **धीव्यापाराः च**–புத்தியின் எல்லா வியாபாரங்களும்கூட, **चिद्भास्याः**–சுத்த அறிவினாலேயே விளக்கப்படுகின்றன; (ஆனால் அந்த ஸமயம் அவைகள்), **चिदाभासेन**–அறிவின் ஆபாஸத்துடன், **संयुताः**–கூடியிருப்பவைகள்.

ஜாக்ரத் காலத்திலும் கூட புத்தியானது எவ்வித வியாபாரமும் அன்னியில் இருப்பது சுத்தபோத ஸ்வரூபனான ஆத்மாவினால் தான் விளக்கப்படுகிறது. அறிவின் ஆபாஸத்துடன் கூடிய புத்தியின் எல்லா வியாபாரங்களும் கூட சுத்த அறிவினாலேயே விளக்கப்படுகின்றன.

[தேஹேந்திரியாதிகளின் ஸம்பந்தமன்னியில் சுத்த அறிவு ஸ்வரூபமாய் ஆத்மா இருப்பதை உணர்வதற்கு ஸுஷுப்தி வரையில் போகவேண்டுமென்பது அவசியமில்லை. ஜாக்கிரத் அவஸ்தையிலேயே உணர முடியுமென்கிறார். காமக்குரோதாதிகளோ, ஸங்கல்ப விகல்பாதிகளோ எவ்வித வியாபாரமுமன்னியில் ஜாக்ரத் காலத்திலேயே சில ஸமயம் புத்தி நின்றுவிடும். அந்த ஸமயம் "இப்பொழுது என் புத்தி எவ்வித வியாபாரமுமன்னியில் நிச்சலமாக இருக்கிறது" என்று உணர்வது ஆத்மாவேயாகும். ஏனென்றால் இவ்வறிவிற்கு புத்தி விஷயமாக ஆகிவிட்டது; ஆகவே இவ்வறிவிற்கு புத்தி அறிபவதாகவாவது ஸாதனமாகவாவது இருக்கமுடியாது. இவ்விதம் புத்தி நிச்சலமாயிருக்கும்போது சுத்தமான ஆத்மா பிரகாசிக்கிறது என்று சொன்னதினால் புத்தி நிச்சலமில்லாமல் வியவஹரிக்கும்போது சுத்த ஆத்மாவை அறியமுடியாதோவென்ற ஸந்தேஹம் ஏற்படக் கூடியது. அதற்கிடமன்னியில் புத்தி சேஷ்டிக்கும்போதும் அவ்வாத்மாவை அறியலாமென்று காட்டுகிறார். புத்தியோ அதன் சேஷ்டைகளோ யாவற்றும் ஜடமே, அவைகளுக்குப் பிரகாசிக்கும் தன்மை கிடையாது. அவைகள் பிரகாசிக்க வேண்டுமானால் பிரகாசத்தன்மையுள்ள வேறொன்றுடன் கலந்தேயாகவேண்டும். அவ்விதம் கலப்பது ஆபாஸ அறிவு. அந்த ஆபாஸ அறிவிற்குப் பிரகாசிக்கும் தன்மையை கொடுப்பது

சுத்த அறிவு ஸ்வரூபமான ஆத்மாவேயாகையால் ஆபாஸத்துடன் கலந்த புத்தியின் வியாபாரங்களுக்கு பிரகாசிக்கும் தன்மையைக் கொடுப்பதும் அந்த சுத்த அறிவேயாகுமென்பதில் ஸந்தேஹிக்க இடமில்லை. ஆகையால் புத்தியின் சேஷ்டைகளையோ சேஷ்டையின்மையையோ இரண்டையும் வாஸ்தவமாகப் பிரகாசப் படுத்துவது சுத்தமான ஆத்மாவேதான்.] (5)

वन्हितप्तजलं तापयुक्तं देहस्य तापकम् ।
चिद्भास्या धीस्तदाभासयुक्ताऽन्यं भासयेत् तथा ॥ ६ ॥

வஹ்நிதப்தஜலம் தாபயுக்தம் தேஹஸ்ய தாபகம் ।
சித்பாஸ்யா தீஸ்ததாபாஸ யுக்தாऽந்யம் பாஸயேத் ததா ॥

वन्हितप्तजलं-நெருப்பினால் சூடுஏறிய ஜலம், तापयुक्तं-சூடோடு கூடினதாய், देहस्य-தேஹத்திற்கு, तापकं-சூட்டைக் கொடுக்கிறது. तथा-அதேமாதிரி, धीः-புத்தியானது, चिद्भास्या-சுத்த அறிவினால் பிரகாசிக்கப்பட்டு, तदाभासयुक्ता-அவ்வறிவின் ஆபாஸத்துடன் கூடியதாக இருந்துகொண்டு अन्यं-வேறு பதார்த்தத்தை, भासयेत्-பிரகாசப்படுத்தும்.

நெருப்பினால் சூடு ஏறிய ஜலம் சூடோடு கூடினதாய் தேஹத்திற்கு சூட்டைக்கொடுக்கிறது. அதேமாதிரி, புத்தியானது சுத்த அறிவினால் பிரகாசிக்கப்பட்டு அவ்வறிவின் ஆபாஸத்துடன் கூடியதாக இருந்துகொண்டு வேறு பதார்த்தத்தை பிரகாசப்படுத்தும்.

[புத்தி ஸ்வபாவத்தில் ஜடமாயிருந்தால் விஷயங்களை அறியும் யோக்கியதை அதற்கு எப்படி ஏற்பட்டதென்பதை விளக்க திருஷ்டாந்தம் சொல்கிறார். ஜலத்தின் ஸ்வபாவம் குளிர்ச்சி. ஆனாலும் நெருப்பின் ஸம்பந்தத்தினால் வெந்நீராக ஆகிவிட்டபிறகு நம் உடம்பில் ஸம்பந்தப்படும்போது சுடுகிறது. "ஜலம் சுடுகிறது" என்று வியவஹாரமிருந்தபோதிலும வாஸ்தவத்தில் சுடுவது ஜலத்தில் ஸம்பந்தப்பட்டிருக்கும் அக்னியேயாகும். அப்படியே புத்தியானது ஜடமாயிருப்பதால் அறியும் தன்மையோடு கூடின ஆத்மாவின் ஸம்பந்தத்தினால் "புத்தி அறிகிறது" என்ற வியவஹாரம் ஏற்படுகிறது. ஆகையால் புத்தி அறியும்போதே அதற்கு ஸ்வயமாக அறியும் தன்மை கிடையாததினால் எதனுடன்

கலந்துகொண்டதால் அறியும் தன்மையுள்ளது போல் தோன்றுகிறதோ அதுவே ஆத்மாவென்று ஜாக்கிரத் நிலையிலேயே உணரலாம்.] (6)

(அ) இவ்விஷயத்தையே இன்னமும் விஸ்தாரமாக மேலால் விளக்குகிறார்:—

रूपादौ गुणदोषादिविकल्पा बुद्धिगाः क्रियाः ।
ताः क्रिया विषयैः सार्धं भासयन्ती चितिर्मता ॥ ७ ॥

ரூபாதௌ குணதோஷாதிவிகல்பா புத்திகா: க்ரியா: ।
தா: க்ரியா விஷயை: ஸார்த்தம் பாஸயந்தீ சிதிர் மதா ॥

**रूपादौ**-ரூபம் முதலானவைகளில், **गुणदोषादिविकल्पाः**-குணம் தோஷம் முதலான விகல்பங்கள், **बुद्धिगाः**-புத்தியிலுள்ள, **क्रियाः**-வியாபாரங்களாகும். **विषयैः सार्धं**-விஷயங்களோடு சேர்த்து, **ताः**-அந்த, **क्रियाः**-வியாபாரங்களை, **भासयन्ती**-பிரகாசப்படுத்துவது, **चितिः**-அறிவு, **मता**-எனப்படும்.

ரூபம் முதலானவைகளில் குணம் தோஷம் முதலான விகல்பங்கள் புத்தியிலுள்ள வியாபாரங்களாகும். விஷயங்களோடு சேர்த்து அந்த வியாபாரங்களை பிரகாசப்படுத்துவது அறிவு எனப்படும்.

[ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி என்ற ஐந்து பூதங்களும் அறிவிற்கு எட்டும்போது சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து விஷயங்களாகின்றன. அவ்விஷயங்களின் ஸ்வரூபத்தில் நல்லது, கெட்டது, தள்ளத்தகுந்தது, எடுத்துக்கொள்ளத்தகுந்தது முதலான அம்சங்கள் கிடையாது. ஆனால் அவைகள் வாஸனையோடு கூடிய புத்திக்கு விஷயமாகும்போது அவைகள் இவ்வித அம்சங்கள் உள்ளவைகளாகத் தோன்றுகின்றன. இத்தோற்றங்களெல்லாம் விஷயங்களைச்சேர்ந்தவையல்ல; புத்தியையே சேர்ந்தவை. புளிப்பு யாருக்கும் புளிப்பாகவே இருந்தபோதிலும் ஒருவனுக்கு விரும்பத்தக்கதாகவும் இன்னொருவனுக்கு வெறுக்கத் தக்கதாகவும் இருப்பதற்குக்காரணம் அவரவர்களின் புத்தியிலுள்ள ஸம்ஸ்காரங்கள்தான். புளிப்பு

என்று நமக்கு எடுத்துக்காட்டுவதும் ஆத்மாதான்; அது நல்லது கெட்டது என்று எடுத்துக்காட்டுவதும் ஆத்மாதான். புளிப்பு முதலானதைத் தெரிவிக்கும் இந்திரியங்களோ, நல்லது கெட்டது முதலானதைத் தெரிவிக்கும் புத்தியோ இரண்டும் ஜடமான தினால் அவைகளுக்குத் தெரிவிக்கும் தன்மை தானுகக் கிடையாத தினால் அத்தன்மையை அவைகளில் தோற்றவைத்தது ஆத்மா வென்று அறியவேண்டும்.] (7)

रूपाच्च गुणदोषाभ्यां विविक्ता केवला चितिः ।
सैवानुवर्तते रूपरसादीनां विकल्पने ॥ ८ ॥

ரூபாச்ச குணதோஷாப்யாம் விவிக்தா கேவலா சிதி: I
ஸைவாநுவர்த்ததே ரூப ரஸாதீநாம் விகல்பநே II

**रूपाच्च**–ரூபத்திலிருந்தும், **गुणदोषाभ्यां**-குணதோஷங்களி லிருந்தும், **विविक्ता**–தனித்து வேறுபட்டதாக இருப்பது, **केवला**–சுத்தமான, **चितिः**–அறிவு **सा एव**–அதுவேதான், **रूपरसादीनां**–ரூபம் ரஸம் முதலானவை விஷயமாக, **विकल्पने**–விகல்பம் செய்யும்போது, **अनुवर्तते**-தொடர்ந்து இருந்து வருகிறது

ரூபத்திலிருந்தும் குண தோஷங்களிலிருந்தும் தனித்து வேறுபட்டதாக இருப்பது சுத்தமான அறிவு. அதுவேதான் ரூபம் ரஸம் முதலானவை விஷயமாக விகல்பம் செய்யும்போது தொடர்ந்து இருந்து வருகிறது.

[" இது மஞ்சள் நிறம் " என்று ரூபத்தை அறிவதிலும் " இது நன்றாயிருக்கிறது " என்று குணத்தை அறிவதிலும் பொதுவா யிருக்கிற அறிவு அறியப்படும் ரூபாதிகளாகவாவது குண தோஷங்களாகவாவது ஆகாது; அவைகளுக்கு வேறுபட்டே நிற்கும். அப்படியே "நான் ரூபத்தை அறிகிறேன்", "நான் ரஸத்தை அறிகிறேன்" என்றெல்லாம் உணரும்போது அவ்வறிவு ரூப ரஸாதிகளுக்கு வேறாக இருந்து கொண்டு அவைகளின் அனுபவ காலத்திலும் ஊடுருவிச் சென்றுகொண்டேயிருக்கிற தென்று தெரிகிறது. ரூபத்தை அறியும்போது ரஸம் இல்லை; ரஸத்தை அறியும்போது ரூபம் இல்லை; ஆனாலும் இரண்டு காலத்திலும் அறிவு மாத்திரம் இருந்துகொண்டிருக்கிறது.

அறிவிற்கு விஷயமான பதார்த்தங்கள் வேறுபட்டுக்கொண்டே யிருந்தபோதிலும் அவைகளை விஷயீகரிக்கும் அறிவு மாத்திரம் வேறுபடாமல் ஒரே ரீதியாக இருந்து வருகிறது. இவ்விஷயத்தை நன்கு தெளிவுபடுத்துவதற்காக மேல் சுலோகங்களில் திருஷ்டாந்தம் கூறப்படுகிறது.] (8)

**क्षणे क्षणेऽन्यथाभूता धीविकल्पाश्चितिर्न तु ।**
**मुक्तासु सूत्रवद् बुद्धिविकल्पेषु चितिस्तथा ॥ ९ ॥**

க்ஷணே க்ஷணேऽன்யதாபூதா தீவிகல்பாச்சிதிர் ந து ।
முக்தாஸு ஸூத்ரவத் புத்தி விகல்பேஷு சிதிஸ்ததா ॥

**धीविकल्पाः**-புத்தியின் விகல்பங்கள், **क्षणे क्षणे**-ஒவ்வொரு க்ஷணத்திலும், **अन्यथाभूताः**-வெவ்வேறாக இருப்பவைகள், **चितिः तु**-அறிவு மாத்திரம், **न**-அப்படியல்ல. **मुक्तासु**-முத்துக்களுக்குள், **सूत्रवत्**-கயிறுபோல, **तथा**-அப்படியே, **बुद्धिविकल्पेषु**-புத்தியின் விகல்பங்களில், **चितिः**-அறிவு (இருக்கிறது.)

புத்தியின் விகல்பங்கள் ஒவ்வொரு க்ஷணத்திலும் வெவ்வேறாக இருப்பவைகள். அறிவு மாத்திரம் அப்படியல்ல. முத்துக்களுக்குள் கயிறு இருப்பதுபோல புத்தியின் விகல்பங்களில் அறிவு இருக்கிறது.

[முத்துமாலையில் முத்துக்கள் பலவாக இருந்தபோதிலும் எல்லா முத்துக்களிலும் கோர்க்கப்பட்டுள்ள நூல் ஒன்றுதான். இதுபோல புத்தியின் விகல்பங்கள் நிமிஷத்துக்கு நிமிஷம் வெவ்வேறாக வந்துகொண்டிருந்தபோதிலும் எல்லா விகல்பங்களிலும் ஊடுருவியுள்ள அறிவு ஒன்றுதான்.] (9)

(அ) இவ்விதமாக ஸகல புத்தி விருத்திகளிலும் பிரகாசிப்பது ஆத்ம சைதன்யம்தான் என்றிருந்தால், அது ஏன் ஸ்பஷ்டமாகத் தெரியவில்லையென்று ஏற்படக்கூடிய ஸந்தேஹத்திற்கு முத்துமாலை திருஷ்டாந்தத்தினாலேயே ஸமாதானம் கூறுகிறார்:—

**मुक्ताभिरावृतं सूत्रं मुक्तयोर्मध्य ईक्ष्यते ।**
**तथा वृत्तिविकल्पैश्चित् स्पष्टा मध्ये विकल्पयोः ॥ १० ॥**

முக்தாபி ரார்வ்ருதம் ஸூத்ரம் முக்தயோர் மத்ய ஈக்ஷ்யதே ।
ததா வ்ருத்தி விகல்பைச்சித் ஸ்பஷ்டா மத்யே விகல்பயோ:

सूत्रं-கயிறு, मुक्ताभिः-முத்துக்களினுல், आवृतं-மறைக்கப்பட்டிருக்கிறது. ஆனுல், मुक्तयोः-ஒரு முத்துக்கும் அடுத்த முத்துக்கும், मध्ये-இடையில், ईक्ष्यते-காணப்படுகிறது. तथा-அப்படியே, वृत्तिविकल्पैः-வெவ்வேருன புத்திவிருத்திகளினுல் चित्-அறிவு (மறைக்கப்பட்ட போதிலும்), विकल्पयोः-ஒரு விருத்திக்கும் அடுத்த விருத்திக்கும், मध्ये-இடையில், स्पष्टा-ஸ்பஷ்டமாக (காணப்படும்.)

கயிறு முத்துக்களினுல் மறைக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் ஒரு முத்துக்கும் அடுத்த முத்துக்கும் இடையில் காணப்படுகிறது. அப்படியே வெவ்வேருன புத்திவிருத்திகளினுல் அறிவு மறைக்கப்பட்டபோதிலும் ஒரு விருத்திக்கும் அடுத்த விருத்திக்கும் இடையில் ஸ்பஷ்டமாகக் காணப்படும்.

[ஆத்மாவை ஜாக்கிரத் காலத்தில் எவ்விதம் உணர்வதென்ருல் புத்தி சேஷ்டிக்காமலிருக்கும்போது காணலாம் என்று 5 வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. ஆனுல் புத்தியானது எப்பொழுதும் ஏதேனும் ஒரு விருத்தியில் மாறி மாறி ஈடுபட்டுக் கொண்டேயிருக்கிறபடியால் அது சேஷ்டிக்காக ஸமயத்தைக் காணவில்லையேயென்ருல், அது சேஷ்டித்துக்கொண்டிருக்கும் போதே, அதற்கு ஸ்வயமாக சேஷ்டிக்கும் தன்மை கிடையாததால் அதை சேஷ்டிக்கும்படி செய்துகொண்டும் அந்த சேஷ்டைகள் எவ்விதமாக மாறுபட்டாலும் தான்மாத்திரம் மாறுபடாமலே இருந்துகொண்டும் இருக்கிற அறிவே ஆத்மாவென்று அறியலாமென்று சொல்லப்பட்டது. இப்பொழுது புத்தி சேஷ்டிக்காத ஸமயமே கிடையாதென்று நினைப்பது தவறு என்பதை எடுத்துக் காட்டுகிருர். பலவிதமான அநேக முத்துக்களைச் சேர்த்து ஒரு மாலை செய்திருந்தாலும், அந்த முத்துக்களுக்கு வேருக இருந்து கொண்டு, எல்லா முத்துக்களிலும் ஊடுருவிச்சென்று, அம் முத்துக்களையெல்லாம் ஒன்றுசேர்த்து முத்துமாலை என்ற வியவஹாரத்திற்கு யோக்கியமாய் செய்துகொடுப்பது உள்மறைந்துள்ள கயிறு என்பதில் ஸந்தேஹமில்லை. அக்கயிறு இருப்பதை அனுமானத்தினுல் ஊஹிப்பதுடன் பிரத்யக்ஷமாகவும் காணலாமென்று, ஒரு முத்துக்கும் அடுத்த முத்துக்கும் மத்தியிலுள்ள

இடைவெளியை நன்கு கவனிக்கச் சொல்கிறார். அந்த இடைவெளியில் கயிறு புலப்படும். இடைவெளி தெரியாமலே முத்துக்கள் மிகவும் நெருக்கமாகக் கோர்க்கப்பட்டிருந்தாலும் கூட முத்துக்கள் வேவ்வேறாகவேயிருப்பதால் கொஞ்சம் சிரமப்பட்டு அவைகளை விலக்கிப்பார்த்தால் கயிறு தெரியவரும். அம்முத்துக்களை எவ்வளவு நேரம் விலக்கிக்கொண்டிருக்கிறோமோ அவ்வளவு நேரம் கயிறு நன்றாகத் தெரிந்துகொண்டேயிருக்கும். அப்படியேதான் ஸகல புத்தி விருத்திகளிலும் வியாபித்திருக்கிற போதஸ்வரூபமான ஆத்மாவை அந்த விருத்திகள் மறைப்பதாகத் தோன்றினபோதிலும் ஒரு விருத்திக்கும் அடுத்த விருத்திக்கும் மத்தியில் ஆத்மாவைக்காணலாமென்றும் அந்த இடைவெளியை அதிகப்படுத்தப்படுத்த ஆத்மா நன்கு விளங்குமென்றும் மேலால் சொல்கிறார்] (10)

नष्टे पूर्वविकल्पे तु यावदन्यस्य नोदयः ।
निर्विकल्पकचैतन्यं स्पष्टं तावद्विभासते ॥ ११ ॥

நஷ்டே பூர்வ விகல்பே து யாவதந்யஸ்ய நோதய: ‌।
நிர்விகல்பக சைதன்யம் ஸ்பஷ்டம் தாவத் விபாஸதே ‌॥

पूर्वविकल्पे–முந்தின விகல்பமானது, नष्टे तु–நசித்துப் போயும், अन्यस्य–வேறு விகல்பத்தினுடைய, उदयः–உத்பத்தியானது, यावत्–எதுவரையில், न–ஏற்படவில்லையோ, तावत्–அதுவரை, निर्विकल्पकचैतन्यं–எவ்வித விகல்பமுமற்ற சுத்த சைதன்யமானது, स्पष्टं–தெளிவாக, विभासते–பிரகாசிக்கும்.

முந்தின விகல்பம் மறைந்து அடுத்த விகல்பம் உண்டாவதற்கு முன் நடுவில் எவ்வித விகல்பமுமற்ற சுத்த சைதன்யம் தெளிவாக பிரகாசிக்கும்.

[முத்துக்கள் கைக்கு அகப்படக்கூடிய பதார்த்தங்களாயிருப்பதால் இரண்டு முத்துக்களைக் கைகளால் பிடித்துக்கொண்டு விலக்கிவிட்டு மத்தியில் உள்ள இடைவெளியில் கயிற்றைப் பார்க்க முடிகிறது. புத்தி விருத்திகள் அதிஸூக்ஷ்மமாயிருப்பதால் அவைகளை எப்படி விலக்கிப் பார்க்க முடியும் என்ற ஸந்தேஹத்திற்கு ஸமாதானம் சொல்கிறார். புத்தி விருத்திகள் வெவ்வேறு என்பதில் ஸந்தேஹமில்லை. ஒரு விருத்தியிருக்கும்

போது மற்றொரு விருத்திக்கு இடம் கிடையாது. ஆகையால் இரண்டாவது விருத்தி ஏற்படவேண்டுமானால் முந்தின விருத்தி பூராவும் நசித்திருக்கவேண்டும். ஆக முந்தின விருத்தி நசித்த க்ஷணத்திற்கும் அடுத்த விருத்தி உண்டாகும் க்ஷணத்திற்கும், மத்தியில் இரு விருத்திகளும் இல்லாமல் ஒரு க்ஷணமாவது இருந்தே தீரவேண்டும். அந்தக் காலம் அதிஸ்வல்பமாயிருப்பதால் நாம் உணரமுடியாமலிருக்கலாம். ஸ்வல்பமாயிருக்கும் காரணத்தினால் அந்த மத்யக்ஷணம் கிடையவே கிடையாதென்று மறுக்கமுடியாது, மேலே விட்டெறிந்த கல் எறிந்த வேகமிருக்கும் வரையில் மேலே போய்க்கொண்டேயிருக்கும். அந்த வேகம் தீர்ந்தவுடன் மேலே போவது நின்றுவிடும். ஆனால் கல் அங்கேயே ஆகாசத்தில் நின்றுவிடாது. பூமியின் ஆகர்ஷண சக்தியினால் இழுக்கப்பட்டு கீழேவிழவாரம்பிக்கும். மேலே போவது நின்று கீழே விழவாரம்பிக்காமல் ஒரு க்ஷணம் நிச்சலமாயிருப்பதாகத் தெரியவரும். அதே மாதிரி ஒரு புத்தி விருத்தி நசித்து அடுத்த புத்திவிருத்தி உதயமாகாமல் இருக்கும் க்ஷணத்தில் ஸகல விருத்திகளுக்கும் ஆதாரமாயுள்ள நிர்விகல்பகமான ஆத்ம சைதன்யம் நன்கு பிரகாசிக்கும்] (11)

(அ) ஒரு விருத்திக்கும் அடுத்த விருத்திக்கும் மத்தியிலுள்ள இடைவெளியை அப்பியாஸத்தினால் அதிகப்படுத்த முடியும் என்பதையும் அதிகப்படுத்தப்படுத்த ஆத்ம ஸாக்ஷாத்காரம் நீடித்திருக்குமென்பதையும் இனி உபதேசிக்கிறார்:—

एकद्वित्रिक्षणेष्वेवं विकल्पस्य निरोधनम् ।
क्रमेणाभ्यस्यतां यत्नाद् ब्रह्मानुभवकाङ्क्षिभिः ॥ १२ ॥

ஏக த்வி த்ரி க்ஷணேஷ்வேவம் விகல்பஸ்ய நிரோதனம் ।
க்ரமேணாப்யஸ்யதாம் யத்நாத் ப்ரஹ்மானுபவகாங்க்ஷிபி: ॥

एवं–இவ்விதமாக, ब्रह्मानुभवकाङ्क्षिभिः–பிரஹ்மத்தை அனுபவிக்க ஆசைப்படுகிறவர்களால், विकल्पस्य–விகல்பத்தின், निरोधनं–நிறுத்தலானது, एकद्वित्रिक्षणेषु–ஒரு க்ஷணம், இரண்டு க்ஷணம், மூன்று க்ஷணம் என்று, क्रमेण–கிரமமாக, यत्नात्–மிகப்பிரயத்தனத்துடன், अभ्यस्यतां அப்பியஸிக்கப்படவேண்டும்.

இவ்விதமாக பிரஹ்மத்தை அனுபவிக்க ஆசைப்படுகிறவர்கள் ஒருக்ஷணம், இரண்டு க்ஷணம், மூன்று க்ஷணம் என்று கிரமமாக மிகப்பிரயத்தனத்துடன் விகல்பம் ஏற்படாமல் தடை செய்வதை அப்பியஸிக்கவேண்டும்.

[இதுவரை புத்திக்கும் புத்தி விருத்திகளுக்கும் வேறுபட்டதாய், அவைகளுக்கு ஸாக்ஷியாய், சுத்த அறிவுஸ்வரூபமாய், இருப்பது ஆத்மா என்றும் அதை ஸாக்ஷாத்கரிக்கும் விதம் எப்படியென்றும் சொல்லிவந்த ஸ்ரீமத் ஆசார்யார் இந்த சுலோகத்தில் முன் சொன்ன கிரமம் பிரஹ்மானுபவத்தை வேண்டுபவர்களால் அனுஷ்டிக்கவேண்டியது என்று சொல்வதினாலேயே இதுவரை சொன்னகிரமத்தையனுஸரித்து ஸாக்ஷாத்கரிக்கப்படும் ஆத்மாவும், பிரஹ்மமும் ஒன்றே என்று காட்டுகிறார்.] (12)

सविकल्पकजीवोऽयं ब्रह्म तन्निर्विकल्पकम् ।
अहं ब्रह्मेति वाक्येन सोऽयमर्थोऽभिधीयते ॥ १३ ॥

ஸவிகல்பக ஜீவோZயம் ப்ரஹ்ம தந்நிர்விகல்பகம் ।
அஹம் ப்ரஹ்மேதி வாக்யேந ஸோZயமர்த்தோZபிதீயதே ॥

अयं-இது, सविकल्पकजीवः-விகல்பத்தோடு கூடின ஜீவன். तत्-அது, निर्विकल्पकं-விகல்பமேயில்லாத, ब्रह्म-பிரஹ்மம். सः-அந்த, अयं-இந்த, अर्थः-விஷயமானது, अहं-நான், ब्रह्म-பிரஹ்மம், इति-என்ற, वाक्येन-வாக்கியத்தினால், अभिधीयते-சொல்லப்படுகிறது.

இது விகல்பத்தோடு கூடின ஜீவன். அது விகல்பமே இல்லாத பிரஹ்மம். அந்த இந்த விஷயமானது நான் பிரஹ்மம் என்ற வாக்கியத்தினால் சொல்லப்படுகிறது.

[பிரஹ்மானுபவம் வேண்டுமென்று நினைக்கிறவர்கள் ஜீவனின் வாஸ்தவமான ஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்ய வேண்டுமென்று சொன்னதற்குக் காரணம் ஜீவனின் வாஸ்தவ ஸ்வரூபமும் பிரஹ்மமும் ஒன்றே என்பதுதான். ஆனால் ஜீவன் என்றும் பிரஹ்மம் என்றும் தனித்தனியாக ஏன் வியவஹாரம் ஏற்பட்டிருக்கிறது என்று கேட்டால் வாஸ்தவத்தில் ஒரே பதார்த்தத்தை விகல்பத்துடன் (ஸாதாரணமாக புத்தி விருத்தி

யுடன்) ஸம்பந்தித்து வியவஹரிக்கும்போது ஜீவன் என்றும் அவ்வித ஸம்பந்தமில்லாமல் வியவஹரிக்கும்போது பிரஹ்மம் என்றும் தனித்தனி பெயர்கள் ஏற்படுகின்றன. இதனுல் குறிக்கப் படும் வஸ்துவினிடத்தில் வேற்றுமை ஏற்பட்டுவிடாது. ஒருவன் தன் தகப்பனுரால் புத்திரன் என்று வியவஹரிக்கப்பட்டும், அவன் குழந்தையால் பிதா என்று வியவஹரிக்கப்பட்டும், இருப் பதால் அவன் வெவ்வேறு மனிதனுக ஆகிவிடமாட்டான். அவ னுடைய ஸ்வரூபம் இவ்விரண்டு வியவஹாரங்களினுலும் பாதிக்கப்படாமல் எப்பொழுதும் ஒரே ரீதியாகத்தான் இருந்து வருகிறது. அப்படியே ஜீவன் என்று அழைக்கப்படுவதும் பிரஹ்மம் என்று அழைக்கப்படுவதும் ஸ்வரூபத்தில் வேற்றுமை யற்று சுத்த சைதன்ய ரூபமாகவே இருந்து வருகிறது. இந்தத் தத்வத்தைத்தான் உபநிஷத்துக்கள் "நான் பிரஹ்மம்" "அதுவே நீ" முதலான மஹா வாக்கியங்களினுல் உபதேசிக் கின்றன. அந்த வாக்கியங்களிலிருந்து இந்தத் தாத்பர்யம் எப்படிக் கிடைத்ததென்பதைப்பற்றி இந்த சிறிய பிரகரணத்தில் விஸ்தரிக்கவில்லை. அதுதான் மஹா வாக்கியங்களின் தாத்பர்ய மென்பதை ஸந்தேஹமன்னியில் சிரத்தையுடன் ஏற்றுக்கொண்டு அதை அனுபவத்திற்குக் கொண்டுவரவேண்டியதற்குள்ள வழியை மாத்திரம் இங்கு ஆசார்யார் எடுத்துக்காட்டுகிருர்.] (13)

सविकल्पकचिद्योऽहं ब्रह्मैकं निर्विकल्पकम् ।
स्वतःसिद्धा विकल्पास्ते निरोद्धव्याः प्रयत्नतः ॥ १४ ॥

ஸவிகல்பகசித் யோऽஹம் ப்ரஹ்மைகம் நிர்விகல்பகம் ।
ஸ்வதஸ்ஸித்தா விகல்பாஸ்தே நிரோத்தவ்யா: ப்ரயத்னத: ॥

यः–எந்த, अहं–நான், सविकल्पकचित्–விகல்பத்தோடு கூடின் சைதன்யமோ (அந்த நானே), एकं–ஒன்ருய், निर्विकल्पकं–விகல்பமற்றதாயுள்ள, ब्रह्म–பிரஹ்மம். स्वतः–தானுகவே, सिद्धाः–ஏற்படுகிற, ते–அந்த, विकल्पाः–விகல்பங் கள், प्रयत्नतः–பிரயத்தினத்தின்பேரில், निरोद्धव्याः–தடுக்கப் படவேண்டியவைகள்.

எந்த நான் விகல்பத்தோடு கூடின சைதன்யமோ அந்த நானே ஒன்ருய் விகல்பமற்றதாயுள்ள பிரஹ்மம். தானுகவே

ஏற்படுகிற அந்த விகல்பங்கள் பிரயத்தினத்தின் பேரில் தடுக்கப்படவேண்டியவைகள்.

[ஜீவனும் பிரஹ்மமும் ஸ்வரூபத்தில் ஒன்றாகவேயிருந்தால் இவ்வைக்யத்தை உணரவிடாமல் செய்வது ஏது? அந்தத் தடையை எப்படி நிவிருத்தி செய்வது? என்ற கேள்விகள் எழுகின்றன. வேறாகத் தோன்றுவதற்குக் காரணமான விகல்பங்கள் தான் தடை, அவைகளை தலை தூக்காமல் செய்வதே ஸாதனம், என்று பதில் கூறுகிறார். அந்த விகல்பங்கள் தான் ஏன் ஏற்படுகின்றன? என்ற மேல்க் கேள்விக்கு "தானாகவே ஏற்படுகின்றன" என்று ஆசார்யார் பதில் சொல்கிறார். இது ஒரு ஸமாதானமா வென்று தோன்றும். ஆனால் இதுதான் வாஸ்தவமான ஸமாதானம். இவ்விதம் சொல்லாமல், விகல்பம் ஏற்படுவதற்கு வேறு ஒரு காரணத்தைக் குறிப்பிட்டால், அக் காரணத்திற்குக் காரணம் என்ன என்று மறுபடியும் கேட்கத் தோன்றும். அதற்கும் காரணம் சொன்னால், அந்தக் காரணத் திற்கும் வேறு காரணம் தேவையாகும். இவ்விதமாக முடிவே இல்லாமல் கேள்வியும் பதிலும் போய்க்கொண்டேயிருக்கும். இதை "அனவஸ்தை" என்ற தோஷமாகக் கருதுவார்கள். இதற்கிடமன்னியில் "தானாகவே" என்று மேல் கேள்விகளுக்கு இடமன்னியில் ஆசார்யார் முற்றுப்போட்டுவிடுகிறார். வேப்பங் காய் ஏன் கசக்கிறது என்றால் அதில் கசப்பு அம்சங்கள் நிரம்ப இருக்கின்றன என்று பதில் சொல்லலாம். அந்த அம்சங்கள் ஏன் அங்கே வந்தன என்று மறுபடியும் கேட்கவாரம்பித்தால் மேல் மேலும் கேள்விகள் கிளம்பிக்கொண்டேயிருக்கும். இதற்கு இடமன்னியில் "வேப்பங்காய் கசப்பதற்குக் காரணம் அதன் ஸ்வபாவம் கசப்பாயிருப்பதால்" என்று சொல்லிவிட்டால் மேல் கேள்விக்கு இடம் கிடையாது. அதே ரீதியாக, விகல்பங்கள் ஏற்படுவதற்குக் காரணம் "தானாகவே ஏற்படுகின்றன" என்கிறார். இதையே ஸ்வபாவம் என்றும், பிரகிருதி என்றும், மாயை என்றும், அவித்யை என்றும், சக்தி என்றும், பலவாறாக சாஸ்திரங்கள் வியவஹரிக்கின்றன. எந்தப் பெயரைக் கொடுத்த போதிலும் அதன் ஸ்வரூபத்தைத் தெளிவாக எடுத்துச் சொல்வது ஸாத்தியமில்லாத காரணத்தினால் "அநிர்வசனீயம்" என்றே சொல்வார்கள். காரணம் எடுத்துச்சொல்ல முடியாமல் போனால் விகல்பம் "ஸ்வத: ஸித்தம்" (தானாக ஏற்பட்டது) என்பதுடன் "அநாதி ஸித்தம்" (ஆதியில்லாமல் இருக்கிறது)

என்றும் ஏற்படுமானதினால், அதற்கு அந்தமும் (முடிவும்) கிடையாதென்று ஏற்படாதா? அப்படியானால் ஸம்ஸாரபந்தம் சாசுவதமாய் இருந்தேதீருமல்லவா? என்ற ஸந்தேஹங்கள் கிளம்பும். விகல்பங்கள் ஸ்வத: ஸித்தமாயும் அநாதிஸித்தமாயும் இருந்தாலும் முடிவோடு கூடியவைகளே. ஆனால் அவைகளுக்கு முடிவு கட்டுவது மிகவும் சிரமமான கார்யம். அதனால்தான் ஆசார்யார் அவைகளை பிரயத்தினப்பட்டுத் தடுக்கவேண்டியது தான் என்று உபதேசிக்கிறார். ஸ்வப்னத்தில் தோன்றும் அரண்மனை எப்பொழுது, யாரால், எந்த செங்கல் முதலிய சாமான்களால், எத்தனைநாளாக, கட்டப்பட்டதென்று யாராலும் சொல்லமுடியாது. இந்தக் காரணத்தினால் ஸ்வப்னம் இருக்கும் வரையில் அந்த அரண்மனை தோன்றிக்கொண்டிருக்கலாமே தவிர, விழிப்பு வந்தபிறகும் அது சாசுவதமாய் தோன்றிக் கொண்டிராது. விழிப்பு வந்தவுடன் ஸ்வப்னத்தில் தென்பட்டதே வெறும் தோற்றம், வாஸ்தவமில்லாதது, என்ற ஞானம் ஏற்பட்டு விடுகிறது. இவ்விதமாக ஸ்வப்னத்தில் தோன்றின அரண்மனைக்கு நாசமேற்படவேண்டுமானால், தூங்குகிறவனைத் தட்டி எழுப்புவதுதான் ஸாதனம். அதேமாதிரி விகல்பங்களைப் போக்கடிப்பதற்கு ஸாதனம் நிர்விகல்பமான ஆத்ம ஸாக்ஷாத்காரம்தான். அதற்கு விசேஷப் பிரயத்தினம் அவசியம். விகல்பங்களே ஏற்படாமல் செய்துவிட்டால் அந்நிலையையே ஸமாதி என்பார்கள் என்று மேல் சுலோகத்தில் சொல்கிறார்] (14)

शक्यः सर्वनिरोधेन समाधिर्योगिनां प्रियः ।
तदशक्तौ क्षणं रुद्ध्वा श्रद्धालोर्ब्रह्मताऽऽत्मनः ॥ १५ ॥

ஶக்ய: ஸர்வநிரோதேன ஸமாதிர் யோகிநாம் ப்ரிய: ।
ததஶக்தௌ க்ஷணம் ருத்த்வா ச்ரத்தாளோர்
ப்ரஹ்மதாऽऽத்மந: ॥

सर्वनिरोधेन—எல்லா விகல்பங்களையும் நிரோதம் செய்வதால், योगिनां—யோகிகளுக்கு, प्रियः—பிரியமான, समाधिः—ஸமாதிநிலையானது, शक्यः—ஸாதிக்கக்கூடியது. तदशक्तौ—அவ்விதம் எல்லா விகல்பங்களையும் பூராவாக தடுக்க முடியாதபக்ஷத்தில், क्षणं—ஒரு க்ஷணமாவது, रुद्ध्वा—தடுத்து விட்டால், श्रद्धालोः—சிரத்தையுடன் பிரயத்தினம் செய்கிற

வருடைய, आत्मनः—ஆத்மாவிற்கு, ब्रह्मता—பிரஹ்மமாயிருக்கும் தன்மை ஸித்திக்கும்.

எல்லா விகல்பங்களையும் நிரோதம் செய்வதால் யோகிகளுக்குப் பிரியமான ஸமாதி நிலையானது ஸாதிக்கக்கூடியது. அவ்விதம் எல்லாவிகல்பங்களையும் பூர்ணமாக தடுக்க முடியாத பக்ஷத்தில் ஒரு க்ஷணமாவது தடுத்துவிட்டால் சிரத்தையுடன் பிரயத்தினம் செய்கிறவருடைய ஆத்மாவிற்கு பிரஹ்மமாயிருக்கும் தன்மை ஸித்திக்கும்.

[சித்தத்தில் ஏற்படும் விருத்திகளை நிரோதம் செய்வதே யோகம் என்று லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறபடியால் அந்த யோக மார்க்கத்தில் ஈடுபட்டு தீவிரமாக பிரயத்தினம் செய்து ஸகல விருத்திகளையும் நிரோதம் செய்வதால் ஏற்படும் ஸமாதி என்ற நிலை யோகிகளுக்கு மிகவும் பிரியமானதென்பதில் ஸந்தேஹமில்லை. அந்த நிலையில் புத்தியை சலிக்கும்படிச் செய்யக்கூடிய எவ்வித இரண்டாவது பதார்த்தமும் கிடையாததினால் விஷயத்தின் அபேக்ஷையின்றியில் அந்த ஸமயம் ஆத்ம சைதன்யம் ஸ்வயம்பிரகாசமாய் நிரதிசய ஆனந்த ஸ்வரூபமாய் விளங்கும். அவ்வித நிலையை உடனே ஸாதிப்பது ஸாத்தியமில்லாததினால் புத்தி விருத்தி ஏற்படாமல் முதலில் ஒரு க்ஷணமாவது இருக்கப் பிரயத்தினம் செய்தால் அந்த க்ஷணத்திலேயே ஆத்மானந்தம் நன்கு ஸ்புரிக்கும் கிரமமாக அப்யாஸம் செய்து புத்தி நிச்சலமாயிருக்கும் காலத்தை வர வர நீடிக்கச்செய்யலாம். புத்தி ஸ்வபாவத்திலேயே சஞ்சலமாயிருப்பதால் அதை ஸ்திரப்படுத்துவது சிரமம்தான். ஆனாலும் விருத்தி நிரோதத்தினால் அவசியம் ஆனந்தஸ்பூர்த்தி ஏற்படுமென்பதில் திடமான நம்பிக்கை வேண்டும். மேலும் அந்த விருத்தி நிரோதத்திற்கு ஸாதனமாய் சாஸ்திரங்களில் உபதேசிக்கப்பட்டிருக்கிறதும் குருநாதரால் எடுத்துக்காட்டப்பட்டதுமான வழியில் நம்பிக்கையுடன் நன்கு பிரவிருத்தி செய்யவேண்டும். அவ்விதம் சிரத்தையோடு பிரவிருத்திக்கும் ஸாதகனுக்கு அப்யாஸ காலத்திலேயே பிரஹ்மானுபவம் ஏற்படவாரம்பிக்கும். சாஸ்திரத்திலோ, குருவாக்கியத்திலோ சிரத்தை குறைந்தால் அப்யாஸம் செய்வதற்கே ஊக்கம் வராது. தவிரவும் நாம் இப்பொழுது இருக்கிற நிலையில் நமக்கு பிரஹ்மானுபவம் எப்படி ஏற்படுமென்ற எண்ணம் அடிக்கடி வந்து அதைர்யத்தையே

உண்டுபண்ணும். அதைர்யம் வந்தால் ஸாதனத்தை அனுஷ்டிப்பதில் வேகம் குறையும். அவ்விதம் ஏற்பட்டுவிடக்கூடாதென்பதற்காகவே சிரத்தையின் அவசியத்தை அடுத்த ச்லோகத்தில் வற்புறுத்துகிருர்.] (15)

श्रद्धालुर्ब्रह्मतां स्वस्य चिन्तयेद् बुद्धिवृत्तिभिः ।
वाक्यवृत्त्या यथाशक्ति ज्ञात्वाऽद्धाभ्यस्यतां सदा ॥ १६ ॥

ச்ரத்தாளுர் ப்ரஹ்மதாம் ஸ்வஸ்ய சிந்தயேத் புத்தி
வ்ருத்திபி: I
வாக்யவ்ருத்த்யா யதாசக்தி ஞாத்வாऽத்தாப்யஸ்யதாம்
ஸதா II

श्रद्धालुः–சிரத்தையோடு கூடினவர், स्वस्य–தன்னுடைய ब्रह्मतां–பிரஹ்மமாயிருக்கும் தன்மையைப்பற்றி, बुद्धिवृत्तिभिः–புத்தியின் விருத்திகளின் உதவியினுலும், वाक्यवृत्त्या–மஹா வாக்யங்களின் தாத்பர்யத்தை அனுஸரித்தும் ["வாக்ய விருத்தி" என்ற பிரகரணத்தில் கண்ட வழியாக] यथाशक्ति–சக்திக்குத் தகுந்தபடி, चिन्तयेत्–சிந்திக்க வேண்டும். (சிந்தித்து சந்தேஹமின்றியில் விஷயத்தை), ज्ञात्वा–அறிந்துகொண்டு, अद्धा–நன்ருக, सदा–எப்பொழுதும், अभ्यस्यतां–அப்யாஸம் செய்யவேண்டும்,

சிரத்தையுடன் தான் ப்ரஹ்மமே என்பதை புத்தி விருத்திகளின் உதவியினுலும் மஹாவாக்கியங்களின் தாத்பர்யத்தை அனுஸரித்தும் ["வாக்யவிருத்தி" என்ற பிரகரணத்தில் கண்ட வழியாக] சக்திக்குத் தகுந்தபடி சிந்திக்கவேண்டும். (சிந்தித்து ஸந்தேஹமின்றியில் விஷயத்தை) அறிந்துகொண்டு நன்ருக எப்பொழுதும் அப்யாஸம் செய்யவேண்டும்.

[எவ்வளவு சிரத்தையுடன் சிரவணம் செய்தாலும் கூட, சிரவணத்தினுல் கிரஹிக்கப்பட்ட விஷயத்தில் ஸந்தேஹமில்லாமல் போனுலும், அவ்விஷயம் ஸம்பவிக்கக்கூடியதுதானு, யுக்திக்குப் பொருந்தியதுதானு, என்கிறமாதிரி ஸந்தேஹங்கள் ஏற்படலாம். அவ்வித ஸந்தேஹங்கள் இருக்கும் வரையில் விஷயத்தையே நன்ருக கிரஹித்ததாகாது. ஆகையால் அந்த ஸந்தேஹ நிவிருத்தியை உத்தேசித்து மனனம் என்கிற யுக்தி

விசாரம் அவசியமாகும். ஆனால் புத்தியைக் கொண்டு யுக்தி விசாரம் செய்யும்போது அது துர்யுக்தியில் கொண்டுபோய் விடாமலிருப்பதற்காக அந்த யுக்தியும் பிரமாணத்திற்குக் கட்டுப் பட்டேயிருக்கவேண்டும். பரமப் பிரமாணமான வேதத்தினாலே ஆத்ம தத்வம் போதிக்கப்படுகிறபடியால் அதை நன்கு அறிய வேண்டிய தற்குள்ள யுக்தி வேத விருத்தமாய் இருக்கக்கூடாது. உபநிஷத் வாக்கியங்களை அனுஸரித்தேயிருக்கவேண்டும் இவ் விதமாக சிரவண மனனங்களால் ஸந்தேஹமற நிச்சயித்துக் கொண்ட விஷயத்தை அனுபவத்திற்குக் கொண்டுவருவதற்கு அப்யாஸம் மிகவும் அவசியம். அந்த அப்யாஸமும் பலவிதம் என்பதை அடுத்த சுலோகத்தில் ஆசார்யார் காட்டுகிறார்.] (16)

तच्चिन्तनं तत्कथनं अन्योन्यं तत्प्रबोधनम् ।
एतदेकपरत्वं च ब्रह्माभ्यासं विदुर्बुधाः ॥ १७ ॥

தச்சிந்தனம் தத்கதனம் அந்யோந்யம் தத்ப்ரபோதநம் ।
ஏததேகபரத்வம் ச ப்ரஹ்மாப்யாஸம் விதுர் புதா: ॥

तच्चिन्तनं–அதையே நினைப்பது, तत्कथनं–அதையே சொல்வது, अन्योन्यं–ஒருவருக்கொருவர், तत्प्रबोधनं–அதையே நன்கு அறிவிப்பது, एतदेकपरत्वं च-இது ஒன்றிலேயே ஈடுபட் டிருப்பது, ஆக இவையெல்லாம், ब्रह्माभ्यासं–பிரஹ்ம விஷய மான அப்யாஸம் என்று, बुधाः–அறிவாளிகள், विदुः அறிந் திருக்கிறார்கள்.

அதையே நினைப்பது, அதையே சொல்வது, ஒருவருக் கொருவர் அதையே நன்கு அறிவிப்பது இதிலேயே ஈடுபட் டிருப்பது, ஆக இவையெல்லாம் பிரஹ்மவிஷயமான அப்யாஸம் என்று அறிவாளிகள் அறிந்திருக்கிறார்கள்.

[தனியாக இருக்கும் ஸமயத்தில் சிரவண மனனங்களினால் நிச்சயிக்கப்பட்ட ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றியே மனஸில் நினைத்துக்கொண்டிருக்கவேண்டும். தன்னை விட அறிவாளிகளாக யாரேனும் கூட இருந்தால், தான் கிரஹித்திருப்பதை அவர் களிடம் எடுத்துச்சொல்லி உறுதிப்படுத்திக்கொள்ளலாம், தன்னை விட குறைந்த அறிவுள்ளவர்களாயிருந்தால், தான் அறிந்த

விஷயத்தை அவர்களுக்கும் மனஸில் படும்படி தெளிவாக எடுத்து உரைக்கலாம். தனக்கு ஸமானமான அறிவுள்ளவர்களாயிருந்தால் அவரவர்கள் கிரஹித்திருப்பதை மற்றவர்களுக்கு சொல்லி தம் தம் அனுபவங்களை சாஸ்திரானுஸாரியாக இருக்கின்றனவா வென்று சரிபார்த்துக்கொள்ளலாம். எப்படியும் பேசுவது என்றால் ஆத்மாவைத்தவிர வேறு எந்த விஷயமாகவும் பேசக் கூடாது. மனஸ் வேறு விஷயத்தில் போகாமல் ஆத்மாவை அனுஸந்தானம் செய்வதிலேயே ஈடுபடுவதாகிய நிதித்யாஸனம் என்பதும் இந்த ப்ரஹ்மாப்யாஸத்தில் சேரும். இந்த நான்கு விதங்களில், நினைத்தல், சொல்லுதல், அறிவித்தல் ஆகிய மூன்றும் தன்னறிவுடன் செய்யவேண்டியிருப்பதால் ஸமாதி நிலைக்குக் கொண்டுவிடாது. நான்காவதான ஈடுபடுதல் என்பதில் ப்ரஹ்மத்திலேயே மனஸைச் செலுத்தி அதனுடன் ஒருமைப் படுத்துவதால் தன்னை மறந்து ஸமாதி நிஷ்டராக இருக்கமுடியும்.]

(அ) இவ்விதம் ப்ரஹ்மாப்யாஸத்தைப்பற்றிச் சொல்லிவிட்டு அதன் பலனான மோக்ஷத்தை சுருக்கமாக அடுத்த சுலோகத்தில் சொல்லி பிரகரணத்தை முடிக்கிறார் :-

देहात्मधीवद् ब्रह्मात्मधीदार्ढ्ये कृतकृत्यता ।
यदा तदाऽयं म्रियतां मुक्तोऽसौ नात्र संशयः ॥ १८ ॥

தேஹாத்மதீவத் ப்ரஹ்மாத்மதீ தார்ட்யே க்ருதக்ருத்யதா ।
யதா ததாऽயம் ம்ரியதாம் முக்தோऽஸௌ நாத்ர ஸம்ஶய: ॥

देहात्मधीवत् — தேஹத்தில் "நான்" என்கிற எண்ணம் போல், ब्रह्मात्मधीदार्ढ्ये — பிரஹ்மம் நான் என்கிற அனுபவம் திடமாக ஏற்பட்டுவிட்டால், कृतकृत्यता — செய்யவேண்டிய தெல்லாம் செய்தாகிவிட்ட நிலை ஏற்படும். (அந்த நிலை வந்த பிற்பாடு), अयं — இவர், यदा तदा — எப்பொழுதேனும், म्रियतां — தேஹவியோகம் அடையட்டும். (தேஹவியோகத்திற்கு ஸம்பந்தமன்னியிலேயே), असौ — இவர், मुक्तः — முக்தர். अत्र — இந்த விஷயத்தில், संशयः — ஸந்தேஹமே, न — கிடையாது.

தேஹத்தில் "நான்" என்கிற எண்ணம் அக்ஞானிகளுக்கு எவ்வளவு திடமாயிருக்கிறதோ அப்படியே பிரஹ்மம் நான்

என்கிற அனுபவம் திடமாக ஏற்பட்டுவிட்டால், செய்யவேண்டிய தெல்லாம் செய்தாகிவிட்ட நிலை ஏற்படும். அந்த நிலை வந்த பிற்பாடு இவர் எப்பொழுதேனும் தேஹவியோகம் அடையட்டும். தேஹ வியோகத்திற்கு ஸம்பந்தமன்னியிலேயே இவர் முக்தர். இந்த விஷயத்தில் ஸந்தேஹமே கிடையாது.

[பிரஹ்மாத்ம அனுபவ நிஷ்டை ஏற்பட்ட க்ஷணத்திலேயே ஜீவத்தன்மை விலகி ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை ஏற்பட்டு ஸ்வயம்பிரகாச நிரதிசயானந்த நிலை ஸித்தித்துவிடுகிறது. பிராரப்தகர்மவேகத்தினால் சரீரம் தோன்றிக்கொண்டிருக்கும் போது ஜீவன்-முக்தன் என்றும், சரீரமும் விலகினவுடன் விதேஹ-முக்தன் என்றும் மற்றவர்கள் வியவஹரித்தபோதிலும், சரீரமிருக்கும்போதும் இல்லாதபோதும் முக்தன் என்பதில் ஸந்தேஹமில்லை.] (18)

லகுவாக்யவிருத்தி முற்றும்.



04565 - 232991

|| श्रीः ||

# || प्रौढानुभूतिः ||

## பிரௌடானுபூதி

[ஆத்மஞானம் ஏற்பட்டு திடமாக முற்றின பிறகு அதன் தன்மை எவ்விதமென்று சொல்வது ஸாத்தியமேயில்லை. அப்படி இருந்தும் அந்த நிலையில் ஏற்படும் அனுபவத்தின் பெருமையை தன்னை யண்டினசிஷ்யனுக்கு எடுத்துச் சொல்லவேண்டுமென்று அவ்வாத்மஞானிக்குத் தோன்றினல் எவ்விதம் சொல்லுவார் என்பதை ஒருவாறு இந்த பிரகரணத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் மிகக் கருணையுடன் வர்ணிக்கிறார். உபநிஷத்தினுலேயே அறிய வேண்டியதும் குருவினிடமிருந்தே கிரஹிக்கவேண்டியதும் தன் அனுபவத்தினுலேயே விளங்கவேண்டியதுமான ஆத்ம தத்வத்தை வார்த்தைகளால் சொல்வது ஸாத்தியமில்லாத விஷயம். அதை சொல்ல யத்தனிக்கும்போது இக்கடினமான விஷயத்திற்குத் தக்கபடி வாக்கும் பிரௌடமாகவே அமைகிறது. அதையும் வேறு பாஷையில் சொல்வது மிகவும் கடினம். இருந்தாலும் ஸ்ரீமத் ஆசார்யாருடைய அனுக்ரஹத்தினல் யதாசக்தி இதில் தமிழ்படுத்திப்பார்க்கப் பிரயத்தினம் செய்யப்படுகிறது. இந்த கிரந்தத்தை வாசிக்க நினைப்போருக்கு எவ்வளவு யோக்கியதை வேண்டுமென்பதை ஸ்ரீமத் ஆசார்யாரே கடைசி சுலோகத்தில் வர்ணித்திருக்கிறார்.]

प्रौढप्रौढनिजानुभूतिगलितद्वैतेन्द्रजालो गुरुः
गूढं गूढमघौघदुष्टकुधियां स्पष्टं सुधीशालिनाम् ।
स्वान्ते सम्यगिहानुभूतमपि सच्छिष्यावबोधाय तत्
सत्यं संस्मृतवान् समस्तजगतां नैजं निजालोकनात् ॥ १ ॥

ப்ரௌட ப்ரௌட நிஜாநுபூதி களித
த்வைதேந்த்ரஜாலோ குரு:
கூடம் கூடமகௌகதுஷ்டகுதியாம் ஸ்பஷ்டம்
ஸுதீஶாலிநாம் ।

ஸ்வாந்தே ஸம்யகிஹாநுபூதமபி ஸச்சிஷ்யாவபோதாய தத்
ஸத்யம் ஸம்ஸ்ம்ருதவான் ஸமஸ்தஜகதாம் நைஜம்
நிஜாலோகனாத் ||

प्रौढप्रौढनिजानुभूतिगलितद्वैतेन्द्रजालः–நன்கு முற்றின தன்னுடைய அனுபவத்திஞல், இந்திரஜாலம்போலுள்ள வேற்றுமையாகத் தோன்றும் ஜகத் எவருக்கு நழுவி விட்டதோ அந்த, गुरुः-குருவானவர், अघौघदुष्टकुधियां–பாபக் கூட்டத்திஞல் கெட்டுப்போன துஷ்ட புத்தியோடு கூடினவர்களுக்கு, गूढं गूढं–மிகவும் மறைந்ததாயும், सुधीशालिनां– நல்ல புத்திசாலிகளுக்கு, स्पष्टं–தெளிவாக உள்ளதும், समस्त-जगतां–எல்லா உலகங்களுக்கும், नैजं–உள் தத்வமாக உள்ளதுமான, तत्–அந்த, सत्यं–ஸத்யமான ஆத்ம ஸ்வரூபத்தை, इह–இங்கு, स्वान्ते–தனக்குள், सम्यक्–நன்ருக अनुभूतं अपि– அனுபவிக்கப்பட்டிருந்தபோதிலும், सच्छिष्याव-बोधाय-தகுந்த சிஷ்யனுக்கு அறிவிப்பதற்காக, निजालोकनात्-தனக்குள் பார்த்து, संस्मृतवान्–ஞாபகப்படுத்திக் கொண்டார்.

நன்கு முற்றின தன்னுடைய அனுபவத்திஞல், இந்திரஜாலம் போலுள்ள வேற்றுமையாகத் தோன்றும் ஜகத் எவருக்கு நழுவி விட்டதோ அந்த குருவானவர், பாபக்கூட்டத்திஞல் கெட்டுப் போன துஷ்டபுத்தியோடு கூடினவர்களுக்கு மிகவும் மறைந்த தாயும் நல்ல புத்திசாலிகளுக்கு தெளிவாக உள்ளதும், எல்லா உலகங்களுக்கும் உள்தத்வமாக உள்ளதுமான அந்த ஸத்யமான ஆத்மஸ்வருபத்தை தனக்குள் நன்ருக அனுபவிக்கப்பட்டிருந்த போதிலும் தகுந்த சிஷ்யனுக்கு அறிவிப்பதற்காக தனக்குள் பார்த்து ஞாபகப்படுத்திக்கொண்டார்.

[குரு சிஷ்யனுக்கு ஆத்ம தத்வத்தைப் போதிக்கவேண்டுமானல் தனக்கு ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரம் நன்கு ஸித்தித்திருக்கவேண்டும். அது ஸித்தித்திருக்கிறதென்பதற்கு அடையாளம் ஜகத் இந்திரஜாலம்போல் தோற்றமே, மித்யைதான், என்கிற உணர்ச்சி ஏற்பட்டிருக்கவேண்டும். தான் நன்கு ஸாக்ஷாத்காரம் பெற்று அனுபவித்திருந்தாலும் இன்னெருவருக்கு எடுத்துச்சொல்ல நினைக்கும்போது, அதை எப்படி எடுத்துச்

சொன்னுல் மற்றொருவரால் ஸுலபமாய் கிரஹிக்க முடியுமென்று ஆலோசித்து தன் அனுபவத்தை மறுபடியும் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டியதும் அவசியமேயாகும். குரு எவ்வளவு உயர்ந்த ஞானியாயிருந்தாலும் எவ்வளவு அழகாக எடுத்துச் சொல்லக்கூடியவராயிருந்தாலும், சிஷ்யன் அவ்வுபதேசத்தை கிரஹிக்கும்படியான தகுதியுள்ளவனுக இருக்கவேண்டும். தகுதி என்பது கூர்மையான புத்தி என்று மாத்திரம் தாத்பர்யமில்லை. அவனுடைய புத்தி நிர்மலமாகவும் இருக்கவேண்டும் விஹித கர்மாக்களை நிஷ்காமமாக அனுஷ்டித்து மனது ராக த்வேஷாதிகள் விலகி சுத்தமாயிருக்கவேண்டும். முன் செய்த வினைகளும் குறுக்கே நிற்கக்கூடியதால் அவைகளையும் ஸத் கர்மானுஷ்டானத்திஞல் போக்கடித்திருக்கவேண்டும். இவ்விதம் பாபமன்னியில் தோஷமன்னியில் செய்யப்பட்ட பரிசுத்தமான புத்தியுள்ளவனுக சிஷ்யன் இருக்கவேண்டும் இந்த எல்லா அம்சங்களையும் இந்த முதல் சுலோகத்தில் சுருக்கிக்காட்டியிருக் கிருர் ஸ்ரீமத் ஆசார்யார். இனி குரு விளக்கிக் காட்டும் அனுபவத்தை மேல் சுலோகங்களில் காட்டுகிருர்.] (1)

द्वैतं मय्यखिलं समुत्थितमिदं मिथ्या मनःकल्पितं
तोयं तोयविवर्जिते मरुतले भ्रान्त्यैव सिद्धं न हि ।
यद्येवं खलु दृश्यमेतदखिलं नाहं न वा तन्मम
प्रौढानन्दचिदेकसन्मयवपुः शुद्धोऽस्म्यखण्डोऽस्म्यहम् ॥ २ ॥

த்வைதம் மய்யகிலம் ஸமுத்திதமிதம் மித்யா மநঃகல்பிதம்
தோயம் தோயவிவர்ஜிதே மருதலே ப்ராந்த்யைவ
ஸித்தம் நஹி ।
யத்யேவம் கலு த்ருச்யமேததகிலம் நாஹம் நவா தன் மம
ப்ரௌடாநந்த சிதேக ஸன்மய வபுঃ
ஶுத்தோঽஸ்ம்யகண்டோঽஸ்ம்யஹம் ॥

मयि-என்னிடத்தில், समुत्थितं-கிளம்பியுள்ள, इदं-இந்த, द्वैतं-வேற்றுமைத் தோற்றம், अखिलं-எல்லாம், मनःकल्पितं-மனஸிஞல் கல்பிக்கப்பட்டது, मिथ्या-மித்யையே. तोयविवर्जिते-ஜலமேயில்லாத, मरुतले-பாலைவனத்தரையில், भ्रान्त्या एव-பிராந்தியிஞலேயே, सिद्धं-ஏற்பட்ட, तोयं-ஜலம்

न हि-வாஸ்தவத்தில் இல்லையல்லவா! एवं खलु-இவ்விதம் தான், यदि-என்றிருப்பதால், एतत्-இந்த, दृश्यं-அனுபவிக் கப்படுவது, अखिलं-எல்லாம், अहं-நான், न-அல்ல तत्-அது, मम वा-என்னுடையதும், न-அல்ல. प्रौढानन्दचिदेकसन्मयवपुः- உத்தமமான ஆனந்தத்தையும், சுத்தமான ஞானத்தையும், ஸத்தையையும் மட்டுமே ஸ்வரூபமாயுடைய, शुद्धः-சுத்த மான ஆத்மஸ்வரூபமாக, अस्मि-நான் இருக்கிறேன். अहं- நான், अखण्डः-துண்டுபடாத பரிபூர்ணனாக, अस्मि-இருக் கிறேன்.

என்னிடத்தில் கிளம்பியுள்ள இந்த வேற்றுமைத் தோற்றம் எல்லாம் மனஸினால் கல்பிக்கப்பட்டது மித்யையே. ஜலமே யில்லாத பாலைவனத்தரையில் ப்ராந்தியினால் மட்டுமே ஏற்பட்ட ஜலம் வாஸ்தவத்தில் இல்லையல்லவா? ஆகையால் இந்த அனுபவிக்கப்படுவதெல்லாம் நான் அல்ல அது என்னுடை யதும் அல்ல. உத்தமமான ஆனந்தத்தையும், சுத்தமான ஞானத் தையும், ஸத்தையையும் மட்டுமே ஸ்வரூபமாயுள்ள சுத்தமான ஆத்ம ஸ்வரூபமாக நான் இருக்கிறேன். நான் துண்டுபடாத பரிபூர்ணனாக இருக்கிறேன்.

[ அறியாமையினால் ஆத்மாவினிடத்தில் மனஸினால் கல்பிக்கப் பட்டதாக ஜகத் இருக்கும்போது அதற்குத் தனித்து இருப்பே கிடையாது. இருப்பேயில்லாத பதார்த்தம் நானாகவாவது என்னுடையதாகவாவது இருப்பது ஸாத்தியமில்லை. கானல் ஜலம் வெறும் தோற்றமேயானதால், அது எதில் தோன்று கிறதோ அந்த தரைதான் அது என்றாவது அந்தத் தரையைச் சேர்ந்தது அது என்றாவது சொல்லமுடியுமா? ] (2)

देहो नाहमचेतनोऽयमनिशं कुड्यादिवन्निश्चितो
नाहं प्राणमयोऽपि वा दृतिधृतो वायुर्यथा निश्चितः ।
सोऽहं नापि मनोमयः कपिचलः कार्पण्यदुष्टो न वा
बुद्धिर्बुद्धकुवृत्तिकेव कुहना नाज्ञानमन्धंतमः ॥ ३ ॥

தேஹோ நாஹமசேதநோऽயமநிசம் குட்யாதிவந்நிச்சிதோ
நாஹம் ப்ராணமயோऽபி வா த்ருதித்ருதோ வாயுர்
யதா நிச்சிதः ।

ஸோऽஹம் நாபி மநோமய: கபிசல: கார்பண்ய துஷ்டோ நவா
புத்திர் புத்திகுவ்ருத்திகேவ குஹநா நாஜ்ஞாநமந்தம் தம: ||

अहं–நான், देहः–தேஹம், न–அல்ல, अयं–இது (தேஹம்), कुड्यादिवत्–சுவர் முதலானவைபோல, अनिशं–எப்பொழுதும் अचेतनः–அறிவற்ற ஜடம் என்று, निश्चितः–தீர்மானிக்கப் பட்டது. अहं–நான், प्राणमयोऽपि वा–பிராணமயகோசமும், न–அல்ல, அது, यथा–எப்படி, दृतिधृतः–துருத்தியில் அடைத்த वायुः–காற்றோ அப்படியேதான், निश्चितः–என்பது நிச்சயம். अहं–நான், कपिचलः–குரங்குமாதிரி சஞ்சலமாயும், कार्पण्यदुष्टः–சிறுமைத்தனமென்ற தோஷத்தோடுகூடியதாயும் உள்ள, सः–அந்த, मनोमयोऽपि–மனோமயகோசமும், न–அல்ல. बुद्धकुवृत्तिका इव–புத்தமதத்தில் சேர்ந்து நிந்திதமான நடத்தையோடுகூடினவளைப்போல, कुहना–ஏமாற்றும் தன்மையுள்ள, बुद्धिः वा–புத்தியும், न–அல்ல. अन्धतमः–ஒரே இருட்டாயிருக்கும், अज्ञानं–அஜ்ஞானமும், न–அல்ல.

நான் சுவர் முதலானவைபோல எப்பொழுதும் அறிவற்ற ஜடம் என்று தீர்மானிக்கப்பட்ட தேஹம் அல்ல நான் துருத்தியில் அடைத்த காற்றுப்போலுள்ள பிராணமயகோசமும் அல்ல. நான் குரங்குமாதிரி சஞ்சலமாயும் சிறுமைத்தனமென்ற தோஷத்தோடு கூடியதாயுமுள்ள அந்தமனோமயகோசமும் அல்ல. புத்த மதத்தில் சேர்ந்து நிந்திதமான நடத்தையோடு கூடினவளைப் போல ஏமாற்றும் தன்மையுள்ள புத்தியும் அல்ல. இருட்டாயிருக்கும் அஜ்ஞானமும் அல்ல.

[எதெல்லாம் அனுபவிக்கப்படுகிறதோ அதெல்லாம் ஆத்மா அல்லவென்று 2-வது சுலோகத்தில் சொல்லிவிட்டு, உலகத்தில் அறியாமையால் அன்னமயம், பிராணமயம், மனோமயம் விஜ்ஞான மயம், ஆனந்தமயம் என்கிற ஐந்து கோசங்களிலும் நான் என்கிற எண்ணம் இருந்துவருவதால் அவை யாதொன்றும் ஆத்மாவல்ல என்று காரணத்தோடு இங்கு சொல்லப்படுகிறது. தேஹம் ஜடமானதினாலும், பிராணன் வெறும் காற்றேயானதினாலும், மனஸ் சஞ்சலமானதினாலும், புத்தி ஏமாற்றக்கூடியதாலும், அஜ்ஞானம் இருட்டானதினாலும் ஆத்மாவல்லவென்று வரிசையாக அவ்வைந்து கோசங்களையும் குறிப்பிடுகிறார்.] (3)

नाहं खादिरपि स्फुटं मरुतलभ्राजत्पयःसाम्यतः
तेभ्यो नित्यविलक्षणोऽखिलदृशिः सौरप्रकाशो यथा ।
दृश्यैः सङ्गविवर्जितो गगनवत् संपूर्णरूपोऽस्म्यहं
वस्तुस्थित्यनुरोधतस्त्वहमिदं वीच्यादि सिन्धुर्यथा ॥ ४ ॥

நாஹம் காதிரபி ஸ்புடம் மருதல ப்ராஜத் பயஸ்ஸாம்யத:
தேப்யோ நித்யவிலக்ஷணோऽகிலத்ருஶி: ஸௌர
ப்ரகாஶோ யதா ।
த்ருச்யை: ஸங்கவிவர்ஜிதோ ககநவத்
ஸம்பூர்ணரூபோऽஸ்ம்யஹம்
வஸ்துஸ்தித்யனுரோததஸ்த்வஹமிதம் வீச்யாதி
ஸிந்துர் யதா ॥

अहं-நான், खादिः अपि-ஆகாசம் முதலான பூதங்களும், न-அல்ல என்பது, स्फुटं-தெளிவு, मरुतलभ्राजत्पयःसाम्यतः-அவைகள் பாலைவனத்தரையில் தோன்றும் ஜலத்திற்கு ஸமானமாயிருப்பதால், तेभ्यः-அவைகளிலிருந்து, नित्यविलक्षणः-எப்பொழுதும் வேறுபட்ட லக்ஷணத்தோடு கூடியவன் நான். सौरप्रकाशः-ஸூர்யனுடைய பிரகாசமானது यथा-எப்படியோ, (பிரகாசிக்கப்படும் பதார்த்தங்களுடன் ஒட்டாமலே இருக்கிறதோ அப்படியே நான்) अखिलदृशिः-எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருப்பவனாயிருந்தும், दृश्यैः-பார்க்கப்படும் பதார்த்தங்களுடன், सङ्गविवर्जितः-ஒட்டுதல் இல்லாதவன். अहं-நான், गगनवत्-ஆகாசம்போல் संपूर्णरूपः-எங்கும் நிறைந்த ஸ்வரூபத்தையுடையவனாக, अस्मि-இருக்கிறேன். तु-ஆனால், यथा-எவ்விதம், सिन्धुः-ஸமுத்திரம்தான், वीच्यादि-அலை முதலானதாகத் தோன்றுகிறதோ அப்படியே, अहं-நான், वस्तुस्थित्यनुरोधतः-பதார்த்தங்களுடைய நிலைமையை அனுஸரித்து, इदं-இதுவாக (அந்தந்த பதார்த்தமாக) தோன்றுகிறேன்.

நான் ஆகாசம் முதலான பூதங்களும் அல்ல என்பது தெளிவு, அவைகள் பாலைவனத்தரையில் தோன்றும் ஜலத்திற்கு ஸமான

மாயிருப்பதால் அவைகளிலிருந்து எப்பொழுதும் வேறுபட்ட லக்ஷணத்தோடு கூடியவன் நான். எப்படி ஸூர்யனுடைய பிரகாசமானது பிரகாசிக்கப்படும் பதார்த்தங்களுடன் ஒட்டாமலே இருக்கிறதோ அப்படியே நான் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பவனுகவிருந்தும் பார்க்கப்படும் பதார்த்தங்களுடன் ஒட்டுதல் இல்லாதவன். நான் ஆகாசம் போல எங்கும் நிறைந்த ஸ்வரூபத்தையுடையவனுக இருக்கிறேன். ஆனுல், எவ்விதம் ஸமுத்திரம் தான் அலை முதலானதாகத் தோன்றுகிறதோ அப்படியே நான் பதார்த்தங்களுடைய நிலமையை அனுஸரித்து அந்தந்த பதார்த்தமாகத் தோன்றுகிறேன்.

[தேஹாதிகளுக்கு உபாதான காரணமாயிருக்கும் பஞ்ச மஹா பூதங்களும் அக்ஞானகார்யமாகவே இருந்து வெறும் தோற்றமாய் கானல் ஜலம்போலவே இருந்துவருவதால் ஆத்மா அல்ல என்பது நிச்சயம். ஆனுலும் ஆத்மாவுக்கும் அனுத்மாவுக்கும் ஸம்பந்தமிருப்பதாகத்தோன்றுகிறதே என்ருல் அந்த ஸம்பந்தமும் வாஸ்தவமில்லை யென்பதை மூன்று திருஷ்டாந்தங்களினுல் விளக்குகிருர். நிர்மலமான ஸூர்யனுடைய பிரகாசம் அழுக்கடைந்த அசுத்தமான பதார்த்தத்தைத் தெரியப்படுத்துவதினுல் ஸூர்யனுக்கு அழுக்காவது அசுத்தியாவது ஏற்படுமா என்ருர் ஸூர்யன் ஆகாசத்தில் இருக்கிருர், பதார்த்தங்கள் இங்கேயிருக்கின்றன; ஸூர்யனுடைய கிரணங்கள் தான் அப்பதார்த்தங்களில் விழுகின்றன; ஸூர்யனுக்கும் அப்பதார்த்தங்களுக்கும் ஸாக்ஷாத்தாக நெருங்கின ஸம்பந்தமில்லாததினுல் அப்பதார்த்தங்களின் தோஷம் ஸூர்யனிடம் ஒட்டிக் கொள்ளக்காரணமில்லையென்று ஸமாதானம் சொல்லிவிடலாம். அதையுத்தேசித்து ஆகாச திருஷ்டாந்தம் சொல்லப்பட்டது. ஆகாசத்திலுல் வியாபிக்கப்படும் பதார்த்தங்கள் இருக்கிற இடத்திலேயே ஆகாசம் இருந்தபோதிலும் அவைகளின் தோஷத்தால் தீண்டப்படாமல் இல்லையா என்ருர். அப்படியானுல், வியாபிக்கும் ஆகாசமும் வியாபிக்கப்படும் பதார்த்தமும் எப்படி வெவ்வேருே அப்படியேதான் ஆத்மாவும் அனுத்மாவும் என்று ஏற்பட்டுவிட்டால் அனுத்மா கானல் ஜலம்போல் வெறும் தோற்றம் என்று சொன்னதைக் கைவிட்டதாக ஆய்விடுமே என்று தோன்றக்கூடியதால் ஸமுத்திர திருஷ்டாந்தம் சொல்லப்பட்டது. ஸமுத்திரத்தில் அலை இருக்கிறது என்று ஸமுத்திரத்தை ஆதாரமாகவும் அலையை ஆதேயமாகவும் சொல்லி

அவ்விரண்டுக்கும் ஸம்பந்தமிருப்பதாக வியவஹாரம் செய்த போதிலும் எப்படி ஸமுத்திரமேதான் அலையோ, அதாவது அலையாகத்தோன்றுகிறதோ, அப்படியே ஆத்மாதான் அனாத்மா, அதாவது அனாத்மாவாகத்தோன்றுகிறது இந்தத்தோற்றத்தை வைத்துக்கொண்டு இரண்டும் வேறுபட்டவைபோல் வைத்து அவைகளுக்குள் ஸம்பந்தம் கல்பித்து வியவஹரிக்கிறோம். வாஸ்தவத்தில் ஆத்மாவைத்தவிர அனாத்மா என்று தனியான இருப்புடன் ஒரு பதார்த்தம் கிடையாது.] (4)

निर्द्वैतोऽस्म्यहमस्मि निर्मलचिदाकाशोऽस्मि पूर्णोऽस्म्यहं
निर्देहोऽस्मि निरिन्द्रियोऽस्मि नितरां निष्प्राणवर्गोऽस्म्यहम् ।
निर्मुक्ताशुभमानसोऽस्मि विगलद्विज्ञानकोशोऽस्म्यहं
निर्मायोऽस्मि निरन्तरोऽस्मि विपुलप्रौढप्रकाशोऽस्म्यहम् ॥

நிர்த்வைதோऽஸ்ம்யஹமஸ்மி நிர்மலசிதாகாஶோऽஸ்மி
பூர்ணோऽஸ்ம்யஹம்
நிர்தேஹோऽஸ்மி நிரிந்த்ரியோऽஸ்மி நிதராம்
நிஷ்ப்ராணவர்கோऽஸ்ம்யஹம் ।
நிர்முக்தாஶுபமானஸோऽஸ்மி விகலத்விக்ஞான
கோஶோऽஸ்ம்யஹம்
நிர்மாயோऽஸ்மி நிரந்தரோऽஸ்மி விபுலப்ரௌட
ப்ரகாஶோऽஸ்ம்யஹம் ॥

अहं-நான், निर्द्वैतः-வேற்றுமையற்றவனாக, अस्मि-இருக்கிறேன். निर्मलचित्-நிர்மலமான ஞானஸ்வரூபனாக, अस्मि-இருக்கிறேன். आकाशः-நாலா பக்கங்களிலும் பிரகாசிக்கிறவனாக, अस्मि-இருக்கிறேன். अहं-நான், पूर्णः-எங்கும் நிறைந்தவனாக, अस्मि-இருக்கிறேன். निर्देहः-தேஹமற்றவனாக, अस्मि-இருக்கிறேன். निरिन्द्रियः-இந்திரியமற்றவனாக, अस्मि-இருக்கிறேன். नितरां-நிச்சயமாக, अहं-நான், निष्प्राणवर्गः-பிராணாபானாதிவர்க்கமுமற்றவனாக, अस्मि-இருக்கிறேன். निर्मुक्ताशुभमानसः-அமங்களமான மனஸிலிருந்து விடுபட்டவனாக, अस्मि-இருக்கிறேன். अहं-நான், विगलद्विज्ञानकोशः-

விக்ஞானமயகோசம் நழுவினவனாக, अस्मि-இருக்கிறேன். निर्मायः-மாயையற்றவனாக, अस्मि-இருக்கிறேன். निरन्तरः-இடைவெளியில்லாதவனாக, अस्मि-இருக்கிறேன். अहं-நான் विपुलप्रौढप्रकाशः-விஸ்தாரமான அதிகமான பிரகாசஸ்வரூபனாக, अस्मि-இருக்கிறேன்.

நான் வேற்றுமையற்றவனாக இருக்கிறேன். நிர்மலமான ஞானஸ்வரூபனாக இருக்கிறேன். நாலா பக்கங்களிலும் பிரகாசிக்கிறவனாக இருக்கிறேன். நான் எங்கும் நிறைந்தவனாக இருக்கிறேன். தேஹமற்றவனாக இருக்கிறேன் இந்திரியமற்றவனாக இருக்கிறேன். நிச்சயமாக நான் பிராணபானாதிவர்க்கமுமற்றவனாக இருக்கிறேன். அமங்களமான மனஸிலிருந்து விடுபட்டவனாக இருக்கிறேன். நான் விக்ஞானமயகோசம் நழுவினவனாக இருக்கிறேன். மாயையற்றவனாக இருக்கிறேன். இடைவெளியில்லாதவனாக இருக்கிறேன். நான் விஸ்தாரமான அதிகமான பிரகாச ஸ்வரூபனாக இருக்கிறேன்.

[திருச்யமான பிரபஞ்சம் நானும் அல்ல, என்னுடையதும் அல்லவென்று 2வது சுலோகத்தில் சொன்னதை அனுஸரித்து 3வது சுலோகத்தில் பஞ்ச கோசங்கள் நான் இல்லையென்றும் 4வது சுலோகத்தில் பஞ்ச பூதங்களும் பஞ்ச பூதங்களின் கார்யமான பிரபஞ்சமும் நான் இல்லையென்றும் காட்டப்பட்டது. 5வது சுலோகத்தில் அவை யாவும் என்னுடையதுமல்ல வென்று காட்டப்பட்டிருக்கிறது எவ்வித உபாதியுமற்றதாய் வியாபகமாயுள்ள சைதன்யமே ஆத்மா என்பது தெளிவாக்கப்பட்டது] (5)

मत्तोऽन्यन्न हि किंचिदस्ति यदि चिद्भास्यं ततस्तन्मृषा
गुञ्जावन्हिवदेव सर्वकलनाधिष्ठानभूतोऽस्म्यहम् ।
सर्वस्यापि दृगस्म्यहं समरसः शान्तोऽस्म्यपापोऽस्म्यहं
पूर्णोऽस्मि द्वयवर्जितोऽस्मि विपुलाकाशोऽस्मि नित्योऽस्म्यहम् ॥

மத்தோந்யத் நஹி கிஞ்சிதஸ்தி யதி சித்பாஸ்யம்
ததஸ்தன் ம்ருஷா
குஞ்ஜா வஹ்நிவதேவ ஸர்வகலநாதிஷ்டான
பூதோऽஸ்ம்யஹம் ।

ஸர்வஸ்யாபி த்ருகஸ்ம்யஹம் ஸமரஸ:
பரந்தோऽஸ்ம்யபாபோऽஸ்ம்யஹம்
பூர்ணோऽஸ்மி த்வயவர்ஜிதோऽஸ்மி விபுலாகாசோऽஸ்மி
நித்யோऽஸ்ம்யஹம் ||

मत्तः–என்னைத்தவிர, अन्यत् –வேறாக, किंचित् –எதுவும், न हि अस्ति–கிடையவே கிடையாது. चिद्भास्यं यदि–சைதன்யத்தினால் பிரகாசிக்கப்படுகிறதாய், ஏதாவது இருந்ததேயானால், ततः–அப்பொழுது, तत् –அது, गुञ्जावन्हिवदेव–குந்துமணியில் தோன்றும் நெருப்பைப்போலவே, मृषा–பொய்யேயாகும். अहं–நான், सर्वकलनाधिष्ठानभूतः–எல்லாத் தோற்றத்திற்கும் அதிஷ்டானமாயிருப்பவனாக, अस्मि–இருக்கிறேன். सर्वस्य अपि–எல்லாவற்றையும், दृक्–பார்ப்பவனாக, अस्मि–இருக்கிறேன். अहं–நான், समरसः–ஸமரஸனாகவும், शान्तः–சாந்தனாகவும், अस्मि–இருக்கிறேன். अहं–நான், अपापः–எவ்வித தோஷமுமில்லாதவனாக, अस्मि-இருக்கிறேன். पूर्णः–நிறைந்தவனாக, अस्मि–இருக்கிறேன். द्वयवर्जितः–இரண்டற்றவனாக, अस्मि–இருக்கிறேன். विपुलाकाशः–விஸ்தாரமாக எங்கும் பிரகாசிக்கிறவனாக, अस्मि–இருக்கிறேன். अहं–நான் नित्यः–நித்யனாக, अस्मि-இருக்கிறேன்.

என்னைத் தவிர வேறாக எதுவும் கிடையவே கிடையாது. ஏதாவது சைதன்யத்தினால் பிரகாசிக்கப்படுகிறதாய் இருந்ததேயானால் அப்பொழுது அது குந்துமணியில் தோன்றும் நெருப்பைப் போலவே பொய்யேயாகும். நான் எல்லாத் தோற்றங்களுக்கும் அதிஷ்டானமாக இருக்கிறேன். எல்லாவற்றையும் பார்ப்பவனாக இருக்கிறேன். நான் ஸமரஸனாயிருப்பவன். சாந்தனாக இருக்கிறேன். நான் எவ்வித தோஷமும் இல்லாதவனாக இருக்கிறேன். நிறைந்தவனாக இருக்கிறேன். இரண்டற்றவனாக இருக்கிறேன். விஸ்தாரமாக எங்கும் பிரகாசிக்கிறவனாக இருக்கிறேன். நான் நித்யனாக இருக்கிறேன்.

[திருச்யமான பிரபஞ்சம் நானும் அல்ல, என்னைச் சேர்ந்ததுமல்ல, என்று மாத்திரம் சொல்லிவிட்டால், நான் அல்லாததாகவும் என்னைச் சேர்ந்தது அல்லாததாகவும் அப்பிரபஞ்சம் தனித்து

வேருக இருக்கலாம் என்ற ஸந்தேஹம் ஏற்படலாம் அந்த ஸந்தேஹத்தை நிவர்த்தி செய்வதற்காக என்னைத் தவிர வேறு பதார்த்தமே கிடையாதென்றும் அப்படியொன்று இருப்பதாகத் தோன்றிஞல் அது பொய்யாகத்தான் தோன்றவேண்டுமென்றும் சொல்கிருர். காட்டில் போகும்போது வெளிச்சம்பட்டு குந்துமணி அக்னி மாதிரி தோன்றிவிட்டாலும், அது பிரகாசவஸ்துவாகுமா? வாஸ்தவத்தில் பிரகாச வஸ்துவில்லாமல் பிரகாச வஸ்துபோல் தோன்றிஞல் பொய்யல்லவா? அதே மாதிரிதான் பிரபஞ்சம் பிரகாசிக்கிறதென்ற தோற்றமும்.] (6)

मय्यस्मिन् परमार्थके श्रुतिशिरोवेद्ये स्वतोभासने
का वा विप्रतिपत्तिरेतदखिलं भात्येव यत्संनिधेः ।
सौरालोकवशात् प्रतीतमखिलं पश्यन् न तस्मिन् जनः
संदिग्धोऽस्त्यत एव केवलशिवः कोऽपि प्रकाशोऽस्म्यहम् ॥

மய்யஸ்மின் பரமார்த்தகே ச்ருதிஶிரோவேத்யே ஸ்வதோபாஸனே
கா வா விப்ரதிபத்திரேததகிலம் பாத்யேவ யத்ஸந்நிதே: ।
ஸௌராலோகவஶாத் ப்ரதீதமகிலம் பச்யன் ந தஸ்மின் ஜந:
ஸந்திக்தோऽஸ்த்யத ஏவ கேவலஶிவ: கோऽபி ப்ரகாஶோऽஸ்ம்யஹம் ॥

**अस्मिन्**-இந்த, **श्रुतिशिरोवेद्ये**-வேதாந்த வாக்கியங்களிஞலேயே அறியவேண்டியதாயும், **स्वतोभासने**-தாஞகவே பிரகாசிக்கிறதாயும், **परमार्थके**-பரமார்த்தமான வஸ்துவாயுமுள்ள, **मयि**-என்னிடத்தில், **विप्रतिपत्तिः**-பலவித அபிப்பிராயம், **का वा**-என்ன இருக்க முடியும்? **यत्संनिधेः एव**-எதனுடைய ஸாந்நித்யம் இருப்பதிஞலேயே, **एतत्**-இது **अखिलं**-எல்லாம், **भाति**-பிரகாசிக்கிறதோ (அது விஷயமாய்), **सौरालोकवशात्**-ஸூர்ய வெளிச்சத்தின் உதவியிஞல், **अखिलं**-எல்லாம், **प्रतीतं**-தெரிவதாக, **पश्यन्**-பார்த்துக்கொண்டே இருக்கிற, **जनः**-மனிதன், **तस्मिन्**-அது விஷயத்தில், **संदिग्धः**-ஸந்தேஹமுள்ளவஞக, **न अस्ति**-இருக்க

மாட்டான். अत एव–ஆகையினாலேயே, अहं–நான், केवल-शिवः–சுத்த மங்களஸ்வரூபனாய், प्रकाशः–ஞானஸ்வரூபனாய் कोऽपि–வர்ணிக்க முடியாத ஒருவனாய், अस्मि–இருக்கிறேன்.

வேதாந்த வாக்கியங்களினாலேயே அறியவேண்டியதாயும் தானாகவே பிரகாசிக்கிறதாயும், பரமார்த்த வஸ்துவாயுமுள்ளது என் ஸ்வரூபம். என் ஸ்வரூபத்தின் ஸாந்நித்யம் இருப்பதினாலேயே இது எல்லாம் பிரகாசிக்கிறது. இதில் பலவித அபிப்பிராயம் என்ன இருக்கமுடியும்? ஸூர்ய வெளிச்சத்தின் உதவியினால் எல்லாம் தெரிவதாகப் பார்த்துக்கொண்டேயிருக்கிற மனிதன் அது விஷயத்தில் ஸந்தேஹம் கொள்ளமாட்டான். ஆகையினாலேயே நான் சுத்த மங்கள ஸ்வரூபனாய் ஞான ஸ்வரூபனாய் வர்ணிக்கமுடியாத வஸ்துவாக இருக்கிறேன்.

[ஒரு பதார்த்தம் இருக்கிறதென்று தீர்மானம் செய்ய வேண்டுமானால், அதற்கு என்ன பிரமாணம், அதன் லக்ஷணம் என்ன என்று சொல்லியாகவேண்டும். ஆத்மா விஷயத்தில் பிரமாணம் என்னவென்றால், வெளிப்பிரமாணமாக வேதாந்த வாக்கியங்களும், உள் பிரமாணமாகத் தன் அனுபவமும் இருக்கின்றன என்று இந்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது. வெளிப் பிரமாணத்தினால் பரோக்ஷஞானமும் உள் பிரமாணத்தினால் ஸாக்ஷாத்காரமும் ஏற்படும். வேதாத்யயனம் செய்து உபநிஷத்துக்களின் அர்த்தத்தை விசாரம் செய்வதென்றால் அதற்கு விசேஷ யோக்கியதை, அதிகாரம் எல்லாம் வேண்டும். அனுபவமானது எல்லா ஜனங்களுக்கும் பொதுவானதினால் அதன் மூலம் ஆத்மாவை அறிவது சுலபம் என்று இங்கு சொல்லப் படுகிறது. ஸூர்யப்பிரகாசத்தினால் தான் மற்ற ஜடமான பதார்த்தங்கள் பிரகாசிக்கின்றன என்பது யாவரும் அறிந்த விஷயமே. இதை அறிந்துகொண்டேயிருக்கும்போது ஸூர்யன் உண்டா இல்லையா, ஸூர்யன் பிரகாச ஸ்வரூபனா இல்லையா, என்றெல்லாம் யாருக்காவது ஸந்தேஹம் வருவதுண்டா? அதே மாதிரி, தான் இருப்பதினால் தான் ஜகத் தோன்றுகிறதென்று எல்லாருக்கும் தெரிந்த விஷயமாயிருக்கையில், தான் உண்டா இல்லையா, தான் அறிவு ஸ்வரூபனா இல்லையா, என்றெல்லாம் ஸந்தேஹிக்க இடம் ஏது? ஆகையால் ஆத்மா உண்டென்பதற்கும், ஆத்மா பிரகாச ஸ்வரூபன் என்பதற்கும், தன் அனுபவமே பிரமாணமாகும்.] (7)

नित्यस्फूर्तिमयोऽस्मि निर्मलसदाकाशोऽस्मि शान्तोऽस्म्यहं
नित्यानन्दमयोऽस्मि निर्गतमहामोहान्धकारोऽस्म्यहम् ।
विज्ञातं परमार्थतत्त्वमखिलं नैजं निरस्ताशुभं
मुक्तप्राप्यमपास्तभेदकलनाकैवल्यसंज्ञोऽस्म्यहम् ॥ ८ ॥

நித்ய ஸ்பூர்த்திமயோZஸ்மி நிர்மல ஸதாகாஶோZஸ்மி
ஶாந்தோZஸ்ம்யஹம்
நித்யாநந்தமயோZஸ்மி நிர்கதமஹா
மோஹாந்தகாரோZஸ்ம்யஹம் ।
விக்ஞாதம் பரமார்த்ததத்வமகிலம் நைஜம் நிரஸ்தாஶுபம்
முக்தப்ராப்யமபாஸ்தபேத கலநா கைவல்ய
ஸம்ஞோZஸ்ம்யஹம் ॥

**नित्यस्फूर्तिमयः**—எப்பொழுதும் பிரகாசஸ்வரூபனாய், **अस्मि**—இருக்கிறேன். **निर्मलसदाकाशः**-நிர்மலமாயும், இருக்கும் தன்மையுடையதாயும், எங்கும் பிரகாசிக்கும் தன்மையுடையதாயும், **अस्मि**—இருக்கிறேன். **अहं**—நான், **शान्तः**—அடக்கமுள்ளவனாக, **अस्मि**—இருக்கிறேன். **नित्यानन्दमयः**—எப்பொழுதும் ஆனந்தஸ்வரூபனாய், **अस्मि**—இருக்கிறேன். **अहं**—நான், **निर्गतमहामोहान्धकारः**-மஹாமோஹமாகிற இருட்டு நன்கு விலகினவனாக, **अस्मि**—இருக்கிறேன். **निरस्ताशुभं**—அமங்களமெல்லாம் விலகினதான, **मुक्तप्राप्यं**—மோக்ஷமடைந்தவர்களாலேயே அடையத்தக்கதான, **नैजं**—தனக்கு சொந்தமான, **परमार्थतत्त्वं**-பரமார்த்தமான தத்வம், **अखिलं**—பூராவும், **विज्ञातं**—நன்கு அறியப்பட்டுவிட்டது **अहं**—நான், **अपास्तभेदकलनाकैवल्यसंज्ञः**—வேற்றுமை ஏற்படுவதையெல்லாம் விலக்கி தனித்திருக்கும் தன்மையையே அடையாளமுள்ளவனாக, **अस्मि**—இருக்கிறேன்.

எப்பொழுதும் பிரகாசஸ்வரூபனாய் இருக்கிறேன் நிர்மலமாயும் இருக்கும் தன்மையுடையதாயும், எங்கும் பிரகாசிக்கும் தன்மையுடையதாயும் இருக்கிறேன். நான் அடக்கமுள்ளவனாக இருக்கிறேன். எப்பொழுதும் ஆனந்தஸ்வரூபனாய் இருக்கிறேன். நான் மஹாமோஹமாகிற இருட்டு நன்கு விலகின

வனாக இருக்கிறேன். அமங்களமெல்லாம் விலகினதான, மோக்ஷமடைந்தவர்களாலேயே அடையத்தக்கதான, தனக்குச் சொந்தமான, பரமார்த்த தத்வம் பூராவும் நன்கு அறியப்பட்டுவிட்டது. நான் வேற்றுமை ஏற்படுவதையெல்லாம் விலக்கி தனித்திருக்கும் தன்மையையே அடையாளமுள்ளவனாக இருக்கிறேன்.

[லக்ஷணம் என்பது இருவகைப்படும். தெரியாத பதார்த்தத்தைத் தெரியப்படுத்தும்போது ஏற்கனவே தெரிந்திருக்கும் பதார்த்தத்திற்கும் அந்த தெரியாத பதார்த்தத்திற்கும் உள்ள ஏதேனும் ஸம்பந்தத்தைச் சொல்வது தடஸ்த லக்ஷணமாகும். தெரியாத பதார்த்தத்தின் ஸ்வரூபத்திலுள்ள விசேஷங்களையே எடுத்துச்சொல்வது ஸ்வரூப லக்ஷணமாகும். 2 முதல் 5 வரை சுலோகங்களில் ஏற்கனவே நமக்கு பரிசயமாயிருக்கிற உலகத்தைக்காட்டி அதன்மூலமாய் ஆத்மாவை அறியும்படி செய்வதால் தடஸ்த லக்ஷணம் சொன்னதாகும். இந்த சுலோகத்தில் ஆத்மாவின் ஸ்வரூபமான நிரதிசயமான நித்யமான ஸத், சித், ஆனந்தம், என்கிற லக்ஷணங்கள் குறிப்பிடப்படுகிறபடியால் ஸ்வரூப லக்ஷணம் சொல்லப்பட்டதாக ஆகும்.] (8)

स्वाप्नद्वैतवदेव जाग्रतमपि द्वैतं मनोमात्रकं
मिथ्येत्येव विहाय सच्चिदमलस्वात्मैकरूपोऽस्म्यहम् ।
यद्वा वेद्यमशेषमेतदनिशं मद्रूपमेवेत्यपि
ज्ञात्वा त्यक्तमरुन्महोदधिरिव प्रौढो गभीरोऽस्म्यहम् ॥ ९ ॥

ஸ்வாப்ந த்வைதவதேவ ஜாக்ரதமபி த்வைதம்
மநோமாத்ரகம்
மித்யேத்யேவ விஹாய ஸச்சிதமல ஸ்வாத்மைக
ரூபோ ऽஸ்ம்யஹம் ।
யத்வா வேத்யமசேஷமேததநிசம் மத்ரூபமேவேத்யபி
ஜ்ஞாத்வா த்யக்த மருன் மஹோததிரிவ ப்ரௌடோ
கபீரோஸ்ம்யஹம் ॥

स्वाप्नद्वैतवत् एव–ஸ்வப்பனத்தில் காணப்படும் வேற்றுமையைப்போலவேதான், जाग्रत–ஜாக்கிரத்காலத்தில் காணப்படும், द्वैतं अपि–வேற்றுமையும், मनोमात्रकं–மனஸினால் கல்பிக்கப்பட்டதுதான் ஆகையால், मिथ्या–வாஸ்தவ

மல்லாதது, इति-என்று, विहाय एव-விட்டே விட்டுவிட்டு, सच्चिदमलस्वात्मैकरूपः-ஸத்தாகவும் சித்தாகவும் நிர்மலமாகவும் உள்ள தன் ஆத்மாவாகவே இருக்கும் ஸ்வரூபமுள்ளவனாக, अहं-நான், अस्मि-இருக்கிறேன். यद्वा-அல்லது, वेद्यं-அறியப்படும், एतत्-இது, अशेषं-எல்லாம், अनिशं-எப்பொழுதும், मद्रूपं एव-என்னுடைய ரூபம்தான், इत्यपि-என்றும், ज्ञात्वा-அறிந்துகொண்டு, त्यक्तमरुन्महोदधिः इव-காற்று இல்லாத பெரிய ஸமுத்திரம்போல, प्रौढः-பெருமையுடனும் गभीरः-கம்பீரமாகவும், अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

ஸ்வப்னத்தில் காணப்படும் வேற்றுமையைப் போலவேதான் ஜாக்கிரத் காலத்தில் காணப்படும் வேற்றுமையும் மனஸினால் கல்பிக்கப்பட்டதுதான், ஆகையால் வாஸ்தவமல்லாதது என்று அதை விட்டே விட்டு விட்டு, ஸத்தாகவும், சித்தாகவும் நிர்மலமாகவுமுள்ள தன் ஆத்மாவாகவே இருக்கும் ஸ்வரூபமுள்ளவனாக நான் இருக்கிறேன். அல்லது அறியப்படும் இதுவெல்லாம் எப்பொழுதும் என்னுடைய ரூபம்தான் என்றும் அறிந்து கொண்டு, காற்றில்லாத பெரிய ஸமுத்திரம் போல, பெருமையுடனும் கம்பீரமாகவும் நான் இருக்கிறேன்.

[ஆத்மஞானிக்கு உலகம் தோன்றும்போது அது வெறும் தோற்றமே தவிர வாஸ்தவமல்ல என்ற எண்ணத்துடன் அதைப் பார்த்துக்கொண்டிருந்தாலும் இருக்கலாம். அல்லது அந்தத் தோற்றமும் ஆத்மாவில் ஆரோபிதமானபடியால் ஆத்மாவைத் தவிர்த்து அதற்கு தனித்து இருப்புக் கிடையாததினால் அவ்விதம் தோன்றுவதும் ஆத்மாதான் என்றும் பார்த்துக்கொண்டிருந்தாலும் இருக்கலாம். தோற்றம் என்கிற முறையில் முதல் பார்வையும், ஆத்மாவில் தோற்றம் என்ற முறையில் இரண்டாவது பார்வையும், ஆக இரண்டும் உசிதமேயாகும்] (9)

गन्तव्यं किमिहास्ति सर्वपरिपूर्णस्याप्यखण्डाकृतेः
कर्तव्यं किमिहास्ति निष्क्रियतनोर्मोक्षैकरूपस्य मे ।
निर्द्वैतस्य न हेयमन्यदपि वा नो वाऽप्युपेयान्तरं
शान्तोऽप्यस्मि विमुक्ततोयविमलो मेघो यथा निर्मलः ॥

கர்தவ்யம் கிமிஹாஸ்தி ஸர்வ பரிபூர்ணஸ்யா
ப்யகண்டாக்ருதே:
கர்த்தவ்யம் கிமிஹாஸ்தி நிஷ்க்ரியதநோர் மோக்ஷைக
ரூபஸ்ய மே 1
நிர்த்வைதஸ்ய ந ஹேயமந்யதபி வா நோ
வாப்யுபேயாந்தரம்
ஶாந்தோத்யாஸ்மி விமுக்த தோய விமலோ மேகோ
யதா நிர்மல: 11

सर्वपरिपूर्णस्य-எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவனுகவும், अखण्डाकृते: अपि-துண்டுபடாத ஸ்வரூபமுள்ளவனுகவும் இருக்கிற (எனக்கு), गन्तव्यं-போகவேண்டியதாக, इह-இங்கே, किं-எது, अस्ति-இருக்கிறது? निष्क्रियतनोः-செய்கையேயில்லாத ஸ்வரூபத்தையுடையவனுகவும், मोक्षैक-रूपस्य-மோக்ஷத்தையே ஸ்வரூபமாயுடையவனுகவும் இருக்கிற, मे-எனக்கு, कर्तव्यं-செய்யவேண்டியதாக, इह-இங்கே, किं-எது, अस्ति-இருக்கிறது? निर्द्वैतस्य-இரண்டற்றவனுக இருக்கும் (எனக்கு), अन्यत् अपि वा-மற்ருென்று என்று எது வேனும், हेयं-விலக்கவேண்டியதாக, न-கிடையாது. उपेयान्तरं वा अपि-அடையவேண்டியதாகவும் வேறு எதுவும், नो-கிடையாது. अद्य-இப்பொழுது, शान्तः-சாந்தனுயும், यथा-எப்படி, मेघः-மேகமானது, विमुक्ततोयविमलः-நன்கு ஜலத்தை வர்ஷித்துவிட்டபிறகு நிர்மலமாயிருக்குமோ அப்படியே, निर्मलः-நிர்மலமாயும், अस्मि-இருக்கிறேன்.

எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவனுகவும் துண்டுபடாதஸ்வரூபமுள்ளவனுகவும் இருக்கிற எனக்கு போக வேண்டியதாக எது இங்கே இருக்கிறது? செய்கையேயில்லாத ஸ்வரூபத்தை உடையவனுகவும் மோக்ஷத்தையே ஸ்வரூபமாயுடையவனுகவும் இருக்கிற எனக்கு செய்யவேண்டியதாக இங்கே எது இருக்கிறது? இரண்டற்றவனுக இருக்கும் எனக்கு மற்ருென்று என்று ஏதேனும் விலக்கவேண்டியதாகக் கிடையாது. அடையவேண்டியதாயும் வேறு எதுவும் கிடையாது. இப்பொழுது சாந்தனுகவும் எப்படி மேகமானது நன்கு ஜலத்தை வர்ஷித்துவிட்ட பிறகு நிர்மலமாயிருக்குமோ அப்படியே நிர்மலனுகவும் இருக்கிறேன்.

[உலகத்தில் ஸகலவித பிரவிருத்திக்கும் ஒரு உத்தேசம் இருந்தே தீரவேண்டும். பரலோகமோ, இங்கேயே வேறு இடமோ, அல்லது வேறு பதவியோ போகவேண்டியதாயிருக்கும். ஆனால் "போகிறது" என்பதின் தாத்பர்யத்தை கவனிக்கும் போது, போக உத்தேசிப்பவன் இப்பொழுது போகவேண்டிய ஸ்தானத்தில் இல்லையென்றும், போகிறவன் ஸமகாலத்தில் இரண்டு இடங்களிலும் இருக்க முடியாததினாலேயே சின்ன உருவத்தோடு கூடினவன் என்றும், வைத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. இவ்விரண்டு அம்சங்களும் ஆத்மாவிடத்தில் கிடையாது. ஆத்மா எல்லா விடங்களிலும் ஏற்கனவே இருப்பவன். சிறியவனல்ல வியாபகன். ஆகையால் அவனுக்கு போகவேண்டியுதென்பது கிடையாது. தவிரவும் இன்னொரு இடத்திற்குப் போகவேண்டுமானால் அதற்கு வேண்டிய பிரவிருத்திகளை செய்தாகவேண்டும். ஆனால் பிரவிருத்தி என்பது தேஹம் முதல் புத்தி வரையுள்ள உபாதிகளைச்சேர்ந்ததே தவிர ஆத்மாவிற்கு எவ்வித பிரவிருத்தியும் கிடையாது; மேலும் புதிதாக ஏதேனும் ஸம்பாதிக்கவேண்டியிருந்தால் பிரவிருத்தி அவசியம் ஆத்மாவோ நித்யஸித்தமான மோக்ஷஸ்வரூபியேயாகும். ஆகையால் பிரவிருத்திக்கும் இடமில்லை செய்கை என்பதற்கு பிரயோஜனம் இரண்டுவிதமாய் இருக்கலாம், தனக்கு பிரதிகூலமான பதார்த்தத்தை விலக்குதல் அல்லது தனக்கு அனுகூலமான பதார்த்தத்தை எடுத்துக்கொள்ளுதல் இருவிதத்திலும் தள்ளவேண்டியதாகவோ, ஸ்வீகரிக்கவேண்டியதாகவோ, தன்னைவிட வேறு பதார்த்தம் இரண்டாவதாக இருந்தாகவேண்டும். ஆத்மாவைத் தவிர வேறு பதார்த்தமே கிடையாததினால் ஆத்மஞானிக்கு எடுக்கவேண்டியதாகவோ, தள்ளவேண்டியதாகவோ யாதொன்றும் கிடையாது. ஆக, போக அவசியமன்னியில், செய்ய அவசியமன்னியில், எடுக்கவோ, தள்ளவோ அவசியமன்னியில், இருக்கும் நிலையில் எவ்வித சலனமும் இல்லாமல் நிர்மலமாய் பிரகாசிப்பதே நியாயமாகும்.] (10)

किं न प्राप्तमितः पुरा किमधुना लब्धं विचारादिना
यस्मात् तत्सुखरूपमेव सततं जाज्वल्यमानोऽस्म्यहम् ।
किं वाऽपेक्ष्यमिहापि मय्यतितरां मिथ्याविचारादिकं
द्वैताद्वैतविवर्जिते समरसे मौनं परं संमतम् ॥ ११ ॥

கிம் நப்ராப்தமித: புரா கிமதுநா லப்தம் விசாராதிநா
யஸ்மாத் தத் ஸுகரூபமேவ ஸததம்
ஜாஜ்வல்யமாநோ‌ऽஸ்ம்யஹம் ॥
கிம் வா‌ऽபேக்ஷ்யமிஹாபி மய்யதிதராம் மித்யா விசாராதிகம்
த்வைதாத்வைத விவர்ஜிதே ஸமரஸே மௌநம் பரம்
ஸம்மதம் ॥

इतः-இதற்கு, पुरा-முன்னால், किं-எது, न प्राप्तं-அடையப்படாமலிருந்தது? अधुना-இப்பொழுது, विचारादिना-வேதாந்த விசாரம் முதலானதினால், किं-எது, लब्धं-அடையப்பட்டிருக்கிறது? यस्मात्-ஏனென்றால். अहं-நான், सततं-எப்பொழுதுமே, तत्सुखरूपमेव-அந்த ஸுகஸ்வரூபனாகவே இருந்துகொண்டு, जाज्वल्यमानः-மிகவும் ஜ்வலித்துக்கொண்டே, अस्मि-இருக்கிறேன். द्वैताद्वैतविवर्जिते-இரண்டாயிருக்கும் தன்மை, இரண்டற்ற தன்மை என்கிற வியவஹாரங்களெல்லாம் இல்லாதவனாய், समरसे-ஸமரஸமாயிருக்கிற, मयि-என்னிடத்தில், इहापि-இந்த நிலையிலும், मिथ्याविचारादिकं-பொய்யான விசாரம் முதலானது, अतितरां மிகவும், अपेक्ष्यं-அவசியம் வேண்டியதாக, किं वा-உள்ளதா? मौनं-மௌனம் தான், परं-சிலாக்கியமென்று, संमतम्-ஒப்புக்கொள்ள வேண்டும்.

இதற்கு முன்னால் என்னால் எது அடையப்படாமலிருந்தது? இப்பொழுது வேதாந்த விசாரம் முதலானதினால் எது அடையப்பட்டிருக்கிறது? ஒன்றுமில்லை. ஏனென்றால் நான் எப்பொழுதுமே அந்த ஸுகஸ்வரூபனாகவே இருந்துகொண்டு மிகவும் ஜ்வலித்துக்கொண்டே இருக்கிறேன். இரண்டாயிருக்கும் தன்மை, இரண்டற்ற தன்மை, என்கிற வியவஹாரங்களெல்லாம் இல்லாதவனாய் ஸமரஸமாயிருக்கிற என்னிடத்தில் இந்த நிலையிலும் பொய்யான விசாரம் முதலானது மிகவும் அவசியம் வேண்டியதாய் உள்ளதா? மௌனம் தான் சிலாக்கியமென்று ஒப்புக்கொள்ளவேண்டும்.

[எடுக்கவேண்டுமென்றும் தள்ளவேண்டுமென்றும் தோன்றுவதற்குக் காரணமான ராகத்வேஷாதிகளும் அவைகளால் ஏற்படும் கர்மாக்களும் அவைகளின் பலன்களும் வேண்டா

மென்றிருக்கலாம். இவைகளைவிட்டு நிவிருத்தி மார்க்கத்தில் ஈடுபட்டு ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்காக அவசியமான வேதாந்த விசாரம் முதலானவை கூடவா வேண்டாம்? என்று தோன்றும். ஸுகஸ்வரூபமான ஆத்மா புதிதாக ஸம்பாதிக்கப்படும் விஷய மல்ல, என்றைக்கும் ஸித்தமாய் எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற வஸ்துதான், என்ற எண்ணம் ஏற்பட்ட பிறகு அந்த விசாரம் முதலானவைகளால் என்ன புதிதான பிரயோஜனம் அடையப்படப்போகிறது? அந்த நிலை வரும்வரை எல்லாம் அவசியமே என்பதை மறந்துவிடக்கூடாது.] (11)

श्रोतव्यं च किमस्ति पूर्णसुदृशो नित्यापरोक्षस्य मे
मन्तव्यं च न मेऽस्ति किंचिदपि वा निःसंशयज्योतिषः ।
ध्यातृध्येयविभेदहानिवपुषो न ध्येयमस्त्येव मे
सर्वात्मैकमहारसस्य सततं नो वा समाधिर्मम ॥ १२ ॥

ச்ரோதவ்யம் ச கிமஸ்தி பூர்ண ஸுத்ருசோ
நித்யாபரோக்ஷஸ்ய மே
மந்தவ்யம் ச ந மேऽஸ்தி கிஞ்சிதபி வா நி:ஸம்சய
ஜ்யோதிஷ: ]
த்யாத்ரு த்யேய விபேத ஹாநி வபுஷோ ந
த்யேயமஸ்த்யேவ மே
ஸர்வாத்மைக மஹாரஸஸ்ய ஸததம் நோ வா ஸமாதிர்மம ||

पूर्णसुदृशः—பூர்ணமாக நல்ல ஞானஸ்வரூபியாயும், नित्यापरोक्षस्य—எப்பொழுதும் பிரத்யக்ஷமாகவே தெரிந்துகொண்டிருப்பவனுயும் இருக்கிற, मे—எனக்கு, श्रोतव्यं च—கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டியதுதான், किं—என்ன, अस्ति—இருக்கிறது? निःसंशयज्योतिषः—ஸந்தேஹத்திற்கு இடமில்லாத ஜ்யோதி ஸ்வரூபனுன, मे—எனக்கு, किंचिदपि वा—கொஞ்சம்கூட, मन्तव्यं च—மனனம் செய்யவேண்டியதும், न अस्ति—கிடையாது. ध्यातृध्येयविभेदहानिवपुषः—தியானம் செய்கிறவன், தியானம் செய்யப்படும் பதார்த்தம், என்கிற பேதத்தை போக்கடிக்கும் ஸ்வரூபத்தோடுகூடின, मे—எனக்கு ध्येयं—தியானம் செய்யவேண்டியதாக ஒன்றும், न अस्ति एव—

கிடையவே கிடையாது. **सततं**-எப்பொழுதும், **सर्वात्मैक-महारसस्य**-எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருக்கும் தன்மையிலேயே உத்தமமான ஆனந்தத்தையுடைய, **मम**-எனக்கு, **समाधिः वा**-ஸமாதி நிலையும், **नो**-கிடையாது.

பூர்ணமாக நல்ல ஞானஸ்வரூபியாயும் எப்பொழுதும் ப்ரத்யக்ஷமாகவே தெரிந்துகொண்டிருப்பவனுயும் இருக்கிற எனக்கு கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியது தான் என்ன இருக்கிறது? ஸந்தேஹத்திற்கு இடமில்லாத ஜ்யோதி ஸ்வரூபனை எனக்குக் கொஞ்சம்கூட மனனம் செய்யவேண்டியதும் கிடையாது. தியானம் செய்கிறவன், தியானம் செய்யப்படும் பதார்த்தம் என்கிற பேதத்தைப் போக்கடிக்கும் ஸ்வரூபத்தோடு கூடின எனக்கு தியானம் செய்யவேண்டியதாக ஒன்றும் கிடையவே கிடையாது. எப்பொழுதும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருக்கும் தன்மையிலேயே உத்தமமான ஆனந்தத்தையுடைய எனக்கு ஸமாதி நிலையும் கிடையாது.

[ஞான மார்க்கத்தில் ஸாதனங்களாக சொல்லப்பட்டிருக்கும் சிரவணம், மனனம், நிதித்யாஸனம் ஸமாதி என்கிற நான்கும் ஆத்மஞானிக்கு அவசியமில்லை. தனக்காகத் தெரிந்துகொள்ள முடியாமலிருந்தாலும் கேட்டுத் தெரிந்துகொள்ள அவசியம் ஏற்படும். அப்படியே தெரிந்துகொள்ள வேண்டியதாக நினைக்கும் பதார்த்தம் தானகவே விளங்காதபோனாலும் கேட்டுத்தெரிந்துகொள்ள அவசியம் ஏற்படும். இங்கு அறிகிறவனுக இருப்பதும் ஞான ஸ்வரூபனை ஆத்மாதான். அறியப்படவேண்டியதாக இருப்பதும் ஸ்வயம்பிரகாசமாய் விளங்கிக்கொண்டேயிருக்கும் ஆத்மாதான். ஆகையால் இரண்டு விதத்திலும் கேட்டுத்தெரிந்துகொள்ளுதலாகிய சிரவணம் தேவையில்லை. ஒருவிஷயத்தைப் பற்றிக் கேட்டபிறகு அது விஷயமாகத் தெளிவான ஞானம் ஏற்படாமல் போனாலும், அது விஷயமாக ஏதேனும் ஸந்தேஹமிருந்தாலும் அதைப்பற்றி நன்கு ஆலோசிக்கவேண்டிய அவசியமேற்படும். ஆத்மா பிரகாசரூபமாகவே இருப்பதால் அது நன்கு மனஸில் பதியும்படி தெரியவில்லை என்ருவது, அது விஷயமாக ஏதாவது ஸந்தேஹமும் ஏற்படக்கூடியது என்ருவது சொல்வதற்கு இடமில்லை. ஆகையால் ஆலோசனை ரூபமான மனனத்திற்கு அவசியமில்லை. வெளியிலுள்ள ஒரு பதார்த்தத்தின்

உருவம் மனதில் நன்கு பதியவேண்டுமென்றால் அதைப்பற்றி இடைவிடாமல் தியானம் செய்யவேண்டிய அவசியமுண்டு. ஆத்மா வெளிப்பதார்த்தமேயில்லாததினாலும் தியானம் செய்கிறவனும் தியான விஷயமும் ஆத்மாவாகவே இருப்பதாலும், அதாவது தியானம் செய்கிறவனைத்தவிர தியான விஷயம் வேறாக இல்லாததினாலும் அதைப்பற்றித் திரும்பத் திரும்ப தியானம் செய்வதான நிதித்யாஸனத்திற்கும் அவசியமில்லை தியானம் செய்து மனஸை விஷயாகாரமாகச் செய்து அந்த நிலையிலேயே அசைவற்று நிறுத்துவது ஸமாதி எனப்படும். ஆத்மஞானிக்கு எப்பொழுதும் ஆத்மாகாரமான நிலை இருந்துகொண்டேயிருப்பதால் அதில் கொண்டுபோய் நிறுத்தவேண்டிய அவசியம் கிடையாது. ஆகையால் அவனுக்கு ஸமாதி என்பதும் கிடையாது ] (12)

आत्मानात्मविवेचनाऽपि मम नो विद्वत्कृता रोचते-
ऽनात्मा नास्ति यदस्ति गोचरवपुः को वा विवेक्तुं क्षमी (मः)।
मिथ्यावादविचारचिन्तनमहो कुर्वन्त्यदृष्टात्मकाः
भ्रान्ता एव न पारगा दृढधियस्तूष्णीं शिलावत् स्थिताः ॥

ஆத்மானாத்ம விவேசநாபி மம நோ வித்வத்க்ருதாரோசதே
ऽநாத்மா நாஸ்தி யதஸ்தி கோசரவபு: கோ வா
விவேக்தும் க்ஷமீ(ம:) ।
மித்யாவாத விசார சிந்தனமஹோ
குர்வந்த்யத்ருஷ்டாத்மகா:
ப்ராந்தா ஏவ ந பாரகா த்ருடதியஸ்தூஷ்ணீம்
ஶிலாவத் ஸ்திதா: ॥

**विद्वत्कृता**–வித்வான்களால் செய்யப்படும், **आत्मानात्मविवेचना अपि**–ஆத்மா வேறு, அனாத்மா வேறு, என்று வகுத்துப் பிரிப்பதும், **मम**–எனக்கு, **नो रोचते**–பிடிக்கவில்லை. ஏனென்றால், **अनात्मा**–அனாத்மாவென்று தனியாக ஒரு பதார்த்தம், **नास्ति**–கிடையவே கிடையாது **गोचरवपुः**–தனியாகத்தென்படும் ஸ்வபாவத்துடன், **यत् अस्ति**–அனாத்மா இருக்குமேயானால், அதை, **विवेक्तुं**-விவேசனம் செய்து அதை அஸத்யம் என்று தீர்மானிக்க, **को वा**–யார்தான், **क्षमः**–

ஸாமர்த்தியமுள்ளவன் ? अहो-ஐயோ பாவம்! अदृष्टात्मकाः- ஆத்மதத்வ ஸாக்ஷாத்காரம் செய்யாதவர்கள், मिथ्यावाद-विचारचिन्तनं-வீணாக வாதம், விசாரம், சிந்தனம் இவைகளை, कुर्वन्ति-செய்கிறார்கள். அவர்கள், भ्रान्ता एव-பிராந்தியில் அகப்பட்டவர்களே தவிர, पारगाः-கரையேறினவர்கள், न-அல்ல. दृढधियः-திடமான ஞானமுள்ளவர்கள், शिलावत्-பாறையைப்போல, तूष्णीं-பேசாமல், स्थिताः-இருப்பார்கள்.

வித்வான்களால் செய்யப்படும் ஆத்மா வேறு, அனாத்மா வேறு என்று பகுத்துப் பிரிப்பது எனக்குப் பிடிக்கவில்லை. ஏனென்றால் அனாத்மாவென்று தனியாக ஒரு பதார்த்தம் கிடையவே கிடையாது. தனியாகத்தென்படும் ஸ்வபாவத்துடன் அனாத்மா இருந்ததேயானால் அதை விவேசனம் செய்து அதை அஸத்யமென்று தீர்மானிக்க யார்தான் ஸாமர்த்தியமுள்ளவன்? ஐயோ பாவம்! ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரம் செய்யாதவர்கள் வீணாக வாதம், விசாரம், சிந்தனம் இவைகளைச் செய்கிறார்கள். அவர்கள் பிராந்தியில் அகப்பட்டவர்களே தவிர, கரையேறின வர்கள் அல்ல. திடமான ஞானமுள்ளவர்கள் பாறையைப்போல பேசாமல் இருப்பார்கள்.

[வேதாந்த விசாரத்தில் இறங்கவேண்டுமானால் அதற்கு முன்னாலேயே விவேகம் வைராக்கியம், சமாதி ஷட்கம், முமுக்ஷா, என்று சொல்லப்படும் நான்கு ஸாதனங்களை ஸம்பாதித்திருக்க வேண்டுமென்று சொல்கிறார்களேயென்றால் ஆத்மஞானிக்கு இவைகளில் முதல் ஸாதனமான ஆத்மானாத்ம விவேகமே வேண்டாம். ஆத்மா வேறு, அனாத்மா வேறு, என்று தனித்தனி லக்ஷணங்கள் சொல்லி வித்யாஸப்படுத்தி சொல்லவேண்டுமானால் வாஸ்தவத்தில் தனித்தனியே இரண்டு பதார்த்தங்கள் இருக்க வேண்டுமல்லவா? ஆத்மாவைத் தவிர வேறு பதார்த்தமே கிடையாது என்ற நிலையில் அனாத்மா என்பது ஏது? ஆத்மாவை எதிர்பாராமல் அது தனித்து இருக்குமேயானால் அதை கிடையாது; வாஸ்தவமில்லை, என்றெல்லாம் எப்படி யாரால் தான் சொல்லமுடியும்? ஆகையால் இதுமாதிரி வியவஹாரங் களோ, விசாரங்களோ, இவைகளுக்காக புத்தியை செலவழிக் கிறதோ, எல்லாமே அனாவசியம். ஆனால் ஆத்மஞானமில்லா மலிருப்பவர்கள் இவ்விதம் வீணாக பொழுதுபொக்குவார்கள்.

-ஆத்மஜ்ஞானம் திடமாயிருப்பவன் இவ்வித வியவஹாரங்கள் யாதொன்றுக்கும் போகாமல் மௌனமாகவே இருந்து விடுவான்.] (13)

वस्तुस्थित्यनुरोधतस्त्वहमहो कश्चित् पदार्थो न चा-
प्येवं कोऽपि विभामि संततदृशिर्वाङ्मानसागोचरः ।
निष्पापोऽस्म्यभयोऽस्म्यहं विगतदुःशङ्काकलङ्कोऽस्म्यहं
संशान्तानुपमानशीतलमहःप्रौढप्रकाशोऽस्म्यहम् ॥ १४ ॥

வஸ்துஸ்தித்யனுரோததஸ்த்வஹமஹோ கச்சித் பதார்த்தோ ந சா
ப்யேவம் கோபி விபாமி ஸந்ததத்ருசிர் வாங்மானஸா கோசர: ।
நிஷ்பாபோ஽ஸ்ம்யபயோ஽ஸ்ம்யஹம் விகததுச்சங்கா களங்கோ஽ஸ்ம்யஹம்
ஸம்சாந்தானுபமான சீதளமஹ: ப்ரௌட ப்ரகாசோ஽ஸ்ம்யஹம் ॥

वस्तुस्थित्यनुरोधतः तु–வஸ்துக்களுடைய நிலையை அனுஸரித்துத்தானே, अहं–நான், कश्चित्–எவ்வித, पदार्थः–பதார்த்தமாகவும் இருக்கிறேன், अहो–என்ன ஆச்சர்யம்! एवं चापि–அப்படியும் (அப்பதார்த்தமாகவும்) (நான்), न–இல்லை, संततदृशिः–எப்பொழுதும் ஞானஸ்வரூபனும், वाङ्मानसागोचरः–வாக்குக்காவது மனஸுக்காவது விஷயமாகாதவனும், कोऽपि–இன்னவிதம் என்று நிர்வசனம் செய்ய முடியாதவனும், विभामि–நன்கு பிரகாசித்துக்கொண்டிருக்கிறேன், निष्पापः–எவ்வித தோஷமும் அற்றவனாக, अस्मि–இருக்கிறேன். अभयः–பயமில்லாதவனாக, अहं–நான், अस्मि–இருக்கிறேன். विगतदुःशङ्काकलङ्कः–துஷ்டமான ஸம்சயமாகிற மாசு அற்றவனாக, अहं–நான், अस्मि–இருக்கிறேன். संशान्तानुपमानशीतलमहःप्रौढप्रकाशः–நன்கு அடங்கினதாய், நிகரற்றதாய், குளுமையாய் உள்ள தேஜஸ்ஸைப்போல மிகவும் பிரகாசமுள்ளவனும், अहं–நான், अस्मि–இருக்கிறேன்.

வஸ்துக்களுடைய நிலையை அனுஸரித்துத்தோன்: நான் எவ்வித பதார்த்தமாகவும் இருக்கிறேன். என்ன ஆச்சர்யம்! அப்படியும் (அப்பதார்த்தமாகவும்) நான் இல்லை. எப்பொழுதும் ஞானஸ்வரூபனாய், வாக்குக்காவது மனஸுக்காவது விஷயமாகாதவனாய், இன்னவிதமென்று நிர்வசனம் செய்ய முடியாதவனாய், நன்கு பிரகாசித்துக் கொண்டிருக்கிறேன். எவ்வித தோஷமும் அற்றவனாக இருக்கிறேன். பயமில்லாதவனாக நான் இருக்கிறேன். துஷ்டமான ஸம்சயமாகிற மாசு அற்றவனாக நான் இருக்கிறேன். நன்கு அடங்கினதாய், நிகரற்றதாய், குளுமையாயுள்ள தேஜஸ்ஸைப்போல மிகவும் பிரகாசமுள்ளவனாக நான் இருக்கிறேன்.

[முன் 4-வது சுலோகத்தில் ஸமுத்திரமானது எப்படி அலை முதலானவையாக அததன் நிலைமைக்குத் தக்கபடி பெயரையும் உருவத்தையும் தரிக்கிறதோ, அப்படியேதான் ஆத்மாவும் தன்னுடைய பிரகாசத்தினால் வியாபிக்கப்படும் பதார்த்தங்களாகக் காண்கிறது என்று சொல்லப்பட்டது. ஸமுத்திரம் தான் அலையாகத்தோன்றுகிறது என்பது வாஸ்தவமாயிருந்தாலும் ஸமுத்திரம் அலையாகிவிடாது. அதேபோல ஆத்மா பதார்த்தங்களை வியாபிக்கும்போது அவைகளின் பெயரையும் உருவத்தையும் தரிப்பதினால் ஆத்மா அப்பதார்த்தங்கள் ஆகிவிடாது. ஒரு குடத்தில் அடைபட்ட ஆகாசம் குடத்தின் உருவத்தை தரித்தாலும் ஆகாசம் அக்குடமாகவாவது அக்குடத்தின் உருவத்தையுடையதாகவாவது ஆகிவிடாது. இவ்விதமாக ஆத்மா பதார்த்தத்தின் ஆகாரத்தை அனுஸரித்து ஆகாரமுள்ளதாகத் தோன்றினபோதிலும் அப்பதார்த்தமும் ஆகாது அவ்வாகாரமுள்ளதாகவும் ஆகாதென்பது ஆச்சர்யமே ஆகும். பதார்த்த ஸம்பந்தமன்னியில் ஆத்மாவின் ஸ்வரூபத்தை வர்ணிக்க வாக்குக்கும், சிந்திக்க மனஸுக்கும் சக்தி கிடையாது அது கேவலம் அறிவேயாகும்.] (14)

योऽहं पूर्वमितः प्रशान्तकलनः शुद्धोऽस्मि बुद्धोऽस्म्यहं
यस्मान्मत्त इदं समुत्थितमभूदेतन्मया धार्यते ।
मय्येव प्रलयं प्रयाति निरधिष्ठानाय तस्मै सदा
सत्यानन्दचिदात्मकाय विपुलप्रज्ञाय मह्यं नमः ॥ १५ ॥

யோஹऽம் பூர்வமித: ப்ரசாந்தகலந: சுத்தோऽஸ்மி
புத்தோऽஸ்ம்யஹம்
யஸ்மான் மத்த இதம் ஸமுத்திதமபூதேதன் மயா
தார்யதே |
மய்யேவ ப்ரளயம் ப்ரயாதி நிரதிஷ்டாநாய தஸ்மை ஸதா
ஸத்யானந்தசிதாத்மகாய விபுலப்ரஜ்ஞாய மஹ்யம் நம: ||

यः-எந்த, अहं-நான், इतः-இதற்கு (இப்பிரபஞ்சம் உண்டாவதற்கு), पूर्वं-முன்னதாக, प्रशान्तकलनः-எவ்வித வியாபாரமும் அடங்கினவனாய் (இருந்தேனோ அந்த நான்), शुद्धः-சுத்தனாக, अस्मि-இருக்கிறேன். बुद्धः-அறிந்தவனாக, अहं-நான், अस्मि-இருக்கிறேன் यस्मात्-எந்த, मत्तः-என்னிடமிருந்து, इदं-இது, समुत्थितं अभूत्-வெளிக்கிளம்பியதாக ஏற்பட்டதோ, एतत्-இது, मया-என்னால், धार्यते-தரிக்கப்படுகிறதோ, मयि एव-என்னிடத்திலேயே, प्रलयं-லயத்தை, प्रयाति-அடைகிறதோ, तस्मै-அந்த, निरधिष्ठानाय-தனக்கு வேறு அதிஷ்டானமில்லாதவனாய், सत्यानन्दचिदात्मकाय-ஸத்யமாயும், ஆனந்தமாயும் ஞானமாயுமுள்ள ஸ்வரூபத்தோடுகூடினவனாய், विपुलप्रज्ञाय-வியாபகமான அறிவுடையவனாய் இருக்கும், मह्यं-எனக்கு, सदा-எப்பொழுதும், नमः-நமஸ்காரம்.

எந்த நான் இதற்கு (இந்தப் பிரபஞ்சம் உண்டாவதற்கு) முன்னால் எவ்வித வியாபாரமும் அடங்கினவனாய் இருந்தேனோ அந்த நான் சுத்தனாக இருக்கிறேன். அறிந்தவனாக நான் இருக்கிறேன். எந்த என்னிடமிருந்து இது வெளிக்கிளம்பியதாக ஏற்பட்டதோ, இது (எந்த) என்னால் தரிக்கப்படுகிறதோ, என்னிடத்திலேயே லயத்தை அடைகிறதோ, அந்த, தனக்கு வேறு அதிஷ்டானமில்லாதவனாய், ஸத்யமாயும் ஆனந்தமாயும் ஞானமாயுமுள்ள ஸ்வரூபத்தோடு கூடினவனாய் வியாபகமான அறிவுடையவனாய் இருக்கும் எனக்கு எப்பொழுதும் நமஸ்காரம்.

[நாமரூபங்களோடு கூடின பிரபஞ்சமானது தோன்றுவதற்கு முன் நாமரூபமற்று காரண அவஸ்தையான அவ்யக்தம் என்ற

மாயையில் அடங்கியும் அந்த மாயையும் பரப்பிரஹ்மத்துடன் ஒன்ருகவே லயித்தும் இருக்கும் ஸமயத்தில் அந்த பிரஹ்மத்தை சுத்தமான ஸத், சுத்தமான சித், என்று மாத்திரமே சொல்ல முடியும். மாயை வெளிக்கிளம்பும்போது அந்த பிரஹ்மமே ஈசுவரன் என்கிற பெயரை அடைகிறது. அந்த மாயையில் அடங்கியுள்ள முக்குணங்களாகிய ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவைகளில் ரஜஸ் மேலிடும்போது ஸ்ருஷ்டியும், ஸத்வம் மேலிடும்போது ரக்ஷணமும், தமஸ் மேலிடும்போது உபஸம்ஹாரமும், ஏற்படுகின்றன. ஆகையால் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரத்திற்கு விஷயமான பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாய், அதாவது அடிப்படை ஆதாரமாய், இருப்பது ஆத்மாவான சுத்த சைதன்ய ஸ்வரூபமான பிரஹ்மமே தான். கயிற்றில் தோன்றும் பாம்பு எதிலிருந்து உண்டாயிற்று என்று கேட்டால் கயிற்றிலிருந்து என்று தான் பதில் சொல்ல முடியும் அப்படியே அந்த பாம்பை இருக்கும்படிச் செய்வது எது என்ருலும் கயிறு என்றே சொல்லவேண்டும் பிற்பாடு வெளிச்சம் வந்த பிறகு அந்த பாம்பு மறையும்போது எங்கே மறைந்தது என்று கேட்டாலும் கயிற்றிலேயேதான் மறைந்தது என்று சொல்லவேண்டும். இவ்விதமாக அந்தப் பாம்பின் உத்பத்திக்கும், ஸ்திதிக்கும், மறைவுக்கும், காரணமாய் இருப்பது கயிறேயாகும் ஆனுலும் இந்த மூன்று தசைகளிலும் கயிறு தன் தன்மையைவிட்டுக் கொஞ்சமேனும் விலகாமல் எவ்வித மாறுதலையும் அடையாமல் எப்பொழுதும்போல் ஒரே மாதிரியாகவே இருந்து வருகிறது. அப்படியேதான் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாய், அது தோன்றி இருந்து மறைவதற்கு ஆதாரமாய், தான் தன் தன்மையான ஸச்சிதாநந்த நிலையிலிருந்து கொஞ்சமேனும் வழுவாமல் எவ்வித மாறுதலையும் அடையாமல் ஏகருபமாய் பிரஹ்மம் இருந்து வருகிறது. பிரஹ்மத்தினிடத்தில் பிரபஞ்சம் தோன்றுகிறதே, அதேமாதிரி பிரஹ்மம் தோன்றுவதற்கும் அதற்கும் அதிஷ்டானமாக இன்னொன்று உண்டாவென்ற ஸந்தேஹத்திற்கு இடமன்னியில் அதற்கு வேறு அதிஷ்டானம் கிடையாதென்பதையும் எடுத்துக்காட்டுகிருர். அந்தப் பிரஹ்மமே ஆத்மாவாயிருப்பதால் ஆத்மாவாகிய தனக்கு நமஸ்காரம் என்று சொன்னுல் பிரஹ்மத்தையே நமஸ்கரித்ததாகும் என்று தாத்பர்யம். மேலும் தன்னைத்தவிர பிரஹ்மம் வேறில்லாததினுல் தனக்கு நமஸ்காரம் செய்ய தன்னை விட வேறு பதார்த்தம் கிடையாதென்பதையும் காட்டுகிருர்.] (15)

सत्ताचित्सुखरूपमस्ति सततं नाहं च न त्वं मृषा
नेदं वाऽपि जगत् प्रदृष्टमखिलं नास्तीति जानीहि भोः ।
यत् प्रोक्तं करुणावशात् त्वयि मया तत् सत्यमेतत् स्फुटं
श्रद्धत्स्वानघ शुद्धबुद्धिरसि चेन्माऽत्रास्तु ते संशयः ॥ १६ ॥

ஸத்தாசித்ஸுகரூபமஸ்தி ஸததம் நாஹம் ச ந த்வம் ம்ருஷா
நேதம் வாऽபி ஜகத் ப்ரத்ருஷ்டமகிலம் நாஸ்தீதி
ஜாநீஹி போ: ।
யத் ப்ரோக்தம் கருணாவசாத் த்வயி மயா தத்
ஸத்யமேதத் ஸ்புடம்
ச்ரத்தத்ஸ்வாநக சுத்தபுத்திரஸி சேந்மாऽத்ராஸ்து தே
ஸம்சய: ॥

सत्ताचित्सुखरूपं-ஸத், சித், ஆனந்தம் என்பதை ஸ்வரூபமாயுடைய ஒரு வஸ்துதான், सततं-எப்பொழுதும், अस्ति-இருக்கிறது. अहं च-நானும், न-கிடையாது, त्वं-நீயும், न-கிடையாது. मृषा-இரண்டுமே வாஸ்தவமில்லை. इदं-இந்த, जगत् वाऽपि-ஜகத்தும், न-கிடையாது प्रदृष्टं-நன்றாக பார்க்கப்படும், अखिलं-எல்லாம், न अस्ति-இல்லை, इति-என்று, जानीहि भोः-அறிந்துகொள்ளும். मया-என்னால், करुणावशात्-கருணையினால், त्वयि-உம்மிடத்தில், यत् -எது, प्रोक्तं-சொல்லப்பட்டதோ, तत् -அது, सत्यं-ஸத்யமே. अनघ-பாபமற்றவரே, शुद्धबुद्धिः-சுத்தமான புத்தியுள்ளவராக, असि चेत् -இருப்பீரேயானால், एतत् -இதை, स्फुटं-நன்கு, श्रद्धत्स्व-நம்பும், अत्र-இந்த விஷயத்தில். ते-உமக்கு, संशयः-ஸந்தேஹமானது, मा अस्तु-வேண்டாம்.

ஸத், சித், ஆனந்தம் என்பதை ஸ்வரூபமாயுடைய ஒரு வஸ்துதான் எப்பொழுதும் இருக்கிறது. நானும் கிடையாது. நீயும் கிடையாது. இரண்டுமே வாஸ்தவமில்லை. இந்த ஜகத்தும் கிடையாது. நன்கு பார்க்கப்படும் எல்லாம் இல்லை என்று அறிந்துகொள்ளும். என்னால் கருணையினால் உம்மிடத்தில் எது

சொல்லப்பட்டதோ அது வாஸ்தவமே பாபமற்றவரே, சுத்தமான புத்தியுள்ளவராக இருப்பீரேயானால், இதை நன்கு நம்பும். இந்த விஷயத்தில் உமக்கு ஸந்தேஹம் வேண்டாம்.

[ஜகத்திலிருக்கும் ஸாதாரண அனுபவத்தை கவனிக்கும்போது, பொதுவாக மூன்று பதார்த்தங்கள் இருப்பதாக தெரிகிறது. அனுபவிக்கிறவனாய் சேதனனாய் இருக்கும் நான் என்பது ஒன்று. தன்னைப்போலவே அனுபவிக்கிறவனாகவும் சேதனனாகவும் இருந்துகொண்டு ஆனால் தன்னைவிட வேறாகத் தோன்றுகிற நீ என்பது இரண்டாவது. அனுபவிக்கப்படுவதாகவும் அசேதனமாகவும் உள்ள "இது" என்பது மூன்றாவது. ஸர்வவியாபகமான சைதன்யத்தை தேஹாதிகளுடன் சேர்த்து அவைகளால் அளக்கப்பட்டதாகச் செய்தால்தான் நான்என்ற வியவஹாரமும் நீ என்கிற வியவஹாரமும் ஏற்படும். அப்படியே அந்த ஸர்வ வியாபகமான சைதன்யத்தில் நாம ரூபங்களைக் கல்பித்து அறியப்படும் தன்மையை ஏற்படுத்தினால்தான் இது என்கிற வியவஹாரம் ஏற்படும். ஆகையால் இம்மூன்றுவித வியவஹாரமும் கல்பிதமேயானதால் வாஸ்தவமில்லை. இவ்வித வியவஹாரங்களுக்கெல்லாம் அதிஷ்டானமாயும் அவ்வியவஹாரங்களினால் கட்டுப்படாமல் அதீதமாகவே எப்பொழுதும் இருந்துவரும் சைதன்ய ஸ்வரூபம்தான் ஆத்மா. அதுதான் உன்னுடைய ஸ்வரூபம். என்று இவ்விதமாக குரு ஆத்ம தத்வத்தை உபதேசித்துவிட்டு ஆரம்பத்தில் உடனே அனுபவத்திற்கு வராததினால் நம்பித்தான் ஆகவேண்டுமென்பதை வற்புறுத்துகிறார். உலகத்தில் ஒருவர் மற்றவருக்கு ஏதேனும் விஷயம் எடுத்துச் சொன்னால், அதினால் தனக்கு கியாதி கிடைக்குமா, ஏதேனும் லாபம் கிடைக்குமா, அல்லது உலகத்தில் மதிப்பாவது கிடைக்குமா என்று எண்ணுவதுண்டு. இந்த கியாதி, லாபம், பூஜை, ஒன்றும் ஆத்மஞானிக்குத் தேவை இல்லை. தன்னால் அநுபவிக்கப்படும் ஆத்மாநந்தத்தை தன்னை அண்டினவனும் அடையட்டுமே என்ற கருணையைத்தவிர அவருக்கு வேறு எண்ணம் கிடையாது. தனக்கு அநுபவித்துத் தெரிந்த விஷயமாகவேயிருப்பதால் நிச்சயமாய் தான் சொல்வது ஸத்யம்தான் என்று உறுதி சொல்கிறார். தான் சொல்வதில் கொஞ்சமேனும் ஸந்தேஹமில்லாமல் நம்பி அநுஸந்தானம் செய்தால் சிஷ்யனுக்கும் அநுபவ ஸித்தமாக ஆகி அவன் கிருதார்த்தனாவான் என்று தைர்யமாய்ச் சொல்லுகிறார்.] (16)

स्वारस्यैकसुबोधचारुमनसे प्रौढानुभूतिस्त्वियं
दातव्या नतु मोहदग्धकुधिये दुष्टान्तरङ्गाय च ।
येयं रम्यविदर्पितोत्तमशिरःप्राप्ता चकास्ति स्वयं
सा चेन्मर्कटहस्तदेशपतिता किं राजते केतकी ॥ १७ ॥

ஸ்வாரஸ்யைகஸுபோதசாருமநஸே ப்ரௌடாநுபூதி ஸ்த்வியம்
தாதவ்யா நது மோஹதக்தகுதியே துஷ்டாந்தரங்காய ச ।
யேயம் ரம்யவிதர்பிதோத்தமஶிர: ப்ராப்தா சகாஸ்தி ஸ்வயம்
ஸா சேன் மர்கடஹஸ்ததேஶபதிதா கிம் ராஜதே கேதகீ ॥

स्वारस्यैकसुबोधचारुमनसे-தன் ஆத்மாநந்தத்தையே நன்கு அறிந்துகொள்ள வேண்டுமென்ற அழகான மனஸ் உடையவனுக்கே, इयं-இந்த, प्रौढानुभूतिः तु-பிரௌடானுபூதி என்பது, दातव्या-கொடுக்கப்பட வேண்டியது. मोहदग्धकुधिये-மோஹத்தினல் எரிக்கப்பட்டிருக்கும் கெட்ட புத்தியோடு கூடினவனுக்கோ, दुष्टान्तरङ्गाय च-தோஷமுள்ள ஹ்ருதயமுள்ளவனுக்கோ, न तु-கொடுக்கவே கூடாது रम्यविदर्पिता-எப்படியிருந்தால் நன்ருயிருக்குமென்று அறிந்த ஒருவனல் கொடுக்கப்பட்டு, उत्तमशिरःप्राप्ता-உத்தமமான சிரஸில் தரிக்கப்பட்டு, स्वयं-தானகவே, या-எந்த, इयं-இந்த, केतकी-தாழம்பூ, चकास्ति-பிரகாசிக்கிறதோ, सा-அது, मर्कटहस्तदेशपतिता चेत्-குரங்கின் கைப்பிரதேசத்தில் அகப்பட்டு விட்டதேயானல், राजते किं-பிரகாசிக்குமா ?

தன் ஆத்மாநந்தத்தையே நன்கு அறிந்துகொள்ளவேண்டுமென்ற அழகான மனஸ் உடையவனுக்கே இந்த பிரௌடானுபூதி என்பது கொடுக்கப்படவேண்டியது. மோஹத்தினல் எரிக்கப்பட்டிருக்கும் கெட்டபுத்தியோடு கூடினவனுக்கோ, தோஷமுள்ள ஹ்ருதயமுள்ளவனுக்கோ, கொடுக்கவேகூடாது. எப்படியிருந்தால் நன்ருயிருக்குமென்று அறிந்த ஒருவனல் கொடுக்கப்பட்டு உத்தமமான சிரஸில் தரிக்கப்பட்டு தானகவே

எந்த இந்த தாழம்பூ பிரகாசிக்கிறதோ, அது குரங்கின் கைப் பிரதேசத்தில் அகப்பட்டுவிட்டதேயானால் பிரகாசிக்குமா?

[எந்தப்பதார்த்தமாயிருந்தாலும் அதன் மஹிமையை நன்கு அறிந்தவன் அதைத் இன்னொருவனுக்குக்கொடுக்க உத்தேசித்தால் வாங்குகிறவன் அதன் பெருமையை அறிந்து ஸந்தோஷமாய் கிரஹித்து, ஆதரவாய் பரிபாலித்து ஆனந்தமாய் அனுபவிக்கக் கூடியவன் என்று தெரிந்தே தான் கொடுப்பது நியாயமாகும். அழகான கேசபாசத்தில் விளங்கவேண்டிய தாழம்பூவை குரங்கின் கையில் கொடுத்து அது அதை கசக்கி விட்டெறியும்படி யாரேனும் ரஸிகன் செய்வானா? அதேமாதிரி ஸகல வேதாந்த ஸாரத்தையும் உள்ளடக்கி, ஸ்வானுபவத்தினால் உணர்ந்த தத்வத்தை மற்றவர்களும் அனுபவிக்கவேண்டுமென்று கருணை யுடன் வெளிப்படுத்தி, இருக்கும் இந்த உத்தமமான கிரந்தத்தை அதன் ஸ்வாரஸ்யம் கொஞ்சமேனும் தெரியாத ஜனங்களிடம் கொடுத்தால் அது ப்ரயோஜனப்படமாட்டாது என்பது மாத்திரம் அல்ல. அவர்கள் அதற்கு துரர்த்தம் செய்து விடுவார்கள். அதைப்பார்க்கும்போது கிரந்தம் இயற்றியவருக்கே மிக்க வருத்தமேற்படும். ஆகையால் இந்த கிரந்தத்தைத் தக்க அதிகாரிகளுக்கே கொடுக்கவேண்டும். அதிகாரியல்லாதார் களுக்கு கொடுத்தால் ஸ்ரீமத் ஆசார்யாருக்கே அபசாரம் செய்த தாக ஆகும். அவ்வபசாரத்திற்கு இடமில்லாமல் ஆத்மக்ஞானத் தில் ஆசையுள்ளவனாய் சுத்த மனஸ்ஸுள்ளவனாய் இருப்பவ னிடமேதான் கொடுக்கவேண்டும்.] (17)

ப்ரௌடானுபூதி முற்றும்.



॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥


| ஸ்லோகம் | பக்கம் |
|---|---|
| **अ** | |
| अखण्डे सच्चिदानन्दे | 47 |
| अज्ञानं कारणं साक्षी | 71 |
| अज्ञानं चान्यथाज्ञानं | 35 |
| अज्ञानध्वंसकं ज्ञानं | 41 |
| अज्ञानध्वान्तविध्वंस | 63 |
| अज्ञानोच्छिष्टकरस्य | 62 |
| अतीतानागतं किंचित् | 12 |
| अत्यन्तमलिनो देहो | 5 |
| अथाघमर्षणं कुर्यात् | 6 |
| अनादिकल्पविधृत | 57 |
| अनेकवासनामिश्र | 59 |
| अन्ये पाषण्डिनः सर्वे | 25 |
| अन्वयव्यतिरेकाभ्यां जा | 3 |
| अन्वयव्यतिरेकाभ्यां स | 41 |
| अभयं सर्वभूतानां | 13 |
| अयमेकोऽवशिष्टोऽस्मी | 56 |
| अर्थाकारा भवेद्वृत्तिः | 29 |
| अहं ममेत्ययं बन्धो | 26 |
| **आ** | |
| आत्मनः सत्क्रिया प्रोक्ता | 65 |
| आत्मनि स्वप्रकाशाग्नौ | 10 |
| आत्मानात्मविवेकं च | 40 |
| आत्मानात्मविवेकेन | 16 |
| आत्मानात्मविवेचनाऽपि | 112 |
| आराधयामि मणिसन्निभ | 55 |
| **ई** | |
| ईश्वरो गुरुरात्मेति | 60 |
| **ए** | |
| एकद्वित्रिक्षणे वेवं | 82 |
| एवं वेदान्तकल्पोक्त | 67 |
| **क** | |
| कर्मशास्त्रे कुतो ज्ञानं | 24 |
| कार्यकारणवाच्यांशौ | 23 |
| किं न प्राप्तमितः पुरा | 108 |
| किमुग्रैश्च तपोभिः स्यात् | 45 |
| क्षणे क्षणेऽन्यथाभूता | 79 |
| क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं | 38 |
| **ग** | |
| गन्तव्यं किमिहास्ति | 106 |
| गीयते श्रुतिभिस्तस्य | 52 |
| गृहस्थो गुणमध्यस्थः | 44 |
| **च** | |
| चित्तं चिदिति जानीयात् | 33 |
| चित्तं चैतन्यमात्रेण | 31 |
| चिन्मात्रैकरसे विष्णौ | 20 |

| சுலோகம் | பக்கம் |
|---|---|
| **ज** | |
| जागरस्वप्नयोरेव | 72 |
| जागरेपि धियस्तूष्णीं | 74 |
| ज्ञानं दृग्दृश्ययोर्भानं | 37 |
| ज्ञानमेकं सदा भाति | 27 |
| ज्ञानाज्ञानविलासोऽयं | 4 |
| ज्ञेयवस्तुपरित्यागात् | 33 |
| **त** | |
| तच्चिन्तनं तत्कथनं | 89 |
| तर्पणं स्वसुखेनैव | 9 |
| तार्किकाणां तु जीवेशौ | 21 |
| त्रिगुणात्माशेषलोक | 59 |
| त्वमर्थविषयं ज्ञानं | 39 |
| **द** | |
| देहात्मधीवद्ब्रह्मात्म | 90 |
| देहाभ्यासो हि संन्यासो | 13 |
| देहो देवालयः प्रोक्तो | 11 |
| देहो नाहमचेतनो | 95 |
| द्वैतं मय्यखिलं | 94 |
| **ध** | |
| ध्यातृध्यानभावविज्ञानं | 66 |
| **न** | |
| न त्वं देहो नेन्द्रियाणि | 17 |
| नष्टे पूर्वविकल्पे तु | 81 |
| नाहं खादिरपि स्फुटं | 97 |
| नित्यस्फूर्तिमयोस्मि | 104 |
| निरञ्जनस्य किं धूपैः | 51 |
| निरावरणचैतन्यं | 58 |
| निर्द्वैतोस्म्यहमस्मि | 99 |
| निर्मलस्य कुतः स्नानं | 49 |
| निर्लेपस्य कुतो गन्धः | 50 |
| नैवेद्यमात्मलिङ्गस्य | 61 |
| **प** | |
| परिभ्रमन्ति ब्रह्माण्ड | 64 |
| परोक्षं शास्त्रजं ज्ञानं | 38 |
| पुण्यपापरजःसंगो | 56 |
| पूर्णस्यावाहनं कुत्र | 48 |
| प्रमाता च प्रमाणं च | 28 |
| प्रातः स्मरामि देवस्य | 2 |
| प्रौढप्रौढनिजानुभूति | 92 |
| **ब** | |
| ब्रह्माध्ययनसंयुक्तो | 43 |
| ब्रह्मानन्दजलेनैव | 58 |
| ब्रह्मानन्दाब्धिकल्लोल | 57 |
| **भ** | |
| भोक्ता सत्वगुणः शुद्धो | 43 |
| **म** | |
| मत्तोन्यन्नहि किञ्चिदस्ति | 100 |
| मनोमात्रमिदं सर्वं | 84 |
| मन्मनो मीनवन्नित्यं | 6 |

| ஶ்லோகம் | பக்கம் |
|---|---|
| मय्यस्मिन् परमार्थके | 102 |
| मुक्ताभिरावृतं सूत्रं | 79 |
| मौनं स्वाध्ययनं दानं | 11 |
| महामोहान्धकारेऽस्मिन् | 36 |
| **य** | |
| योऽहं पूर्वमितः प्रशान्त | 115 |
| **र** | |
| रजःसत्त्वतमोवृत्ति | 60 |
| रागादिगुणशून्यस्य | 62 |
| रूपाच्च गुणदोषाभ्यां | 78 |
| रूपादौ गुणदोषादि | 77 |
| **ल** | |
| लयविक्षेपयोः सन्धौ | 7 |
| **व** | |
| वस्तुस्थित्यनुरोधतः | 114 |
| वह्नितप्तजलं ताप | 76 |
| विविधब्रह्मसंदृष्टि | 63 |
| विशुद्धं केवलं ज्ञानं | 17 |
| विश्ववन्द्योऽहमेवास्मि | 64 |
| विश्वानन्दयितुस्तस्य | 52 |
| वृत्तिव्याप्यत्वमेवास्तु | 80 |
| वेदवाचामवेद्यस्य | 54 |
| वेदान्तश्रवणं कुर्यात् | 14 |
| **श** | |
| शक्यः सर्वनिरोधेन | 86 |
| शब्दशक्तेरचिन्त्यत्वात् | 15 |
| शब्दस्याद्यन्तयोः सिद्धं | 18 |
| श्रद्धालुर्ब्रह्मतां स्वस्य | 88 |
| श्रवणं तस्य देवस्य | 66 |
| श्रोतव्यं च किमस्ति | 110 |
| **स** | |
| स एव संसरेत्कर्म | 72 |
| संकल्पसाक्षि यज्ज्ञानं | 28 |
| स गृही यो गृहातीतो | 45 |
| सच्चिदानन्दकन्दाय | 1 |
| सत्ताचित्सुखरूपमस्ति | 118 |
| सदाचारमिमं नित्यं | 46 |
| सदानन्दे चिदाकाशे | 36 |
| समस्तवासनात्यागं | 61 |
| समाधिरात्मनो नाम | 66 |
| सर्वत्र प्राणिनां देहे | 8 |
| सर्वदुर्वासनाजालं | 68 |
| सर्ववेदान्तसिद्धान्तैः | 2 |
| सविकल्पकचिद्योऽहं | 84 |
| सविकल्पकजीवोऽयं | 83 |
| स्थूलवैराजयोरैक्यं | 19 |
| स्थूलो मांसमयो देहः | 69 |
| स्वात्मद्वैतवदेव | 106 |
| स्वारस्यैकसुबोध | 120 |





| | |
|---|---|
| ஸதாசாராநுஸந்தானம் | 1— 46 |
| நிர்குணமாநஸ பூஜா | 47— 68 |
| லகுவாக்ய விருத்தி | 69— 91 |
| பிரௌடாநுபூதி | 92—121 |
| சுலோகாநுக்ரமணிகை | i—iii |